உ

திருச்சிற்றம்பலம்.

திருநணு என்று வழங்[...]

# பவாநிகூடற் புராணம்.

இஃது

கோயமுத்தூருக்கடுத்த ஓராட்டுக்குப்பை
செட்டிபாளயம் மஹாவித்துவான் ம-ா-ா-ஸ்ரீ
வாசுதேவமுதலியாரவர்கள் மொழிபெயர்த்தது.

இதனை :

தேவாரப்பதிகம், புராணசாரம், பவானிப்
படம், இவைகளுடன் கோயமுத்தூர் வித்துவான்
மகா-ா-ஸ்ரீ கந்தசாமிமுதலியாரவர்களாலும், பவானி வித்
துவான், மகா-ா-ஸ்ரீ பாலபாரதி முத்துசாமி
ஐயரவர்களாலும், தில்லியம்பூர்வித்துவான்
ஸ்ரீ. வெங்கடராமஐயங்காரவர்களா
லும், ஆராய்ச்சிசெய்வித்து

கோயமுத்தூர் மகா-ா-ஸ்ரீ
தம்பியண்ண முதலியாரவர்கள் குமாரர்
மகா-ா-ஸ்ரீ
ப. குட்டியண்ண முதலியாரவர்களால்

சென்னபட்டணம்
பாஸ்ட்டர் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.
சித்திரபாநு-௵ ஆடிமீ.

## விளம்பரம்.



இப்புத்தகம் கோயமுத்தூரில் போரேகவுண்டர் ஷாப்பிலும் பவானி புஸ்தகக்கடையிலும் ஈரோடு புஸ்தகக்கடையிலும் என்னிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு

சித்திரபாநு௵, ஆடி௴ ௨௭௳. } ப. துட்டியண்ணமுதலியார்.

சாவுக்கார்.

கோயமுத்தூர்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்த சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# தேவாரம்



## திருநணா - பண் - காந்தாரம்.



திருச்சிற்றம்பலம்.

பந்தார்விரன்மடவாள்பாகமாநாகம்பூண்டெருதேறி
யந்தாரரவணிந்தவம்மானிடம்போலுமந்தண்சாரல்
வந்தார்மடமந்திகூத்தாடவார்பொழிலில்வண்டுபாடச்
செந்தேன்றெளியொளிரத்தேமாக்கனியுதிர்க்குந்திருநணாவே

நாட்டம்பொலிந்திலங்குநெற்றியினன்மற்றொருகைவீணை
யேந்தி, யீட்டுந்துயரறுக்கு மெம்மானிடம்போலு மிலைசூழ்கா
னி, லோட்டார்தருமருவிவீழும்விசைகாட்டமுந்தாழோசைச்
சேட்டார்மணிகளணியுந்திரைசேர்க்குந்திருநணாவே. (௨)

மங்கீர்மைகுன்றியழலால்வலிகுறையவழியுமுன்றிற்
செங்கீர்பரப்பச்சிறந்துகரியொளிக்குந்திருநணாவே. (அ)

மையார்மணிமிடற்றன்மங்கையோர்பங்குடையான்மனைக
டோறுங், கையாற்பலியேற்றகள்வனிடம் போலுங்கழல்கணே
டிப், பொய்யாமறையானும்பூமியளந்தானும்போற்றமன்னிச்
செய்யாரெரியாமுருவமுறவணங்குந்திருநணாவே. (கூ)

ஆடையொழித்தங்கமணேதிரிந்துண்பாரல்லல்பேசி
மூடுருவமுகந்தாருரையகற்றுமூர்த்திகோயி
லோடுநதிசேருநித்திலமுமொய்த்தகிலுங்கரையிற்சாரச்
சேடர்சிறந்தேத்தத்தோன்றியொளிபெருகுந்திருநணாவே. ()
கல்வித்தகத்தாற்றிரைசூழ்கடற்காழிக்கவுணிசீரார்
நல்வித்தகத்தாலினிதுணருஞானசம்பந்தனென்று
சொல்வித்தகத்தாலிறைவன்றிருநணாவேத்துபாடல்
வல்வித்தகத்தான்மொழிவார்பழியிலரிம்மண்ணின்மேலே. ()

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சங்கமேச்சுரர்-தேவியார்—

வேதாம்பிகையம்மை.

இது - பவானியென்னும்நதி - காவிரிநதியுடன் சேருமிட
மாதலால், பவானிகூடலெனப் பெயர் வழங்கப்படுகின்றது.



## சோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ச | கச | களறத்தேரு | கழறத்தேரு |
| கூ | உ0 | நாவல் | நாவால் |
| கரு | உ | புணரவைக்கெல்லாம் | அவுணர்கட்கெல்லாம் |
| கடு | கக | திளைசவுனக | திகழ்சவுனக |
| சுக | உக | கேட்டபொற் | கேட்டபோற் |
| சுரு | கஅ | பாசிளை | பாசிழை |
| சுஎ | கஉ | ணிதள்கடித் | ணிதழ்கடித் |
| சுஅ | அ | முடிபிழந்தன | முடிபிளந்தன |
| எகூ | உரு | குறியகர் | குறிகால் |
| அரு | கூ | பொக்கிமில் | பொக்கமில் |
| கூ0 | கரு | ரருடளைத்த | ரருடழைத்த |
| கூக | கக | நாரணவெனதிதுதி | நாரணவெனத்துதி |
| சுசு | ச | ரடையின்சே | ரடையினசே |
| க0ரு | உக | திழ்பொற்றீர்த்த | திகழ்பொற்றீர்த்த |
| க0சு | கசு | தனக | தமக |
| க0எ | கஎ | துயருளந்தவனை | துயருழந்தவனை |
| க0கூ | ரு | பாசிளை | பாசிழை |
| கக0 | ரு | கோலமாழிகை | கோலமாளிகை |
| ககஅ | உஉ | யழைத்தால் | யழைத்தா |
| கஉஉ | கஎ | டிதளொடுஞ் | டிதழொடுஞ் |
| கஉஅ | க0 | தாமகவளி | தாய்மகவளி |
| கஉகூ | கஎ | றருந்ததுப்பற்றுன் | றருந்தவப்பேற்றுன் |
| கருக | கச | மலற்கர | மலர்க்கர |
| கருரு | ரு | இன்னெறி | இந்நெறி |
| கருச | சு | பொன்னினறுங் | பொன்னிநறுங் |

## சோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௧௩௬ | ௧௩ | தாற்பத் | தார்ப்பத் |
| ௧௪0 | ௫ | வேந்தன்னகரின் | வேந்தங்நகரின் |
| ௧௪௨ | ௧ | றகமை | றகைமை |
| ௧௪௫ | ௧௨ | மலற் | மலர்ப் |
| ௧௫௧ | ௧ | கக்கர | சக்கர |
| ௧௬௨ | ௨௩ | பத்தியோ | சுத்தியோ |
| ௧௭௮ | ௨௨ | ஙித்தமாய்ச்சிவன் | ஙித்தமாஞ்சிவன் |
| ௧௮௪ | ௧ | தமாவத்தி | தமாதவத்தி |
| ,, | ௩ | வராுதி | வாருதி |
| ௧௮௫ | ௧௬ | களிற்றினன் | களிற்றினள் |
| ,, | ௨௨ | கதிரிலே | சதிரிலே |
| ௧௮௬ | ௧௬ | கறனெறி | கறநெறி |



## சாற்றுக்கவிகள்.

கோயமுத்தூர் வித்துவான்

கந்தசாமிமுதலியாரவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இட்டியண்ண லிட்டமுறுந் திருநண்ணு
வண்ணமெலா மியற்பாவல்லோர்
கிட்டியண்ணுந் திருந்துணர
வாசுதேவக்கவிஞன் கீர்வாணத்தை
யொட்டியண்ணு வமுதெனச்செய்தானதனைத்
தம்பியண்ண னுதவுஞ்சேயாங்
குட்டியண்ணனச்சியற்றிக் கரலிகித
வழுவகற்றிக் குறைதீர்த்தானே.

---

குணியமுத்தூர்க்கணக்குக்

கருப்பண்ணபிள்ளையவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நத்தூருங்கரதலத்தான் புகழ்வதரி
காவனஞ்சூழ் நண்ணுவூரின்
புத்தூருமமுதகதை வாசுதேவக்கவிஞன்
புகன்றனிந்நாட்
கொத்தூரும் பிழைதிருத்திக் கந்தசாமிக்
குரிசில் கொடுப்பக்கோய
முத்தூரு மந்நகருமுடையகுட்டி
யண்ணனச்சின் முடித்தான்மாதோ.

# சாற்றுக்கவிகள்.

பவானி இயற்றமிழ் வித்தவான்
**பாலபாரதி. ஸ்ரீ. முத்துசாமையராவர்களியற்றியது**
அறுசீர்க்கழிநெடிலாசிரியம்.

சிட்டரிதயங்குலவு மறைவல்லி
பங்கரருள் சேரிலந்தை
மட்டிணர் நணுமான்மியம்
வாசுதேவகவிவாணர் கோன்றீங்
கட்டியெனவோதிடு புராண
மச்சிட்டனன் கனிவுகூர்ந்து
குட்டியனைவேள் கோபமுத்தூர்
கொடம்பியணக் குரிசில்சேயே.

---

பவானியில் தாசில்தாரராயிருந்து இப்பொழுது
கவர்ன்மென்டில் உபகாரச்சம்பளம் பெற்றுவரும்
ம-ா-ா-ஸ்ரீ ஸ்ரீனிவாசையங்காரவர்கள் மைத்துனர்
இயற்றமிழ் வித்துவான்

**ஸ்ரீ. வெங்கடராமையங்காரவர்களியற்றியது.**

அறுசீர்க்கழிநெடிலாசிரியம்.

திட்டநண்ணப்பவானிகூடல் மான்மியத்தைச்
செழுந்தமிழிற் சிறக்கச்செய்தான்
கட்டுபண்ணிற்கனாந்தருகக்
கவிபொழியும் வாசுதேவக் கவிஞரேறு
கட்டமெண்ணி யடைந்தோரை
யாதரிக்குந் தம்பியண்ணன் களிக்கவந்த
குட்டியண்ணன் மற்றதனைக்
குவலயத்திலச்சியற்றிக்குணம்பெற்றனே.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பவாநிகூடற்புராணசாரம்.



சீர்பெற்றோங்கிய காவேரி நதியோடு பவாநிநதி கூடுமிட மென்று பொருள்படுகிற **பவாநிகூடல்** என்னுமித்தலத்திற்கு நண்ணாவூர் அல்லது திருநணா, தக்ஷிண அளகை, தக்ஷிண வதரிகாச்சிரமம், தக்ஷிணப் பிராயாகை, திரிவேணிசங்கமம், சங்கமக்ஷேத்திரம், தென்கயிலை, பராசர க்ஷேத்திரம், வக்கிரபுரம்முதலிய பலகாரணப்பெயர்களுள்ளன. தரிசித்தோர்க்கு யாதொருதீங்கும் நண்ணாத தலமாகையால் நண்ணாவூர் அல்லது திருநணா வென்றும்; அளகாபுரிவாசியாகிய குபேரன் வசித்துப் பூசித்துத் தன்பேர் இத்தலநாயகருக்கும் தலத்திற்கும் வழங்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொண்டதினாற் றக்ஷிண வளகையென்றும்; வசிட்டர், நாரதர், பராசர், வியாசர், பரத்துவாசர், கண்ணுவராதி மகரிஷிகள் வடபதரிகாச்சிரமத்தைப்போல வசித்துச் சித்திமுத்திகளை அடைந்த காரணத்தாலும், வேதரூபமாய் விளங்கிய புராதன இலந்தை மரமாகிய வதரி மரமானது தலவிருட்சமா யிருந்தலாலும், தக்ஷிண வதரிகாச்சிரமமென்றும்; கங்கை, யமுனை, சரஸ்வதி என்னுமஹா

ந்திகள் மூன்றும் சேரும் தலத்தை வடபிரயாகை யென்பது போல முறையேதத் சமானமாகிய காவேரி, பவானி, அமுதநதி என்னு மூன்று மஹாநதிகளும் சேருமிட மாகையாற்றக்ஷி ணப் பிரயாகை யென்றும்; அதே காரணத்தால் திரிவேணி சங்கமமென்றும்; சங்கம க்ஷேத்திரமென்றும்; சிவபெருமா னுக்கு வடகயிலையைப்போல மனோஹரமான தக்ஷிண க்ஷேத்திரமாகையாற் றென்கையிலையென்றும்; பராசர மு னிவர் அமிர்தலிங்கப் பிரதிட்டை செய்திருந்து பூசித்த தல மாகையால் பராசர க்ஷேத்திரமென்றும்; வக்கிராசுரன் கதிய டைந்தபொழுது தன்பெயர் இத்தலத்திற்கு வழங்கப்படவே ண்டுமென்றுவேண்டி வரம்பெற்றபடியால் வக்கிரபுரமெ ன்றும், வழங்கப்படுகிறது.

இத்தலமானது கொங்கு மண்டலத்திலே பத்மகிரி, சங்க கிரி, திருச்செங்கோடென்கிற நாககிரி, மங்கலகிரி, வேதகிரி என்னும் பஞ்சகிரி மத்தியப்பிரதேசமாய் பவானிநதி காவேரி நதியுடன்கூடும் கூடுதுறையாயும்; புராணங்கள் பதினெட்ட னுள் ஒன்றாகிய பிரமகை வர்த்தத்துள் உத்தரகாண்டம் எழு பதாம் அத்தியாயத்தில் புகழப்பட்டுள்ளதாயும்; சைவசம யாசாரியராகிய திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பாடி யருளப் பெற்றதாயும் இருக்கின்றது. இத்தல விசேடங்கள் பலவுள. அவைவருமாறு:

(க.) ஸ்ரீமஹாவிஷ்ணு வானவர் தேவர்களுக்குப்பகிர்ந்தளி த்து எஞ்சிய அமிர்தத்தை ஓர்குடத்திலிட்டு இத்தலத்தில்சதா வ

சித்திருக்கும் பராசமுனிவருக்குக் கொடுத்தருள அதையவர் இத்தலத்தில் நதிக்கரையி னோர்புரத்திற் புதைத்து வைத்துத் தவஞ்செய் திருந்தபொழுது அவ்வமிர்த குடத்தைக் கவரவ ந்த வக்கிராசுரன், தண்டகாசுரன், வஞ்சகாசுரன், வீராசுரன் என்னு மசுரர்களுக்குப் பயந்து முறையிடச் சிவபெருமான் தமதருட்சத்தியாகிய வேதாம்பிகை யிடத்துச் சண்டகாதினி வீரை, சயந்தி, சயமர்த்தனி என்னும் நான்கு துர்க்கையர்க ளை வரவழைத்து அவர்களால் வக்கிராசுரனாதியரை வதை த்து அத்துர்க்கைகள் நால்வரையும் நாற்றிசைக்குங் காவலாய் நிறுத்தியருளினர். சில நாட்சென்ற பின்னர்ப் பராசரமுனி வாாதியோர் அமிர்த குடத்தை யகழ்ந்தெடுத்தபோது அது கடினமாய்த்திரண்டிருத்தலை நோக்கி யதனையே அமிர்தலிங் கமாக்கிப் பூசித்துச் சித்திமுத்திகளை யடைந்தார்கள். அவ்வமி ர்தலிங்கம் மூலத்தானமாகிய சங்கமேஸ்வரருக்கு நிருதி திக் கிலிருக்கின்றது. அவ்வமிர்தகுடம் பதித்திருந்து அகழ்ந்தெடு த்த இடத்தில் அமுதநதியுற்பவித்துக் காவேரி நதியுடன் பவா னிநதி கூடுமிடத்திற் சேருகிறது இவ்வமிர்தநதி யந்தரவா கினி.

(உ.) அங்கதேயத்திலிருந்த எக்கியசருமன் என்னும் வேதிய னது குமாரனாகியதருமசன்மா வென்பவன் தருப்பை, சமித்து முதலியவை கொணரும்பொருட்டு ஓர்வனத்துக்குச் சில சிறுவருடன் சென்றகாலையில், அங்கு வைகானச முனிவரது புத்திரராகிய மாலுதான மகாரிஷி ஓர்புதரில் அருந்தவஞ்செ ய்திருந்தார், அவர்மீது சிறுவர்கள் கல்லும் மண்ணும்வாரி

எறிய அவர் சிறுவர்களைக்கல்லாகும்படி சபித்தார். அச்சாபவ சத்தால் தருமசன்மா கல்லானதை யுணர்ந்த அவன்றந்தையா கிய எக்கிய சன்மன் அக்கல்லை எடுப்பிவித்து இத்தலத்திற்குவ ந்து பஞ்சாக்ஷர மந்திரோச் சாரணத்துடன் தீர்த்தத்தில் மு ழுக்காட்டினன். உடனே கல்லுருப்போய் நல்லுருப்பெற்ற தருமசன்மன் அனேகங் காலம் வசித்துப் பூசித்துப் பின்னர் முத்தியையும் எளிதி லடைந்தான்.

(ரு.) இராஜரிஷியென்று புகழ்பெற்ற விசுவாமித்திர ரிஷி யானவர் வசிஷ்ட மகாரிஷியால் பிரம்மரிஷி என்று ஒப்புக் கொள்ளாத நிமித்தம் இத்தலத்திற்குவந்து பெருந்தவஞ் செ ய்து பின்னர் வசிஷ்டரால் பிரம்மரிஷி என்று புகழப்பட் டார்.

(சு.) காவிரி நாட்டையாண்ட தந்துவர்த்தனச்சோழனுக்கு ப்புத்திரப் பேறில்லாது வருந்துகையில் அங்குவந்த சங்கு கன்னன் என்னும் பெரியவரால் இத்தல விசிட்டத்தையுணர் ந்து இங்குவந்து பூசித்து ஆலயவலம் வரும்போது ஆலயத்தி லுள்ள தலவிருக்ஷமாகிய இலந்தை மரத்தினின்றும் ஒருகனி விழ அக்கனியைப் புசித்த அவ்வரசன் மனைவி கருப்பவதியா ய்க் குலவர்த்தனனென்னுங் குமாரனைப் பெற்றாள்.

(எ.) மருத்தன் என்னும் அசுரன் தேவர் முனிவர்முதலாயி னோருக்குப் பல இடுக்கணிழைத்த காரணத்தால் அவனை ச்சபிக்கலாற்றாது பிரமேந்திராதிகள் முறையிட அதற்கிரங்கிச் சிவபெருமான் உக்கிர வடிவங்கொண்டு அம்மருத்தாசுர

ஊை வதைத்தருளினர். அம்மருத்தாசுரன் கதியடையும் பொழுது தன் பெயரைச் சூடியருளவேண்டுமென்று பிரார்த்தித்தபடி இத்தல நாயகருக்கு மருத்துலிங்கம் என்று ஒரு பெயர் வழங்கப்பட்டுவருகிறது.

(சு.) சங்கமேஸ்வரஸ்வாமி சன்னிதிக்கு ஆக்கினேபார்ஸ்வத்தில் ஸ்ரீகாயத்திரிமந்திரமே சிலாவடிவமாய்க்காவேரிமேல் கரையிலிருக்கின்றது. அதற்குக் காயத்திரிசிலை யென்றுபேர், அதன் சமீபத்தில் காவேரியில், காயத்திரி தீர்த்தம், சாவித்திரி தீர்த்தம், சரஸ்வதி தீர்த்தம் என்னுந் தீர்த்தங்கள் மூன்று மிருக்கின்றன. இதை இக்காலத்தில் காயத்திரி மடுவென்று வழங்கப்படுகிறது. இது எண்ணிய வரங்களை எல்லாம் எண்ணியபடியே கொடுக்கத்தக்க புண்ணியத்தீர்த்தம். தேவர்களால் செய்யப்பட்ட தேவதீர்த்தமும், விஷ்ணுவினல் செய்யப்பட்ட சக்கிர தீர்த்தமும், சூரியனுல் செய்யப்பட்ட சூரிய தீர்த்தமும் சிறந்தவைகள். அன்றியும் காவேரியின் கீழ்கரையில் உரோமசரிஷி பூசித்த உரோமசலிங்கமும், உரோமச தீர்த்தமும் இருக்கிறது. காயத்திரிசிலையிலிருந்து காயத்திரிஜபம் செய்தால் எழுத்தொன்றிற்குக் கோடிபலனுகப் பலிக்கும். இத்தலத்தில் இராமன் அருச்சுனன் முதலாயினோர் மோக்ஷமுஞ் சத்துருஜயத்தை யடைந்தார்கள்.

(எ.) மதுகைடவர் என்பவர்கள் வேதத்தையபகரித்துக் கொண்டு பாதலத்தில் ஒளித்துக்கொள்ளஅவ்வசுரர்களை மகாவிட்டுணுவானவர் கொன்று அவர்களாற் கவரப்பட்டவேத

த்தை மீட்டருளியபோது வேதமானது தலையடி தெரியாமல் சிக்காயிருந்தமையால் பிரமேந்திராதிகள் வேண்டுகோ ளின்படி அம்மகா விஷ்ணுமூர்த்தியே வேதவியாசராயவதார ஞ்செய்து இத்தலத்திற்குவந்து பூசித்து அனுக்கிரகம்பெற்று இத்தலத்தின் வடக்கிலுள்ள மலையின்மீதிருந்து வேதத்தை நான்காகப் பகிர்ந்து காண்டம், அனுவாதம்,பிரஸ்நம் என்று வகை தொகைப்படுத்திக் கொடுத்தருள வேதமானது இக்கா லத்தும் அவ்வாறே நிலைபெற்றிருக்கின்றது. அம்மலையை அக்காரணம்பற்றி வேதகிரியென்று கூறப்படும். இதுவே இக்காலத்தில் ஊராச்சிக் கோட்டை மலையென்று வழங்கப் படுவது.

(அ.) பிரமதேவரானவர் தாமே படைத்த திலோத்தமை யின்மீதுமோகங்கொண்ட காரணத்தால் சிருட்டித்தொழில் நின்றுவிட இத்தலத்திற்குவந்து முனிவரால் பஞ்சாக்ஷர மந்தி ரோபதேசம் பெற்றுப்பூசித்துச் சிவபிரானைத் தரிசிக்கப்பெ ற்று அவரால் நேரே சிவ பஞ்சாட்சர மூலமந்திரத்தை உப தேசிக்கப்பெற்றுச் சிருட்டித்தொழிலை வழுவாதுநடத்தினர்.

(க.) கலிங்கதேயத்தில் இலிங்கி, விருடாகபி, என்றிரண்டு பேர் விபூதி ருத்திராக்ஷதாரிகளாய் வசிப்பவர்கள் ஒரு நாள் நந்தனவனத்தில் விளையாடும்போது ஒரு பெண்புறர்வுடன் ஆண்புறாச் சேருவதைப்பார்த்து இலிங்கி யென்பவன் இகழ் ந்ததை புணராத விருடாகபி, தன்னை இகழ்ந்ததாக நினை த்து அடிக்க, இலிங்கியும் அடித்து ஒருவர்க்கொருவர் சண்

டையிட்டிறந்தார்கள். அவர்கள் சிவசின்னந்தரித்த புண்ணி யவசத்தாலும் பவானிப்புராணங்கேட்டபுண்ணியவசத்தாலும் அந்தக்கலிங்க தேசத்தரசனுக்கும் மந்திரிக்கும் குமாரர்களாகப்பிறந்து பாராவதன் வலிமுகன் என்று பெயர்பூண்டு இத்தலத்தையடைந்து வசித்து முத்திபெற்றார்கள்.

(கo.) கலிங்க தேசாதிபதியாகிய சுதாமனென்பவனதுகுமாரனாகிய விஸ்வதாமன் என்பவன் வேட்டையாடிக்கொண்டு வரும்போது தூரத்தேகண்ட ஒரு பசுவை மானென்று நினைத்துக் கொன்றுவிட்டனன். அது பசுவென்றுணர்ந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும்போது அவன் நல்வினையாற் கண்ணுவ மகாரிஷி எதிர்ப்பட அவரால் இத்தல மேன்மையுணர்ந்து காயத்திரிசிலையிலிருந்து பஞ்சாக்ஷர ஜெபம் செய்த புண்ணியவசத்தால் அக்கோஹத்தி தோஷம் நீங்கி அனேகம் பணிவிடைபுரிந்து தன் தேயத்திற் சென்றரசாண்டிருந்தான்.

(கக.) அவந்தி தேசத்தில் சங்கோசன் என்னுங்கொடும்புலையன் இத்தலபுராணத்தைக்கேட்டு இத்தலத்தின்பேரில் விசுவாசியாயிருந்தாலும் புலைக்குலப் பழக்கத்தால் அரசனரண்மனையிற்றிருட, அவனை அரசன் சிரச்சேதம் செய்யும்படி விதித்தான். அங்ஙனமே கொலையாளர் கொலைக்களத்தில் அச்சங்கோசனை வெட்டும்பொழுது அவன் பவாநிபுரவாசனே? ரக்ஷிக்கவேண்டுமென்று சொன்னதினால் வெட்டப்பட்டகத்தியானது வெட்டாமல் அவன்கழுத்தில் மாலையாய்விழுந்தது. பின்னர் அப்புலையன் சிவகடாட்சத்தால் கதியடைந்தான்.

(கஉ) இந்நகரத்தில் வசித்த பிங்கலையென்னும் அழகிய விலைமாது தினம் ஒன்றிற்கு நூறு பொன்தருபவரையே சேர்வதென்னும் பிரதிக்கினையோடு வாழுங்காலத்தில் சுனந்தனன் என்னும் வணிகன் அவள்பேரில் மோகித்துத் தன்னிடத்தப்போதிருந்த தொண்ணூறு பொன்னுடன் சென்று அவளை வேண்டினபொழுது அவள் குறைந்த பத்துப்பொன்னும் சேர்த்துக் கொடுத்தாலன்றி இணங்கேனென்று மறுக்க அவ்வணிகன் அக்குறைப்பொன்னுக்காக அன்றிரவெல்லாம் வருந்திமுயன்றும் அகப்படா தொழிந்தமையால் அவன்விடிந்தவுடன் நினைத்த வரமருளத்தக்க திரிவேணிசங்கமதீர்த்தத்தில் சென்று மறு ஜன்மத்திலாயினும் அவள் தனக்கு மனைவியாகவர வேண்டுமென்று வீழ்ந்துயிர்விட்டான். அவ்விலைமாதும் அவ்வாறே அத்தீர்த்தத்தில் சென்று மறுஜனனத்தில் அவனுக்குத் தான் தங்கையாக வரவேண்டுமென்று வீழ்ந்துயிர்விட்டாள். இவ்வாறுமாறாக விரும்பிய அவ்விருவ ரெண்ணமும் தப்பாது நிறைவேறும்பொருட்டு அவர்கள் ஒரேதாய் வயிற்றில் புராக்களாகப்பிறந்து அனேகநாள் ஒன்றாகக் கூடிவாழ்ந்திருந்து பின்னர்க் கதியடைந்தார்கள்.

இன்னும் இத்தல மேன்மைகள் அளவிறந்தவைகளிருக்கின்றன. அவற்றைப் புராணமுகத்தானும் பெரியோர் வாக்கானு முணர்க.

இவ்வாறு சிறப்புற்றோங்கிய இத்தலத்தில் யாவராயினும் நல்ல சத்பிராமணருக்கு அன்னதானஞ்செய்தால் அவர்கள்

உண்ட அன்னத்தின் அவிழ் ஒன்றுக்கு அனந்தங்காலமாகக் கயிலாயத்தில் வாழ்வார்கள், சுவர்ணதானம், வஸ்திரதானம், பூதானம், கோதானம் முதலான தானங்கள்செய்வோர் விஷ்ணுப் பிரம்மேந்திராதி பதவிகளைப்பெறுவார்கள். காசி காஞ்சி அவந்தி முதலிய ஸ்தலங்களில் செய்யும் தானதருமங்களை இத்தலத்தில் செய்தால் அவைகள் ஒன்று அனந்தானந்தமாய் விர்த்தியாகும். இத்தலத்தில் ஒருநாள் உபவசித்தால் அது சாந்திராயண முதலிய மகாவிரத பலனைத்தரும். இச்சங்கமுகத் தீர்த்தக்கரையில் சிரார்த்தாதி பிதிர்கடன்களைச்செய்து திலதர்ப்பணஞ் செய்தால் திலம் ஒன்றுக்கு அனேக யுகங்களாகப் பிதிர்கள் சுவர்க்கத்திலிருந்து மகிழ்வார்கள். ஆலயத் திருப்பணிசெய்து திருவிழாவாதிகள் நடத்துவோர் அடையும்பலம் ஆதிசேடனாலும் சொல்லத்தரமல்ல, ஆகையால் இச்சிறுவசனத்தில் சுருக்கி எழுதப்பட்டதென்றுணர்க.

பவாநிகூடற் புராணசாரம்

முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பவாநிகூடற் புராணம்.

## பாயிரம்.



### விநாயகர்வணக்கம்.

மாமலர்க்குவளையொண்கண்மறைக்கொடியொருபால்வைகுந்
தேமலர்வதரிமூலச் சிவபரஞ்சுடரைவாழ்த்தக்
காமலர்க்கரத்தி னூலங் கரத்தனையொருபந்தாடும்
பூமலர்களிற்றின்செய்ய பொன்னடிவணக்கஞ்செய்வாம். (க)

சுற்றியானைபுரந்திடமேச் சுதன்கால்புரத்தைத்துரந்தசெங்க
ணெற்றியானைமுகன்வதரி நிழலோன்றலமான்மியநிகழ்த்தப்
பத்தியானந்தருகவுயர் பரமஞானப்பொருள்பணிக்குஞ்
சத்தியானை முகவனிரு சரணமெமது தலைக்கொள்வாம். (உ)

### நடேசர்துதி.

படித்துநான்முகத்தோனு முனிவருங்கண்ணருவிசொட
பணியச்செப்புட்
கொடித்துழாயனுமமரர் கோமானுமடனந்தச்
குரவைமூழ்கத்

தடித்துநேர்மருங்குன்மலைக் கொடியுவகைபூப்பவொளி
தழைக்கமன்று
ணடித்துவேதாந்தமுடிக் கெட்டாதபராஞ்சுடனா
நாடல்செய்வாம். (ங)

சங்கமேசர்துதி.

பண்ணருமறையோனும் பாலாழிதுயின்றோனும்
படிவம்வேறாய்
விண்ணடிமண்ணிடந்துங் காண்பரியபேரொளியாய்
மெய்யன்புள்ளோ
ருண்ணும்பூரணமாய்ப் புவனசராசரவுயிருக்
குயிராய்ஞானக்
கண்ணகிண்ணவில் வீற்றிருந்தசிவக்கொழுந்தைக்
கருத்துள்வைப்பாம். (ச)

அழலானவிழியின்மதன் புரம்பொடித்து
முப்புரந்தூளாக்குமூரற்
றழலானையாணிளைகள் செவிமடுப்பவின்னிசைக
டயக்குஞ்செவ்வேய்ங்
குழலானைக்கொடியாகக் கொண்டானைக்கூற்றினுயிர்
குடித்தசெம்பொற்
கழலானைக்கனியிலந்தை நிழலானைப்பிறவியறக்
கருதிவாழ்வாம். (ரு)

வேறு.

பொங்குபொன்னிபவானிசூழ் புகழ்நணுவமர்ந்த
மங்கைநாயகிமகிழ்ந்துநா லெட்டறம்வளர்த்த
செங்கைநாயகிவேதநாயகி சிவமுணர்ந்தோர்
தங்கணாயகிபங்கது சங்கமலிங்கம். (௬)

வேதநாயகிதுதி.

பண்பெற்றமறைக்கிழவன் கையாறக்கடுங்கால
ட்டார்காலாற
வெண்பத்துநான்குநூ றுயிரந்தா யருஞ்சுமக்கா
திழைப்பிங்காறத்
தண்பெற்றபெருங்கருணை யதுகொழிக்குங்கடைக்கணருள்
தந்தாட்கொண்டென்
புண்பெற்றபவந்துடைத்த வேதநாயகிமலர்த்தாள்
போற்றல்செய்வாம். (௭)

விநாயகர்துதி.

நல்லவைநீடி மல்கத் தீயவைநலிய நாயேன்
சொல்லவை நல்லோர்சூழல் துலங்கிடத் திருநணுவாழ்
வல்லபையிடத்துவைத்த வாரணமுகவன் றெய்வப்
பல்லவமருட்டும் பைம்பொற் பதயுகம்பணிதல்செய்வாம். (௮)

முருகக்கடவுள்துதி.

உருக்கரத்தினயிலாழி யவன்கணுநான் முகன்சிரமு
முயர்வான்செல்வத்

தருக்கரத்தினிரைகளும்வேய்ந் தவனுதற்கணுதித்து
நிசாசரர்கவாய
செருக்கரத்தி னகங்கலங்க வுலகமெலாமகிழ்ந்துகளி
சிறப்பச்செய்ய
திருக்கரத்திரெருதனிவேற் படைவாங்கு
முருகன்மலர்த்திருத்தாள்போற்றி. (கூ)

சுரகண்டேசர்துதி.

எரிகண்டதிரணமென வல்வினையும்பல்பிணிகளெனைத்தும்நீற
வரிகண்டசுதைநுகரும் மரசெனப்பேரழகுமுயரறிவுமோங்கப்
புரிகண்டமுன்னூலுமணிமார்புந்திருவடிவும்பொலிந்துவைகுந்
திரிகண்டசுரகண்டமாதேவன்றிருத்தாளெஞ் சிரத்தின்வைப்பாம்.

வயிரவக்கடவுள்துதி.

பொருதலையுகளும்வேணிப் புனிதனே பரமென்றுள்ளங்
கருதலையயநீயென்னக் குடிலையுங் களறத்தேரு
வொருதலையுகிராற்கிள்ளி யும்பர்மாலுதிரம் வாங்கும்
விரிதலைச்சூலச்செங்கை விமலனை வணக்கஞ்செய்வாம். (கக)

தக்ஷிணாமூர்த்திதுதி.

நிறைமதிமுகமு முக்கணுமூரல் நிலவுசெவ்
வாயுமீரிரண்டு
நறைமலர்க்கரமுஞ் சிவமணிவடமும் ஞானமுத்திரையுமாய்
நால்வர்க்

கறநெறியுணர்த்தி யருள்செய்துகல்லா லணிநிழலினிது
வீற்றிருந்த
மறைமுதல்நடுவீ றறியொணுஞான வடிவினைக்கருத்தினில்
வைப்பாம். (கஉ)

## திருநந்தீசர்துதி.

பணியுந்திங்களும் பகையறப்புனைசிவபரஞ்சுடர்த்திருமுன்றிற்
றணியுநெஞ்சராய்த் தாழ்ந்திடும்வானவர் தடநெடுமுடிமோலி
மணியுங்கற்பக மாலையுஞ்சிந்திட வந்துதாக்கிய செங்கை
யணியும்வேத்திரப்படையுளநந்தியெம்மடிகள்சேவடிபோற்றி.

## சண்டேசர்துதி.

வெள்ளியங்கடவுளோதிமந்தேட மிளிர்முடிக்காட்டிடைநாகப்
பள்ளியன்காத்த பசுக்குலங்கறந்த பாற்கலசங்களைத்தாளாற்
றள்ளியதாதைவெய்யதாளிணையைத்தடிந்தொருமடந்தைபங்காள
ரொள்ளியகமலத்திருவடிநீழலொன்றினேனடிபணிந்துய்வாம்

## சூரியமூர்த்திதுதி.

மாயிருஞாலங்கோத்த வல்லிருட்படலம் வாங்கி
யாயிரங்கரத்தாற்றைவந் தனைத்துயிர்க் கறிவீந்தக் பாற்
சேயிருவிசும்புபோற்றுந் திருநணுவுடையான் செல்வக்
கோயில்வாழிரவிப்புத்தேள் குரைகழல் வணக்கஞ்செய்வாம்.

## ஆதிகேசவப்பெருமாள்துதி.

அஞ்சிறைவண்டினங்குழுமி யலம்பமுகை யுடைந்துமட்
லவிழ்ந்தசெம்பொற்

கஞ்சமகளினிதுறையு மணிமார்பும்வனமாலை
    சமழந்தண்டோளும
பஞ்சவிதப்படைக்கரமு மணிமுடியும்பார்முழுது
    மளந்தபைம்பொற்
செஞ்சரணவிணைமலரும் நினைந்தாதிகேசவனைத்
    தியானஞ்செய்வாம். (கசு)

திருநாவுக்கரசுநாயனார் துதி.

அல்லயிற்சூலப் பொருபடைத்திருக்கை யமலனைதருளினாற்
    கொடிய
விடலையிற்றிய வஞ்சகவமணர் வீக்குகற்றாணொடு
    மிட்ட
கட்டலையும்பிறவிக் கடலையும்பஞ்சாக் கரவருட்பாதையிற்
    கடந்து
நடலைவாழ்வொழித்துமுத்திவாழ்வடைந்தாவினுக்கரையர்தா
    டொழுவாம். (கஎ)

திருஞானசம்பந்தநாயனார் துதி.

பொய்கைவாய்த்திருத்தோணி புரத்தமர்ந்தாரொடுஞ்சயிலப்
    புனிதப்பாவை
கைகளாற்றிருமுலைப்பால் கறந்தூட்ட வமுதுண்டு
    கடல்சூழ்வைய
முய்யவான்சைவநெறி தழைத்தோங்க வமணிருள்போ
    யொழியச்சிர்சால்
வையகாடேற வருள்பொழியுங் கவுணியர்கோன்
    மலர்த்தாள்போற்றி. (கஅ)

## சுந்தரமூர்த்திநாயனார்துதி.

நட்டதலர்கமல முகிண்முலைக்கனிவாய்த் தண்ணகைக்
    கரியமென்கூந்தல்
வடத்தளிருதரமரகதப்பசுந்தோண் மதரரிவிழிமலை
    மடந்தை
யிடத்திறையவனை யிருபதஞ்சிவப்ப விரவினிற்
    பரவைபாற்றூது
நடத்தியவாரூர்ச் சுந்தரப்பெருமா னணைமலர்ச்சேவடி
    தொழுவாம். (கக)

## மாணிக்கவாசகர்துதி.

பெருகியுவட் டெழச்சொரியுந் திருமுகமுங்கரநான்கும்
    பிறையூர்கற்றை
விரிகிளர்வேணியுங்குனித்த திருத்தாளும் பேருணர்வின்
    விளைந்தவன்பாற்
பருகியருளானந்தக் கண்ணீருமஞ்சலியும்
    பரிவுமாகி
யுருகியடி நிழல்சேர்ந்த வாதவூரடிகள்பத
    முளத்துள்வைப்பாம். (உ0)

## அறுபத்துமூவர்துதி.

பத்தியினாற்பாவனையாற் பரியவயிராக்கியத்தாற்
    பரிவாலுண்மைச்
சித்தநிலையொருமையினாற் றிருப்பணிகள் செய்வதினாற்
    சேர்ந்தசித்த

சுத்தியினலத்துவித சுகானந்தவடிவுடைய
 துணைத்தாணிழன்
முத்திபெறு மறுபத்துமூவரடி யார்க்கடிமை
 முயன்றுவாழ்வாம். (உக)

## குருவணக்கம்.

கந்தனையமலர்க்கொன்றை வேணியுமான் மழுவுநுதற்
 கண்ணுங்கோடி
யிந்தனையதிருக்கயிலை யிருக்கையுநீத் தெழுந்தருளி
 யிரங்கவண்டார்
கொந்தலர்சூழாவடுதண் டுறைமேவிக்கருணையலை
 கொழிக்குநோக்கந்
தந்தெனையாட் கொளுந்திருச்சிற் றம்பலதேசிகனை
 யகத்தவிசின்வைப்பாம். (உஉ)

## தலவடியார்துதி.

மங்கலஞ்சேர் திருநணுவுடையானை யுயர்வேத
 மடந்தைபாகச்
சங்கமாயகனையிர வும்பகலும் வழிபாடுதணவா
 தாற்றிச்
செங்கைமலர் குவித்திறைஞ்சிச் சினகரத்தைவலஞ்சூழ்ந்து
 திருத்தொண்டேத்தும்
பொங்குபுகழ் வேதியர்கள்முதலாய சைவர்களைப்
 போற்றல்செய்வாம். (உ௩)

மருவலருந்திருவதரி வனத்துறையுந் தனிமுதலின்
வடிவங்காட்டு
முருவலர்பொற் கண்டிகையும் வெண்ணீறுஞ்சாதனமு
முவந்தவேடப்
புரவலரைப் பகலிரவும் வேதநாயகிபாகன்
பொன்னங்கோயிற்
றிருவலகுப் பணிமுதலாந் திருப்பணிகள்புரிபவரைச்
சிந்தைசெய்வாம். (௨௪)

அவையடக்கம்.

பைந்தமிழ்நூல் வழியொன்றுந் தெரியாதசிறியேனைப்
பவானிகூட
லெந்தைபிரா னருளீர்ப்பச் சங்கமசேத்திரம்புகுந்தே
னெனையங்குள்ள
புந்தியுளோரிந்நகர் வடமொழியைத் தென்மொழியாற்
புரிநீயென்ன
வந்தவருள் தலைக்கொடியா னுய்வதற்கோ
ருறுதியென வகத்துளெண்ணி. (௨௫)

மாயவனுமலரோனு மண்ணிடந்தும் வான்பரந்தும்
வரம்புகாணு
நாயகன்வாழ் வதரிவன மகிமையையா யிரநாவல்
நாகர்வேந்தன்
நேயமொடுபகலிரவாய் நிகழ்த்தினுமோயா
வகண்டநிறைவையேழை

யாயவென்றன் புன்ருவிற்சொலப்படுமோ வெனினுமென
தாசைகேளா. (உசு)

வேறு.

மதாரிநெடுங்கட் டிருமகள்கொழுனன் மாசுணப்பாயலிற்
றுஞ்சு
மதிரலைத்திருப்பா லாழியைச்சுணங்க னருந்திடப்
புகுந்ததுபோலுங்
கதிர்மதியுரிஞ்சுங் திருமதிற்புறம்பு காவிரிபவாநிசூழ்
கிடந்த
வதரியம்பதிமான் மியஞ்சொல்வா னடியேன் மனத்திடை
கிளைத்ததுமன்றே. (உஎ)

ஒள்ளொளிபரப்பி யுலகெலாம்விளக்கு முவாமதிக்
கடவுளின்முன்னர்
வெள்ளெனச்சுடரும் வெருளுநீத்தேகி மின்னிடுமின்மினி
போலுந்
தெள்ளுமுத்தமிழை மாசறவுணர்ந்த திருநறு
விமலனுக்குள்ளன்
புள்ளநாவலர்முன் பேதையேன்புன்ற வுரைத்திடும்
புன்றமிழ்மாதோ. (உஅ)

சோதமகரயாழ்நரம்பொழுக்குந் தம்புரு
நாரதரமுத
தேமார்விமலன் செவியிடையண்டங் கிழிபடமுழங்கிய
துடித்தி

யோதையும்புகல்போன் மொழிந்துளோர் தமிழ்த்தே
　　னுண்ணுமவ் வலம்புரிக்குழைதாழ்
காதினுக்கெளியேன் புன்றமிழ்மொழியுங் கருணையிற்
　　புகுந்திடுமென்றே. (உக)
மன்றுளோருவப்ப வெழிலிமுந்நீரின் மாசுநீத்துதவல்போல்
　　யான்சொல்
புன்றமிழ்வதரி புரவனமகிமை பொருந்தலாற்
　　போதமிக்குணர்ந்த
நன்றியோர்குற்ற முளவெனினீக்கி நலமெனக்கைக்கொள்
　　வார்கற்றோ
ரென்றிடுந்துணிவா லிந்நகர்மகிமை யினிதெடுத்தியம்பயா
　　னமைந்தேன். (௩0)

முதனூல்.

பெருமையிற்சிறந்த புராணமூவாறுட்
　　பிரமகைவர்த்தனமென்னு
மருமைசால்புராணத் துத்தரகாண்டத்
　　தெழுபதாமத்தியாயத்துட்
குருமணிகொழிக்கும் பொன்னியிற்பவானி
　　கூடியசங்கத்துாப்பண்
மருமலர்வதரி காவனமகிமை வரன்முறைவிளங்கிய
　　தன்றே. (௩க)

பதிகம்.

தன்னிகரில்லா நைமிசாரணியந் தங்கிய
　　சவுனகாதியருக்

குன்னருஞ்சுதன் வரன்முறைவழுவா துணர்த்து
மான்மியவரலாறும்
பொன்னிறைதருவச் சிரவணன்வந்து புனிதனைப்
பூசனைபுரிந்து
நன்னகர்கண்டு தன்றிருநாம நாட்டியநன்னலப்
பேறும். (௩உ)

பரம்பொருளுணர்ந்த பராசரனமுதம்
பதிதரு சிவக்குறியாக்கி
வரம்பெறவழிபட் டருந்தவம்புரிந்த வளமுமம்
மருந்தினைக்கவர்வான்
கரந்தவன்வந்த வவுணரைத்தர்க்கா கன்னியருசித்துயிர்
கவர்ந்தப்
புரந்தனிறைன்கு திசைக்குநற்காவல் புரிந்திடும்
புண்ணியகதையும். (௩௩)

வக்கிரன்பொருதா ருயிர்துறந்தீசன்
வண்பதமன்னியவாறு
மிக்குயரமுத விலிங்கதாபனமும் விதித்திடு முறைமையும்
வினைதீர்
பொக்கமில்மாறு தானமாமுனிவன் புகன்மையுந்
தருமசன்மன்றன்
றெருக்கவெஞ்சாபந் தொலைத்தருள்பெற்ற தொன்மைசால்
புண்ணியப்பேறும். (௩௪)

ஒன்னியவிசுவா மித்திரன்பிரம
யோகியாநலனுமோன் வொளிகா

லள்ளிலெநெடுவேற் றந்துவர்த்தனன்பே
றடைந்ததும் புணரவைக்கெல்லாம்
வள்ளலாமருத்தன் காதையுமாயோன்
சக்கரதீர்த் தத்தின்வளனு
முள்ளருங்காயத் திரிசிலெமாண்பு
முத்தமவேத வெற்பியல்பும். (ருரு)

மலரயனடைய வரம்பெறுவளனும்
வானுதற்பிங்கலெ யென்னும்
விலெமகள்பெற்ற மேன்மையுஞ்சூதன்
விளம்பிடச் சவுனகராதி
யலகின்மாதவத்தோர் மகிழ்ச்சியான்வதரி
யடவியை யடைந்துமாமேருச்
சிலெயணிகரத்தெம் மடிகளேப்பூசை
திருத்தியமேன்மையின் சிறப்பும். (ருசு)

மதித்தவிவ்வகைய சருக்கமூவாருய்
வண்கவிதொளாயிரத் தொன்ருய்
முதற்பகர்வடநூல் பெயர்த்தருந்தமிழான்
மொழிந்தனன் வளந்தருபவானிப்
பதித்திருமகிமை பரமனதருளாற்
பவுத்திரவரநதி குலத்தி
லுதித்தவன்வாசு தேவன்முத்தமிழ்கற்
றுயர்ந்தவர் செவிக்கமுதென்ன. (ருஎ)

பாயிரமுற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நைமிசாரணியச் சருக்கம்.

## புராண வரலாறு

மன்றுளோன் றிரு வடிமலர்வணங்கி யைம்புலனை
வென்றுளோர் சகமாயையை வேரறவெறிந்து
கொன்றுளோர்சிவக் குறிப்பெனுங் குறைவிலாநிறைவில்
நின்றுளோர்தவ நிலைபெறு நைமிசாரணியம். (க)

மானைவைத்தலால் வன்னியை வளர்த்தலான் மகத்தால்
வானவெண்பிறை சுமத்தலான் மாரனைத் தெறலாற்
றேனலர்ந்த பூங்கொன்றை நீரோந்தலாற் றெய்வ
ஞானநாயக னொத்தது நைமிசாரணியம், (உ)

வேதமங்கல வோதையும் விழுமியசைவ
போதநூல்பயின் முழக்கமும் புராணவாரமுத
கீதமுந்திரு வானவர்துந்துமி கிளர்க்கு
நாதமுந்திசை விழுங்கிய நைமிசாரணியம். (ங)

மாவலம்புதண் மலர்ச்சினை மரந்தொறுங்கிள்ளை
பூவைநாகணைப் புட்குழாங்கேள்வியின் புணர்ப்பா
லோவிலாகமப் பொருளெடுத் துரைத்திடுங் குதலை
நாவழங்கிய தொனியது நைமிசாரணியம். (ச)

அரியநாண்மலர்த் தருக்கள்வாய்த் தளிரயின் றருக்கன்
பரியின்வெவ்விடாய் தணிவன பரந்துசூழ்ந்திமைய
கிரியைமூடிய பனியெனக் கேள்கிளர் சுவர்க்க
புரியைமூடுவ மகத்தெழுமாகுதிப் புகையால். (ரு)

ஏமவண்கிரி வளைந்துபோ யெறிந்தலைபுரளு
நாமநீர்க்கடல் வழிகொடு நைமிசாரணிய
வோமசாலையைத் தினம்வலம் வருதலாலுடன்மேற்
றாமசாமமுநீங்கிலன் வெண்மதித் தோன்றல். (சா)

இனையவொப்பருங் கடவுண்மாவனத்திடை யிருப்போர்
வினையைவேரற வென்றவர் வெண்ணிலாக்குழவி
புனையுமீசனே பொருளலால் வேறிலையென்ன
நினையுநெஞ்சர்தம் முயிரெனயாவையு நினைப்பார். (எ)

ஆய்ந்தநுண்பெருங் கேள்வியோரறுவகைப் பகையைக்
காய்ந்தநெஞ்சினர் கனிவொடு கமண்டலதண்ட
மேந்துசெங்கைய ரிழிவுறுமுலகியல் பனைத்தும்
வாந்திசெய்திடும் பொருளெனக் கண்டிடு மனத்தார். (அ)

இப்பெருந்தவர் குழாத்தொடு மிருவினைப்பாக
மொப்பநோற்றுநோற் றருளிடு முயர்சிவஞான
வைப்பெனத்திகழ் சவுனகமாமுனி யிருக்கைக்
கற்புதத்தனிச் சூதனுங்கொருதின மடைந்தான். (கூ)

வந்தமாமுனிக் கெழுந்தெதிர் மகிழ்ச்சியான்முகமன்
றந்துவெங்கையி னதழ்விரித்திருத்தியுட் டயவான்

முந்துபாத்திய வருக்கிய முதலியவுதவிக்
கந்தமூல பலாதிகள் கனிவுகூர்ந்தருத்தி. (கo)

மற்றுமாங்குள முனிவர்க ளிருடியர்மருங்கு
சுற்றிவேறுவே றிருந்திடத் துகளறுத்துள்ள
முற்றும்வைதிகச் சவுனகர்முதலினோர் விடையப்
பற்றகற்றியசூதனைப் பார்த்திவை பகர்வார். (கக)

ஞானந்தானுருக் கொண்டெனநைமிச மென்னுங்
கானந்தங்கியோற் றிருந்தயாங் கனிந்தநின்செய்ய
வானனும்புய முகுத்திடுபுராண வாரமுத
பானங்கேள்விவாய்ப் பருகிடநெடுந்தினந் தகைத்தோம். (கஉ)

கறுத்தவோதியர் தோள்புணர் காமுகர்க்கின்பம்
வெறுத்தலின்றியே மிகமிகவிளைதல்போற் பிறவி
யறுத்தநீயருள் சிவகதையனைத்தையு முணரத்
திறத்துளோமலாற் றெவிட்டிலங் கேட்கவேதிளைத்தேம். (கங)

ஆதலாலெம தகத்தவா வீதெனப்பின்னு
மோதுவார்தவச் சூதநீமுந்தையி லொருநாள்
வேதநாதன் வசிட்டனுதியர் கதிவிரும்பு
மூதருந்தவர் புரிந்தயாகாதியின் முடிவின். (கச)

செம்பொனுற்கதிர் மணிகளாற் கற்பகத்தெய்வ
வம்புலாமலர் மாலையாற் றருப்பைசூழ்யூபத்
ம்பபந்தியால் விளங்கிய சாலைவாய்த்தாகி
யம்பொனுசனத் தமர்ந்துமா முனிவர்சூ ழவைக்கண். (கரு)

அருத்திமிக்கபே ரறிவுசா லருந்தவர்கேட்ப
மரித்தவர்க்குவீ டருள்செயுங் காசியின்மகிமை
விரித்துரைத்தநாண் மீட்டுந்தென் னளகையாய்க்காசி
புரத்தின்மிக்கதோர் சிவதலமுளதெனப் புகன்றாய். (கசு)

ஏற்றமிக்கதா யுயர்தவ வனத்ததாயெவரும்
போற்றுதீர்த்தமூர்த் தங்களின் விசேடமாய்ப்புவிக்கண்
ணூற்றிசைக்குளு மொப்பிலாநலத்ததாய்த் தனத
னூற்றுமர்ச்சனைக் கினியதாய்ச் சிறந்ததென்றறைந்தாய். (கஎ)

அன்னகின்றிரு வாக்கருளமுதினை யடியோ
முன்னைநல்வினைப் பலத்தினு லுணர்ந்தனமுனிவோர்
மன்னவங்கர் மகிமையுந் தீர்த்தத்தின்வளமுங்
கின்னராதிபன் பூசித்துக் கிடைத்திடும்பேறும். (கஅ)

மூலமூர்த்தியின் விசேடமு முபவிடமுடிசேர்
கோலவண்கனி வனத்திருப் பெருமையுங்குணத்தாற்
சாலநங்களுக் குணர்த்தெனச் சவுனகராதி
மேலருந்தவர் வினவவுஞ்சூதனும் விரிப்பான். (கசு)

பூவனத்துளபுங்கவன் காண்பரும் புனிதன்
பாவனப்பத மலர்பெறுஞ் சத்திநிபாதச்
சீவன்முத்தராய்த் தெளிந்தநீ ருமக்கரிதுலகின்
யாவதியாவையு மங்கையினெல்லியி னுணர்ந்தீர். (உ0)

என்னவுண்மைசால் நயனுரைகிரப்பீர் வினவு
மன்னுமாதலப் பெருமையை யாயிரமுகத்தாற்

பன்னிவேதமே பகர்ந்திடவேண்டுமே தல்லான்
முன்னியெம்மனோர் மொழிந்திட முடியுமோமுடியா. (உக)

பரந்தநீடிய பிரமகைவர்த்தனப் பரவை
யருந்திமாதவ வியாசமாலனைவரு முய்யச்
சொரிந்தகானதயஞ் சுதையினிற் சிறிதியாந்துசடீர்ந்
திருந்தளீருமக் கறிந்தவாறியம்புதுங் கேண்மின். (உஉ)

வேறு.

குருவளர்திங்கள்கோடி யோருருக்கொளல்போ லோங்கு
மொருபெருங் கயிலைவெற்புக் குத்தரதிசையின்பாங்க
ரருமணிகுயிற்றித்தெய்வ வாடகத்தகடு வேய்ந்த
திருவளர்மாடகூடஞ் செறிந்தசி ரளகைமூதூர். (உ௩)

அதிர்குரற் பரவைச்சூழ லகனிலவுலகுண்மேருக்
கதிர்வரைத்தென்பாற் பைம்பொன் கான்றுகுஞ்செம்புத்தீவி
னிதியெனக்கருமநேம நியதிக ணிலைவழாமற்
புதிதெனநோலாநின்ற புண்ணிய பூமிதன்னுள். (உச)

கலையெலா முணர்ந்துவெய்ய கலியிருளொதுக்கிஞால
வலையமாவேந்தர்போற்ற மன்னுயிர் புரந்துமேருச்
சிலையணிகரத்தானுடற் றிருச்சிலம் பொலிகேட்டுண்ணு
மலையமான் றருமச்செங்கோன்மனுமுறைநடாத்துங்கொங்குள்
குலாதருகடலும்விந்தக் குன்றமுங் குன்றத்தூய
கரதலந்தனக்குந்தெய்வக் குறுமுனிகளிப்பாற்றந்த
விரைவினிற் பிறப்பைநீக்கும் விமலமாய்க் குடபாற்சைய
வரையினின்றெழுதும் பொன்னி மாநதிதனக்குமேல்பால்.()

அலம்புரி பவநீத்தோங்கு மருந்தவத் தூருவாச
னலம்புரி தவத்தால்வேத நாயகியருளேநல்ல
சலம்பயி னதியாய்த்தன்பேர் தரித்திருகரையுந்தூய்
வலம்புரி யினங்கள்வீசி வருதிரைப்பவாநிக்கீழ்பால். (உஎ)

முன்னைவல்வினைதீர் சீவன்முத்தர்க ளிமையமீன்ற
கன்னிநாயகன்றுணீழ லிரண்டறக்கலத்தல்போலப்
பொன்னியாங் கடவுள்யாற்றிற் பொருதிரைப்பவாநிகூடித்
தன்னுருவொன்றாந் தெய்வச்சங்கம வடபாகத்தின். (உஅ)

ஏகமாங் குடிலைவோா யெழுதருமறையே மெய்யாய்ச்
சாகையேசினையாயந்தச் சடைகளே தளிர்ப்பூங்கொத்தா
யாகமாதிகள்காயாமஞ் செழுத்தருங் கனிக்கானந்த
போகமேரசமாய்த் தோன்றிப்பொலிந்ததோர் வதரிச்சாகை.

ஆதியுநடுவுமீறு மில்லதோ ரகண்டாகாரச்
சோதியின்படிவாயந்தச் சுந்தர வதரிப்டாங்கர்
வேதியர்முதலோரேத்த விலிங்கமாய் விளங்கிவேத
மூதரும்பொருளாய்ப்பண்டே முளைத்ததோர் சுயம்புமூர்த்தம்.

அத்துவாவடிவாயுண்மை யறிவினுக் கறிவாயான்ம
தத்துவவதீதானந்தச் சங்கமவிலிங்கந் தன்னை
முத்தருங்கடந்தயோக முனிவரு மும்முக்கோடி
சித்தரும்பூசித்தேத்தச் சிறக்குமத் தெய்வத்தானம். (௩க)

செக்கர்வான் பருதிப்புத்தேள் செங்கரம்புகுதற்கொண்ணு
தெக்கணுந்தருக்களேவந் திலங்கையம் புறவமாகித்

தொக்கதாற்பரமஞான சொருபமாய் விளங்குமந்தத்
தெக்கணவளகைமேன்மை தேவர்க்குந் தெரிக்கொணுதால்.

மறைமுதல்வேதானந்த வல்லிபால்வயங்கியங்க
ணுறைசலா லந்தஞான வுத்தமவனத்து வாழுங்
கறையடி சியந்திய கடும்புலி கிரைகளாதி
நிறைவிலங் கனைத்துமொன்ருய் நீர்குடித் துறவின்வைகும்.()

கல்லெலா மிலிங்கமந்தக் காவிரிபவாநி ஞாங்கர்ப்
புல்லிய தருக்களெல்லாம் புலவரப் புறவமாக்கள்
சொல்லெலாஞ் சுருதிசோலைச் சுரும்பெலா மலம்புமோக்ஷதை
வில்லெலாந் திரள்பூணுக விஞ்சையர் வீணுகானம். (௱௪)

சொல்லருங் கதிக்கோர்மூலத் தோற்றமா யிருக்குமந்த
வெல்லையில் தலத்துமேன்மை யியம்பிடப் புவனமூன்றுள்
வல்லவர் யாவரென்ன வழுத்தலுஞ் சவுனகாதி
தொல்லருந் தவத்தோர்பின்னுஞ் சூதனை வினவலுற்ருர்.(௱௫)

செவ்விய வனையதானஞ் சிறந்ததென் னளகையான
தெவ்விதமிபக்கர்கோனங் கெய்திய நலம்யாதென்ன
வெவ்விய வகந்தைசெற்ருேர் வினவிட விறும்பூதெய்தி
வெளவிய பவந்தீர்சூத மாமுனி யுரைப்பதானுன். (௱௬)

நைமிசாரணியச்சருக்கம்
முற்றிற்று.

ஆக - விருத்தம் (எ௱.)

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மூ ன் றா வ து

# குபேரன் சிவார்ச்சனாச்சருக்கம்.

---

வரம்பெறநாண் மலருநறு மலையசமுங் கலவையுங்கா
மருங்கலோலக்
கரங்கொடுவெந் தினிதேத்திக் காவிரியும் பவானியுஞ்சூழ்
கடவுள்வைப்பிற்
பரம்பொருளாய்த் திருவதரி நிழன்முளைத்த
சிவக்கொழுந்தைப் பழுத்தவன்பு
நிரம்பமலர் கொடுதனதன் வழிபாடுபுரிந்தடைந்த
நிலைமைசொல்வாம். (க)

சிந்தைதெளிந் துணர்ந்துளீர் கேண்மினென முனிவிளித்து
தெருட்டுமுன்னர்ப்
பந்தமல விருள்சீக்கும் பானுவெனுங் கைலைவட
பாலின்ஞாங்கர்
சந்தநக வெயில்புடைசூ ழளகையென வுரைத்திடுமத்
தலத்துமேவுங்
கொந்தலர்தார் படிவைசிர வணவென்போ னவன்புதல்வன்
குபேரனென்பான். (உ)

கரமிருநான் குளகமலக் கடவுண்மரபிடையுதித்த
கயவான்மேலை
வரமலியு முதக்குறைவால் வளமையினா விளமைமுதன்
மலரின்மேலோன்
சிரமருவு திருக்கரத்தோன் வழிபாடோ ரணுத்துணையுந்
திறம்பானாகிப்
பரமவுணர் வாற்சைவ நூன்முறையாற் சிவார்ச்சனைசெய்
பணியினின்றான். (௩)

உழுதுவரி யளிபுடைசூழ் நறுந்தாரா னிவ்வண்ண
மொருநாட்போலப்
பழுதகலும் பேரன்பாற் புரமெரித்த குறுமூரற்
பவழக்குன்றைத்
தொழுதவழி படமகிழ்கூர்ந் தருட்கடைக்க ணோக்களித்துத்
தோழனாக
முழுதுமவன் வரங்கேட்பக் கொடுத்துவட திசைக்கிறைமை
முறையினல்கா. (௪)

அண்டர்பிரா னிவ்வண்ண மருள்செய்யப் பெற்றோனா
யளகையாளி
யெண்டிசைக்கு மேலாயவடதிசைக்கு மிருநிதிக்கு
மிறையோனாகித்
தெண்டிரைசூ ழுலகனைத்துஞ் சிறந்திடவச் சிரவணனாய்த்
திகழ்ந்ததெய்வத்

தண்டளிர்ப்பூம் புட்பகத்துக் குரியோனுய்ச் சிவபூசா
தரனுய்வாழ்ந்தான். (ரு)

மதிக்கதிர்வெண் பிறைவேணி மலைமகள்பாகனைமீள
வாராமுத்திக்
கதிக்கொருசிந்தாமணியை வரன்முறையா லருமறைநூல்
களைந்தவாற்றுல்
விதிக்கரிதா மாதலத்தும் வேதநூலெடுத்தெடுத்து
விரிக்குந்தெய்வ
நதிக்கரையு மியக்கர்பிரான் பூசித்துமகிழ்ந்துறையு
நாளிலோர்நாள். (சு)

விஞ்சரிச்செங் கதிர்மணித்தார் வேய்ந்துநற வுண்டளிபாண்
மிழற்றுந்தெய்வ
மஞ்சரிக்கொத் தணிவிரைத்த புட்பகமானத்திவர்ந்து
வடதிக்கேந்தல்
சஞ்சரித்து வான்வழியாய் வரும்பொழுது சாந்துமர
தனமுமுத்துங்
குஞ்சரத்தின் கோடுகளுங் கொழித்துவரும்பொன்னியைக்கண்
குளிரக்கண்டான். (எ)

பூவலயத்துள்ளோரைப் பொன்னுலகத் தோராக்கப்
புகுந்ததேயோ
பாவவிருளிரியவருட் பானுவடிவாயெழுந்து
பரந்ததேயோ

தேவர்தொழுஞ் சிவபெருமான் கருணைமடை திறந்தொழுகிச்
செல்வதேயோ
மூவகையில் யாதேயோ வெனவருங்கா விரித்தரங்க
முழக்கங்கேட்டான். (அ)

பாற்கடன்மே னெளிந்தலைக டவழ்வதெனப் பகிரதியும்
பரவும்பொன்னி
யாற்கவரும் பூந்தரங்கத் திவலைகளா னனைந்துமட
லவிழ்ந்துசெந்தே
னூற்கடையு முவட்டெடுக்குஞ் சோலைகளுநந்தனமு
நடலைத்தோற்றந்
தீர்க்குமருங் கனிவதரித் தருநெருங்கு பெருவனமுஞ்
சிறக்கப்பார்த்தான். (கூ)

கடுங்கனல்கால் விழிகொலைசெய் வள்ளுகிர்க்கா லுணங்கு
புலால்கமழும்பேழ்வாய்க்
கொடும்புலியும் புல்வாயுங் குடசினையும்பனைக்கைமதக்
கும்பமாவு
மடர்ந்தகைய வயப்போத்துமாகுவுநாகமுமொன்று
மன்புகூர்ந்து
தொடர்ந்தகைக்கோர் துறைகுழுமிநீருண்டு விளையாடு
நிலைமைகண்டான். (௧௦)

சாதநெறித் தகைதலைக்கொள் தவத்தோரு மருந்திசையாழ்
தழைக்கத்தாக்குங்

கரதலத்துமுனிவோருங் கின்னரருங்காந்தருவ
கணமுங்காலா
விரதமுளோனிகல்கடந்த யோகியரும்போகமெலா
மெள்ளிநீத்த
விரதமறைநூலோரு மனையதிருத்தீரமெலாம்
விளங்கக்கண்டான். (கக)

எண்டிசைசூழ் பெரும்புவன மொருமூன் றுளித்தலத்துக்
கிணையாய்வேறு
கண்டறிந்தோ மிலைநெடுநாட் கௌரிநாயகனமலக்
கழல்பூசித்துத்
தொண்டுபடு தவப்பலனோ கண்பெற்றபெரும்பேறே
தோன்றக்கண்டு
கொண்டதிந்தமாதலத்தை யெனமயிர்க்கூச் செறிந்துகரங்
கூப்பிநின்றான். (கஉ)

ஒப்பிலான்கருணையினு லுலைமெழுகுபோலுள்ள
முருகியிந்த
வைப்பினிடைமாதொருபா லமர்ந்தவனைப்பூசிப்பான்
மனத்துளன்ன
வப்பொழுதங்கவனருளா லிருவிசும்பி னிடையிருந்தோ
ரமுதவாணி
யெப்பயனுமடைந்தனிதிக் கிழவனிருசெவிதுளைப்ப
வெழுந்ததன்றே. (கங)

முன்பயிலுந்தவப்பேற்றாற் பிங்கலனீசிவபூசை
முறையினாற்றக்
கன்புசிறந்துளநினைந்தா யாதலாலப்படியே
யரனைப்பூசித்
தின்புறுதற்கொருதான மியம்புதுங்கேளெழுந்துகளை
யெறிந்துபாவத்
துன்பமகற்றிடும்பொன்னி நதிக்குடபால் பவாநியெனுந்
துறைக்குக்கீழ்பால். (கச)

இன்னவிருகடவுணதி நடுவணருமறைவடிவா
மிலந்தைஞாங்கர்
முன்னைவினைக்கருமருந்தாய்ச் சோதிமயமாயிலிங்க
மூர்த்தமாகி
மின்னவிர்செங் கோட்டுவேளைக் கைநான்குகுரோசத்தின்
மேல்பால்வைகும்
பொன்னுலகும்பூவுலகும் புயங்கலோகமுந்தொழுமப்
புனிதத்தானம். (கரு)

வேறு.

பண்டொர்வைகலிற் பாற்கடற்றெள்ளமு
துண்டதேவர்க ளோங்குடற்றானவர்
தண்டவெஞ்சமர்க் கஞ்சித்தளர்ந்துபூ
மண்டலத்துளிம் மாதலத்தெய்தினர். (கசா)

ஐயர்போரி லவுணர்க்குலைந்திடு
மெய்யர்சால வெருக்கொளுஞ்சிந்தையர்
கையர்முப்புரங் காய்ந்தவன்வாழ்ந்திடுஞ்
செய்யசெம்பொற் சினகரநண்ணினர். (கஎ)

சலந்தருந்திறற் றானவர்போர்க்குடைந்
துலந்தநெஞ்சர்கை யுச்சிகுவித்துளார்
மலிந்தபொன்னி பவாகியின்சங்கம
விலந்தைமூலத் திறைவனைவாழ்த்தினர். (கஅ)

அந்தரத்தர் துதிப்ப வருட்கடல்
கந்தநந்தி கணாதிபர் சூழ்தர
முந்தைமூல விலிங்க முகத்திடை
வந்துதோன்றினன் மாலயன்காண்கிலான். (ககூ)

தூயசுந்தரச் சோதியைக்காண்டலும்
வாயுவிந்திர னாதியஃானவர்
மாயைசேர்திதி மைந்தர்களாலுள
மேயதுன்பமும் விட்டுவிளங்கினர். (உ0)

காமதேனுவின் க்ஷீரமுங்கற்பகப்
பூமலர்த்திருத் தாமமும்புட்கர
வாமநீர்த்திரு மஞ்சனமும்விரைத்
தூமதீபசுகந்த பலங்களும். (உக)

மற்றுமுள்ளன வான்பொருளுங்கொடு
நெற்றியாரழ னேத்திரமூர்த்தியைப்

பற்றினல்வழி பாடுசெய்யும்பர்க்குக்
கொற்றம்யாவுங் கொடுத்தனன்கோதிலான். (உஉ)

அமரராரணநூன்முறையாற்புனற்
றமரவேணித் தலைவனைப்பூசித்துச்
சமரவாட்கைத் தைத்தியராம்பெருந்
திமிரவாருதியைச் செயித்தேறினர். (உ௩)

அன்றுதொட்டந்த வைப்புலகியாவினும்
வென்றிசால்விசை யாபுரி வீறெலாந்
துன்றுவீர புரியென்று தொல்பெய
ரென்றுமோங்கிய தீசனருளினல். (உச)

சேமமார்வச் சிரவண நீசிவ
பூமியாமிந்தப் புண்ணியத் தானத்தை
நேயமாகி யிலந்தை நிழற்கண்வாழ்
வாமதேவை வழிபடு வாயென. (உ௫)

சிலையமுத்தாந் திருமுடி மேலொரு
மலரையிட்டு வணங்கினும் வாய்த்திடும்
பலனையார்சொலப் பாலர்முன் னானுவல்
நிலையி துண்மை யெனநினை நீயென. (உ௬)

மெய்வழங்கி விசும்பினின் றிவ்வணந்
தெய்வவாணி தெருட்டலுஞ் சென்னிமேற்
கையமுந்த முகிழ்த்துக் கதியடைந்
துய்வதாயின னென்றுள் ளுருகினன். (உஎ)

இரங்குநீர்மைய னாகியக் கீரிரு
மருங்கி ரண்டரை நாழிகைமத்தியு
ணெருங்கிலங்கை நிறைபெருங் காவன
வரங்கொள் வைப்பினை யும்பரின்வாழ்த்தினான். (உஅ)

வேறு.

வஞ்சவல் வினையைவெய்ய வடவைமாமுகத்திற்பட்ட
பஞ்செனத் தகிக்கும்பொன்னி பவாநிசூழ் கிடந்தாரப்பண
விஞ்சிய தலத்தைக்காண்பான் விமானம்விட்டிழிந்துசெங்கை
யஞ்சலிமுகிழ்த்துச் சூழ்வந் தடிக்கடிவணங்கிப்புக்கான். (உகூ)

மனிதர்கள்பிறவிநோய்க்கு மாத்திரையனைய செய்ய
கனிதிரள்வதரித்தெய்வக்கானகங்காணப் பெற்றோர்க்
கினியொரு பிறப்புமுண்டோ வெனநினைந் தெய்திக்கண்கள்
டணிவரத் தனதனுக்குப் பாராசரனிருக்கை கண்டான். (௩௦)

காண்டலு முனிவர்கோனைக் கழலிணையிறைஞ்சி யன்பு
பூண்டுநின்றுருகுமுள்ளப் புருடவாகனனைப் போத
மாண்டகு தவக்குன்றன்னான் வாழ்த்தருண் மகிழ்ந்துநல்கி
யாண்டொரு தருப்பையாற்செய் யருந்தவிசிருக்கையீந்தான்

பின்னருமிறைஞ்சியந்தப் பெருந்தவிசிருந்த தெய்வக்
கின்னரர்பிரானைநோக்கி கிளரருந் தவத்தோன்கூறு
முன்னைநீவருந்திநோற்று முயல்தவப் பலத்தாலிந்த
நன்னதிநவெட்டோன்று நற்றலங் காணப்பெற்றாய். (௩உ)

அதிர்கடலுலகத்துள்ளோர் யாரெனுமன்புகூர்ந்து
கதிதருமினையதெய்வக் கடவுண்மா தானங்காணில்
வதிவுறிற்கணப்போதேனும் வசித்திடின் மலர்வெண்டிங்கள்
பொதிசடை முடியெம்மண்ணல் பூரணவருள்பெற்றுய்வார்.

இருமையாலிந்தவைப்பி னிதயமும்வாக்கு மெய்யு
மொருமையா லுள்ளன்பூறி யுறையினு முமைகோன்செய்ய
திருமலர்ப்பதங்கள்பூசை திருத்தினுங் கருத்திலுன்னுங்
கருமம்யாதெனினுமுற்றிக் கவலைதீர்போகந்துய்ப்பார். (௫௪)

ஒப்பிலான்கருணைகூர்ந்திங் குவகையி னுறைதலாலிவ்
வைப்பிடை மலரோனாதி வானவர்முனிவ ரானோர்
விப்பிரமுதகிதே விஞ்சையரியக்கர் சித்த
ரிப்பதிநீங்காரேற்ற மின்னமு முறைத்துங்கேணீ. (௫௫)

அடவியிலுறைந்துநீர்கா லடகிவையயின் றுமைந்தீ
யிடையினினின்றும்பஞ்ச விந்த்ரியந் தகித்துநோற்போ
ரடைவுறும் பெரும்பேறிந்த வருட்பெரும் பவாநிகூடற் :
கடவுண்மாதானந்தன்னிற் கந்துலுஞெழிந்தோ னெய்தும்.

தலமதின்மேலாமிந்தத் தலத்தியாரெனினுந் தானந்
திலமளவாற்றினுஞ் சிலம்பதா மிந்துநூலோர்
குலமதிலொருவற்கன்னங் கொடுத்திடிற் கோடிநூலோர்க்
கலகின்மாதலத்திலன்ன மருத்திய பலன்வந்தெய்தும். (௫௭)

பரசுகவிலிங்கநூறு பதிட்டைசெய் தன்புபூண்டு
புரிசைசூழ்காசிதன்னிற் பூசித்துப் பெறும்பேறிந்த

வரசிவபவானிபொன்னி மருவருட் டானந்தன்னி
லொருசிவ விலிங்கந்தாபித் துளுற்றுபூசனைப் பேறியும். (௩௮)

ஞானநாயகியானந்த லகரிநான் மறைப்பிராட்டி
யானவளருளேயிந்த வருட்பெரும் பவானியென்னு
மாநதியிந்தவைப்பின் வாரணத்தொழுகு மந்தப்
பானியமருந்தினோர்கள் பண்டமுதுண்டோரொப்பார். (௩௯)

ஒருபொழுதுண்சோல வுறுப்பொறுத்தடைந்து கங்கை
வருபிரயாகைமூழ்கி மகம்பலபுரிந்து மென்னுங்
குருநிழன் மணிகால்பொன்னி குடைந்தொருவதரிச்சாகைத்
திருநிழலமர்ந்ததேவ தேவனைத் தெரிசிபார்க்கே. (௪0)

வேரிநீளுட்டச்சூழ்ந்து விரிசினை விளங்குகேரிப்
பாருளசுயம்புத்தானம் பயில்சிவ கோசம்யாவுஞ்
சீருறவிதியாற்பூசை செய்திடும் பலமாமிந்தப்
பூரணவதரிச்சாகைப் புனிதனைப் பூசைசெய்தால். (௪௧)

அருந்தனபதிவ்வண்ண மாதிநூன் மொழியென்றுள்ளந்
தெரிந்துகொளினையதானஞ் சேர்ந்தருந்தவங்களேற்றுத்
தருந்தனவமுதலிங்க தாபனஞ் செய்தியாமிங்
கிருந்தன சித்தானந்த வினையில் பேரின்பம்வேண்டி. (௪௨)

வச்சிரவணநீயிந்த வதரிமா நிழற்கண்வாழு
முச்சிரப்படைக்கைமுக்கண் மூர்த்தியை யிமையமீன்ற
பச்சிளங் கொங்கைவேதப் பாவைநாயகனை யண்டா
லிச்சையிற் பூசையாற்றி யெய்துதி யரும்பேறென்ன. (௪௩)

இனையபெருண்மையிங்ஙன் பராசரனியம்பக் கேட்ட
கனைகழலியக்கர்கோமான் கண்கணீர்த் தாரைகால
மனநினைந்துருகிக்காய வாணியுந் தூக்கிநோக்கித்
தனையொரு சிறிதுபோது மறந்தனன் றகைக்குமன்பால். ()

நெடிதுபோதிருந்துபின்னர் நிகரறுமுனிவற் போற்றிக்
கடிதெழுந் தமலன்பூசை கடைப்பிடித்துருகு மன்பாற்
குடிஞையோ ரிரண்டெங்கூடுங் கோதகல்தானந்தோய்ந்து
முடிவறு கடன்கள்யாவும் விதிவழிமுடித்த பின்னர். (௪௫)

கண்டிகை யாரஞ்சென்னி கலங்காம் விளங்கநீற்றின்
புண்டரந் துலங்கரோமம் பொடித்திடத் தேவராவின்
றண்டருபயமுங்கங்கா சலமுமைந்தருவின் போதுங் [கான்.
கொண்டணி யணியாயும்பர் கொணர்ந்திடக் கோயில்புக்

அங்கமோராறும்வேத மனைத்தையு முணர்ந்தசைவ
மங்கலமறையோர்சொன்ன வாகமவழித்தாய் வந்து
சங்கமவிலிங்கஞானச் சயம்புவை யபிடேகாதி
தங்கருத்துவப்பரிவேறு தனித்தனி சிறப்பித்தாட்டி. (௪௭)

பஞ்சகௌவியத்தாலைந்து பரிமளவமுதாற்றெய்வ
மஞ்சனப்புனலாற் பாலான்மதுக்களாற் றதியானெய்யா
லஞ்செழுங்கன்னற்சாற்றா லரும்பலவருக்கச் சாற்றால்
விஞ்சியபசுங்கற்பூர விரைகமழ் சாந்தச்சேற்றால். (௪௮)

அந்தணர்முனிவர்தாபித் தருமறைசெபித்த செய்பொன்
மந்திரக்கலசநீரால் வானவர்வடித்த தெய்வச்

சந்தனக்குழம்பாற்கங்கைச் சகத்திரதாரைநீராற்
சிந்துரப்போர்வையான்றன் றிருமுடிகுளிரவாட்டி. (௪௯)

போற்றருங்கிருமெய்யீரம் புலர்த்தியற்புதமா யார்க்குஞ்
சாற்றருந்திருவொற்றுடை தரித்திருட் களங்கம்வாங்கத்
தோற்றியதபனரென்னச் சுடர்விடு மணியிராசி
யேற்றியகலன்கள்வெவ்வே றிலங்கிடப் புனைந்துபின்னும். ()

கந்தமு மலரும்பாலக் கதையும்வெள் ளறுகுஞ்சைவப்
பைந்தளிர்க் கரந்தைக்கற்றைப் படலையுங்கடுக்கைத்தாரு
மைந்தரு மலரும்வில்வ வலங்கலுநலங்கொள் பைம்பொற்
சுந்தரப் பணிகள்யாவுந் தனித்தனி சுடரச்சூட்டி. (௫௧)

வாய்மலர்ந்தெழுந்துசாம மறையொலிதழங்க விண்ணோர்
தூய்மலர்மாரிதூர்ப்பத் துந்துமிமுழங்கத் தூவெண்
சாமரை யிரண்டுபொலுஞ் சாரதரிரட்டத்தெய்வத்
தேமலர்க்குழலாராடற் சிலம்பொலி யெழுந்துதேங்க. (௫௨)

முறைதெரிபராசனாதி முனிவரருரைத்த வாற்று
னிறைதருதூபதீப நிவேதனமுறையாற் செய்து
துறைதிகழ் சடையுளானைச் சோடசவுபசாரத்தாற்
குறைவற விதிவழாது பூசித்தான் குழைந்துநின்றான். (௫௩)

தூயவானிழுதின்வெந்த சுவையுறு பதமுமுக்க
ணாயகற்களவிலாது நிவேதித்தானலஞ்சேர்வைப்பின்
மேயவட்டாங்கவேத மந்திரவிதிவழாது
தாயனையானைப்போற்றித் தனிவலஞ்சூழ்ந்து தாழ்ந்தான்.()

தாங்திருளடுமென்றூன்கு துலாம்பசும் பொன்றூற்செய்து
சரந்தனிலிடைக்கெலாம்வெண்டரளவாண் மணிகள் கோத்து
புரிந்ததுபருதித்தேவும் பூரணமதியு நணைக் [ப்
கரந்தையஞ் சடையானுள்ளங் களித்திடக்கனிவி னிட்டான்.

பின்னருந் தனதஞ்செங்கை பெருமணிமுடிமேற்கூப்பித்
தன்னிருகண்ணூனந்தத் தாரைநீர் வழிந்துசோரக்
கன்னலஞ் சிலேயாற்காய்ந்த கடவுளைப் பவாநிகூட
லென்னையாளுடையமுக்க ணிறைவனைத் துதிக்கலுற்றான். ()

வேறு.

கங்கையணி வேணியகலாதர பவாநி
மங்கையரு ளூன்மறை மடந்தைமணவாள
வெங்கடணிநாயக விலர்தைநிழல் வாழுஞ்
சங்கரபுராதன சதாசிவ மகேச. (௫எ)

சேயகனகாசல சிலாதர முகுந்த
சாயகவிரிஞ்சசிர தாரணவுணர்ந்தோர்
தாயகசௌந்தர சடாமகுட லோக
நாயகபராபர நிராமய கிரீச. (௫அ)

மங்கள கரம்பொலி பவாநிநதி பொன்னி
சங்கம மனோகர தயாபர கணிச்சிப்
புங்கவ வகண்டபரி பூரணபுயங்க
கங்கணம காவதரி காவன மகேச. (௫௯)

போதசரணஞ்சுருதி நாயபிராண
காதசரணஞ்சரண நாகணிகுழைப்பூக்

காதசரணங்கொடிய காலனுயிருண்ட
பாதசரணஞ்சரண மென்றடிபணிந்தான். (௬௰)

சிறந்துத னுயிர்க்குயிர தாயுளதுதேசாய
நிறைந்துசுடர் நின்றதுமு னீசனிடை வந்து
பிறந்தது சுரூபமெனு மோர்மணிபிறைத்தா
ருறைந்தசடை நாயகனுவப்புற வணிந்தான். (௬௧)

இம்முறைமெய் யன்புட னியக்கர்பதிமுக்கட்
செம்மலை யருச்சனை செயக்கருணை தங்கு
மைம்மலர் விழிச்சுருதி மங்கையொரு பங்கார்
கைம்மழுவ லானுவகை யிற்களிசிறந்தான். (௬௨)

மாலுமலர் மேலவனும் வானகமுமண்ணும்
கோலவன மாயளவில் கோடியுகநேடிச்
சாலவும் வருந்தியறி தற்கரியபெம்மான்
மூலமெ யிலிங்கமுதன் மூர்த்தியினுதித்தான். (௬௩)

சேணிரவி மட்கவிரி செஞ்சுடர்களூற்றும்
வேணிமுடியும் பனில வெண்குழையு மூரல்
வாண்முகமும் வான்மகளிர் மங்கலகிரீவ
நாணிலைசெய் கந்தரமு நான்குதிண்டோளும். (௬௪)

மல்லல்செறி வெள்ளிய வராகவெண்மருப்போ
டல்லியுளாமையு மராவணியும்வேத
வல்லியொரு பங்கும்வா தாபயமும்வன்னிக்
கொல்லையின் மனப்பட மொழித்தவிருதாளும். (௬௫)

உத்தாதி சாபதியு ளத்துவகை வெள்ளந்
தத்திமிலே யாதலைக டள்ளவினி துள்ளப்
பத்திசெயு மன்பர்கள் பவக்கடல் குடிக்குஞ்
சத்தியுள கைப்படைக ளேந்தனிதயங்க. (௬௬)

நந்திமுதலாயகண நாதர்புடை சூழக்
கந்தருவர் கின்னரர்கள் கானவிசைநீட
வந்தரரிரங்கிமுடி யஞ்சலி பணிப்ப
வந்தெளிதி னின்றனன் மறைக்குமினமெட்டான். ()

ஆரணமுடிக்கு மரிதாகிய வகண்ட
பூரணன் வெளிப்பட விபூதியணிகண்டி
தாரண வியக்கர்பதி தாளில்முனம்வீழு
போரணி மரத்தினுரு குற்றெதிர்விழுந்தான். (௬௮)

தேடினனிரங்கின னெழுந்துமுடிசெய்கை
சூடினனெடுத்தர வெனத்தொனி முழக்கிப்
பாடின னடித்தன னரும்பர வசத்திற்
கூடின னிருங்கருணை யங்கடல் குளித்தான். (௬௯)

இன்னணம் வழுத்திறையை நோக்கியருளீச
னுன்னரிய பூசனையி னுவகை மிக்கே
நின்னுளம் நினைத்தவரம் யாதெனினு நீதான்
பன்னுதி யளிக்குது மெனப்பர னுரைத்தான். (௭௰)

தோழனுமமிழ்ந்து சுருதிக்கொடி மணாளன்
சூழிணை வணங்கியிரு தாமரை மலர்த்தாட்

காளென விருந்திடு மெனக்கரிதி யாதிவ்
வாளிரவி சூழுலகி னென்றினம் வழுத்தும். (௭௧)

வேறு.

ஏகநாயக வமடியனேற் கன்றுநீ யிதைய
வோகையாற்றரு முத்தர வளகைபோலிந்தச்
சாகையம்பதி தனக்குநின் றனக்குமப்பெயரோ
டாகவேண்டுமென் வரமிதென் றடிமலர் பணிந்தான். (௭௨)

முக்கணைக்கனு முகமலர்ந் தன்பனை நோக்கி
யக்கணத்திலாங் கவ்வரங் கொடுத்தனு மகில
திக்கனைத்தினுந் தெக்கண வளகையாய்த்திருப்பேர்
தொக்கதாலவ கேசனுஞ் சோதியுஞ் சிறந்தான். (௭௩)

தொல்லரும்புக ழிமையவர் மலர்மழை தூர்த்தா
ரல்லறீர்ந்தமெய் யன்பர்களரவென வார்த்தார்
எல்லையில்தவக் குபேரனுக்கிவ்வணம் வேத
வல்லிநாயகன் வரங்கொடுத் திலிங்கத்துண் மறைந்தான். (௭௪)

வெற்றிவெள்விடை யண்ணல்பால் விழுமியவரங்கள்
பெற்றுமேம்படு தவத்தனைப் பிறங்கிய தனதன்
மற்றுமப்பெரு வதரியந் தருமிடை வனத்தை
முற்றுமாநகர் முறைநெறி விதித்திடவுன்னு. (௭௫)

தனத்தினன்மயன் றனையழைத் தினிதுபசரித்திவ்
வனத்தையீண்டுதென் னளகையாய் வளங்கொள்வான்பதிக
ளனைத்தினுக்குமோர் திலதமாயமையெனக் களிகூர்ந்
தினித்தசிந்தையா னம்முறை யியற்றுவா னிசைந்தான். (௭௬)

பாங்கரெங்கணும் படர்சிறை களைந்துவண் பணைக
ளோங்கிவான்றொடு தருக்களை யெறிந்துமிக்குயர்ந்தோர்
வாங்கியோரறு வகைப்பகை துமித்தல்போன்மறித்துத்
தேங்குமன்பர்கள் சிந்தைபோற் சுசியுறத்திருத்தி. (௭௭)

காப்புறப்புறங் கனைதிரள்காவிரி பவாநி
நாப்பணுற்கட றழுவியசிகிரிமா நகம்போற்
சேப்புறங்கதிர்த் தினகரமண்டலந் தடவிப்
பார்ப்பதாமெனப் பரந்துசூழ் மூதெயில்பதித்தான். (௭௮)

உடுத்தமேகலை யாமெனவோரிரு மருங்கு
மடுத்தவாறதே யாறையின்கிடங்கரா யமைத்தான்
கடுத்ததும்பிய கருணையானருளினுற் பிறவி
தடுத்துமேவருங் கதிபுகும்வானவர் தச்சன். (௭௯)

ஆழிகைக்கொள்வோ னுறங்குபாற் கடலலையணிபோ
லேழிகர்பசும் புரவிகாவிளப்புற மிவந்த
சூழிகைகுலப் பந்தியுஞ் சுடர்விடுமாட
மாழிகைக்குல நிரைகளுந் தனித்தனிவகுத்தான். (௮௦)

சிகரமாமணி மேடையுந் தெற்றியுமாங்கூடப்
பகரொணாவெழிற் சதுக்கமும் பரிந்துவெவ்வேறு
யிகலிலாதமைத் திலங்கையங் கருவனமெனைத்து
மகரதோரண வனமென மறுகெலாநிறைத்தான். (௮௧)

ஆதிநூலுண வந்தணர்க்காலைய பொருபா
னீதிநூலுணர் நிருபர்மந்திரநிரை யொருபாற்

றிதின்மாமதி யமைச்சர்க டிரண்மனையொருபாற்
கோதின்மாநிதி வசியர்தங்குழாத்திட மொருபால். (௮௨)

தடங்கொள் காவிரிக் கணியதாய்ச் சைவர்மாமுனிவர்
மடங்களெண்ணில செட்புறவகுத்துமற்றுள்ளோர்க்
கிடங்கள் வேறுவே றழகுறவியற்றினன் வேலை
விடங்கொள்கண்டனுக்கடிமைசால்மயனெனுமேலோன் (௮௩)

கொன்றைதாதகி குங்குமங் குருந்தமந்தார
மன்றன்மாதவி பாதிரி சண்பகம்வகுளந்
துன்றுசந்தனஞ் சூவிளங் கோங்கமசோக
நின்றநந்தன வனம்பல சூழவுநிறைத்தான். (௮௪)

கட்விழ்ந்தசெங் குமுதமிந் தீவரமெழிற்பூந்
தோடலர்ந்தபைங் குவளை யஞ்சுரும்புசூழ்கமலங்
காடலர்ந்தென வலர்ந்தபூந் தடங்களுங்கழுநீ
ரோடையும்புற வணியதா யோங்குறவியற்றி, (௮௫)

உருத்தயங்கிய வுத்தரவளகைக்கு மேலாய்த்
திருத்திமற்றைய புறவணியுளவெலாந் தெய்வப்
புரத்தின்மேம்படு மாநகர்க்காக்கிவான் பொதுவி
னிருத்தனூர்க்குறை யாலயப்பணி நிருமித்தான். (௮௬)

தலக்குமாரணப் படிவமாமிலந்தையைச் சூழ்ந்து
வலங்கொள்வான்றட மணிமதிலணியுற வகுத்துக்
குலங்கொளாடகக் கொடுமுடிக் குன்றமேசிகர
மிலங்கவர்துமின் றேத்தல்போற் கோபுரமியற்றி, (௮௭)

பூதநாயகன் வானவர்நாயகன் புனித
வேதநாயகி நாயகன்வியப்புற விண்ணோர்
காதல்கூர்மணி மானசே கரசினகரங்க
ளாதிநான்முறை வேறுவே றழகுறவாற்றி. (அஅ)

மற்றுமுள்ளன பணியெலாம்வரன்முறை முன்னூல்
சொற்றவாறணுத் துணையினுந் திறம்பிடாதியற்றிச்
சுற்றுமூடுதெயி னகரினைச் சுரரொடுஞ் சுவணன்
றெற்றெனச்சிவ னருளினாற் பாவனஞ்செய்தான். (அகூ)

விருப்பினால்வகை வருணமுமங்நகர் விளங்க
நிரப்பிவேண்டுவ நிலைபெறுவளங்களு நிறுத்தித்
திருப்பொருந்திய தெக்கணவளகையாய்த் திருப்பே
ரிருப்பதாக்கின னந்நகர்க்கிருநிதிக் கிறையோன். (கூ0)

சிந்தைவாக்குமெய் யொன்றியதெளிவுளோன் சிறப்பால்
வந்துமாதவப் பராசரனடிமலர் வணங்கி
யந்தமாமுனி தன்னொடுமேவன்பதித் தமைத்த
சந்தவாரமுத லிங்கத்தின் சந்நிதிசார்ந்து. (கூக)

ஆவிபன்னவவ் வாரமுதலிங்கத்தின் கீழ்பாற்
றேவதீர்த்தமொன் றுள்ளதத்தீர்த்தத்தின் விதியா
லோய்விலன்பினிற் குடைந்துபே ரொளிவிடுமமுத
பாவனப்படி லிங்கபூசனை பரிந்தாற்றி. (கூஉ)

அங்கணுபக னருள்பெரி தடைந்துமெய்வேத
மங்கைநாயகன் மகிழ்ந்துறை தெக்கணவளகைப்

புங்கமாநகர்த் திருத்தெருவலஞ்செய்தப் புரிக்கண்
டங்குபூசுரர்க் கரும்பொருள் விருப்பறத்தந்து. (௧௩)

பணிகொள்வார்சடைப் பரனருள்விடைகொடு பராசன்
றுணைகொடாரடொழு தந்தணராசிமேற் சூடி
மணிகொள்வான்முடி வச்சிரவணன் மலரலங்க
லணிகொள்புட்பகத் தமர்ந்தள காபுரியடைந்தான். (௧௪)

அலைத்தவெம்பவ மகற்றுவான் வேண்டினோரந்தத்
தலத்துவைகிட வேண்டுமென் றருட்சதுர்மறைநூ
லொலித்தகாதலான் யானுமக்குரைப்பதென் னுங்கோர்
திலத்துணைப்பொழு துறையினும் பிறவிநோய்சிதையும். (௧௫)

ஞானமிக்கபே ரறிவுளீர்நறுங்கனி வதரி
கானமன்னது கடிகமழ்தெக்கண வளகை
யானதிவ்வண மென்றனனருமறைக் கொடிக
டானிவர்ந்திடத் தாங்கருட் டருவெனுஞ்சூதன். (௧௬)

இவையெடுத்தருண் முனிவரனியம்பிடக் கேட்ட
சவுனகாதிமா முனிவர்கடணப்பிலா னந்த
வுவகையங்கடல் குளித்தனர் களித்தனருணர்வுட்
சுவையுறுஞ்சிவ சிவவெனக்கண்கணீர் சொரிந்தார். (௧௭)

## குபேரன்சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம்-௩-க்கு விருத்தம். (௧௭௦.)

திருச்சிற்றம்பலம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## நாலாவது

# பராசரச்சருக்கம்.

கராசலவுரியனைக் கனகன் பூசித்து
விராசிதநகர்செய்த மேன்மையீதினித்
தராசெனநிலைபெறு சமாதிகைவரும்
பராசரனுக்குசெய் பணியியம்புவாம். (க)

தன்னிகர்வேறிலாச் சவுனகாதியர்
பின்னரும்வினவுவார் பிறங்குகேண்மையோ
யன்னமெய்ப் பராசர னமுதலிங்கமப்
பொன்னகர்பதித்ததும் பூசைசெய்ததும். (உ)

உள்ளரும்புலவர்கட் குணவசாயுயர்
தெள்ளமுதந்நகர் சேர்ந்தம் மாமுனி
வள்ளல்பால் வந்ததும் வகுத்துரைத்தியென்
றுள்ளியோர் வினவலு முளார்த்துஞ்சூதனே. (௩)

அலையெறி பாற்கட லலறப்பன்னடையிற்
றலைவருமசுரருஞ் சுரரும்வாசுகி
நிலைபெறு வடத்திரு ளிழல்செய்யாடக
மலையெனு மத்திடை மதனஞ்செய்யுநாள். (௪)

வருந்திமெய் யுணர்வொடும் வழிபட்டோர்க்கெதிர்
பரிந்தருட் சிவம்வெளிப் படுதல்போற்சுர
ரருந்துவான் றுரைகட லகடுவாய்விடச்
சுரந்துமே லெழுந்தது தூயவான்சுதை. (ரு)

அமரியாங் குதித்திடு மெல்லையார்கலித்
தமராமுங்கிழ்படத் தயித்தியர்க்யோ
ரிமையவர்தமக்குமுன் பிரைந்துமுந்திறு
ரமைடமாங் குணர்ந்துமா லணங்கினெய்தினன். (சு)

வந்தமோகினிதிரு வடிவச்செஞ்சுடர்
முந்தியவண்டுபோன் மூசித்தானவர்
சிந்தைநைந்துருகி யிச்சிறியநுண்ணிடைப்
பைந்தொடிநமக்கெனப் பலருமெண்ணினர். (எ)

தடம்புயத்தமரரைச் சபித்துத்தண்சுதைக்
கடங்களைக் கதிர்விடுங் கனகவாண்மணிக்
குடம்புரை குவிமுலைக் கோவ்வைவாயிவட்
கடங்கவு மளித்துமென் றவசமாயினர். (அ)

அடுத்துள விண்ணவர்க் கருத்துவானருள்
மடுத்திடு நெஞ்சினன் வலியரானவர்
தடுப்பருங் காமநோய் தலைகொளத்தனி
தொடுத்தவாண் முறுவலான் சுதையைவௌவினன். (கூ)

அஞ்சனவண்ணமா லணங்கு மோகினி
வஞ்சனைத் தொடர்பினல் மயக்கொமர்க்

குஞ்சரவுணர்கைக் கொடாதுவேறிடத்
தெஞ்சலில் சேமஞ்செய் திருத்திவைத்தபின். (கo)

மாயையான் மருந்தினை மறைத்துநாள்சில
போயபின் னருளினற் புலவர்மாதவ
ராய்வுறம் விஞ்சையர் பிதிர்க்களாதியோர்க்
கோய்வற வேண்டுவ வுதவிப்பின்னரும். (கக)

மற்றளசுதையினை மாயனோர்பசும்
பொற்றடங் குடத்திடை நிரப்பிப்போதவுந்
தற்றனக் கேற்பன கவர்ந்து தண்டுழாய்க்
கொற்றவன் மீட்டுந்தன் குறிப்புளெண்ணினன். (கஉ)

பரித்தருந் தவம்பயில் பராசனுக்கியோ
ரருந்திடவழங்குவா னகிலத்தேற்றமே
தருந்தல விசேடமாய்த் தயங்குதீர்த்தங்கள்
பொருந்துநன் னலத்தவாய்ப் புகழின்மிக்கதாய். (கங)

அம்புவியுளதலத் தடைந்திவ் வாடகக்
கும்பவாரமுதினைக் கொடுபோராசர
னன்பனுக் களித்தியென் றியம்பிமல்கினன்
வெம்பணிப் பகைவனும் விடைகொண்டேகினன். (கச)

பத்தியிற்சிரங்கொடு பவாநிகாவிரி
மத்தியின்விளங்கிய வதரிவைப்பிடை
யத்தனையடிபணிந் தமுதகும்பத்தை
முத்திதேர்பாராசர முனிக்குமல்கினன். (கரு)

(வேறு.)

வரங்கினன் பவாரிகூடல் வள்ளலார்த முள்ளரு
ளீங்கிருந்த வண்ணமென்கொ லென்றிரங்கி யன்பினாற்
பாங்கிருந்த வாணவப் பகைச்செருக் கறத்தரு
ளோங்கரும் தவத்துளோ ருடன்கலந்துவப்புறு. (கசு)

வடித்திடுந் தவப்பராசன் மாதவத்தின் வண்சுதைக்
கடத்தைநாடி யவுணர்வந்து கவர்வரென்று கானினுந்
தொடுத்தமால் வரைத்தலங்க டொறமிருந் தருந்தவ
மடுத்தயோகர் பலரையங்கு வரவழைத் திருத்தினான். (கஎ)

தூயமாமுனிக்கணத் துடன்சுதைக் கடத்தையோர்
சாயைவைத்து வந்துபன்ன சாலைவா யிருக்குநாள்
வாயிதத்தி லவுணரிந்த வஞ்சகஞ்செய் தெம்மையிம்
மாயைசெய்து ளானுமேக வண்ணனென்று ளெண்ணினார்.()

வெங்கண்வா ளரிக்குழாம் வெகுண்டபோ லெழுந்தெரி
செங்கணார் படைக்கலங்கொள் செங்கையார்கள் சேனையோ
டங்கண்வா னடைந்துதேவ ரஞ்சியோட வந்நக
ரெங்குநாடி யம்புவிக்க ணெண்ணிலார்கணண்ணினார். (கக)

வந்துகாம ரூபராய் வளைந்துமா திரந்தொறுஞ்
சந்திலாது நோக்கிநீடு சாதுரங்க சேனையோ
டுந்துகா விரிக்கரைக்க ணெண்ணரு வொழுக்கிடுங்
கொந்தலர்ப் பொழிற்பவாரி கூடலெல்லை கூடினார். (உ0)

கங்குலிற் கறுத்திடுங் கனத்தபார மெய்யினார்
பொங்கமோடு பங்தெனப் பொருப்பையேந்து கையினார்

செங்கணாரில் யோகர்மேற் சினந்தெழுந்து காந்தினர்
மங்குலைப் பிழிந்துநீரை வாய்மடுத்து மாந்தினர். (உக)

இன்னவண்ண மனிகமோ டெழுந்ததான வர்க்கெலா
மன்னர்நால்வ ரிலவணா சுரன்வரத்தின் வந்துளார்
வன்னியன்ன தண்டகன் மறங்கொள்வீரன் வஞ்சகன்
றன்றுவென்றி வக்கிரா சுரன்சுரர்க் கடந்துளார். (உஉ)

(வேறு.)

சரித்திரளிரதங் கடும்பரியரக்கர் கலந்தநாற்படையினை நான்காய்ப்
பிரித்தனர்தண்ட காசுரனென்னும் பெற்றியோன் கொற்றவாட்படைக
டரித்தபோரவுண ரோரொண்ணாயிரவர் தம்மொடும் விசயமாநகர்க்கு
மருத்துறுதென்பால் மாதவன்மகிழ்ந்த மங்கலகிரிப்புறத் திழிந்தான். (உஙு)

காரெனக்கவிந்த படையினுள்வெய்ய கடுங்கண்வீ ராசுரனென்பா
னீரையாயிரவ ரெறுள்வலித்தடக்கை வெஃகவேற் றயித்தியரொடுமெவ்
வீரமாநகர்க்கு மேற்றிசையெல்லை யிடைந்தனன் வஞ்சகனென்னுங்
கூருங்கிருமூவாயிரரவுணர் தம்மொடுமெங்குணதிசை தொக்கான். (உச)

உக்கிரமுகத்தோ டுதித்ததானவர் ரொன்பதி
னுயிரரோடும்
வக்கிராசூர னென்பவன்பதினு யிரமத
வாரண வலியான்
றெக்கணவளகைக் குத்தரபாலிற் றிங்களங்
குழவிவீற்றிருக்குஞ்
செக்கர்வான்சடையா னினிதுறைவேதத்திரமலைச்
சாரலிற் செறிந்தான். (உடு)

கொழுதிவண்டலம்பு மலர்ப்பொழிற்பவாகி கூடன்மா
நகர்த்திருவெல்லை
முழுதுநான் மருங்கு மிந்நெறிவளைந்து முழங்கிய
கருங்கட லென்ன
விழுதெரிசிற்றத் தானவர்தளம்வந் திறுத்தனு
மெண்ணரும் தவஞ்செய்
தெழுதருமறைதேர் பராசரனுகி யிருடிய
ரொன்செய்வார் திகைத்தார். (உசு)

சுந்தரப்பசும்பொன் னுடகத்தமைந்த துய்யவான்
சுதைக்கடத் தினைப்பூ
பந்தனஞ்செய்து பவாநிகாயகனைப் பரசியப்
பராசரன்முதலோர்
கந்தமெபிரா னதமுனைத்தசலங் களைச்சிற
கறுத் துயிர்காத்த
விந்திரபிக் கடத்தினைக்காப்ப தியற்கையென்
றிருடியர்புகழ்ந்தார். (உஎ)

அண்டர்கோன்முனிவ ரிருடியர்குழாங்க ளச்சமுற்
றுரைத்த சொற்கேளா
கொண்டலைக்குலவும் வாயுவைவிரிந்த குரைகடற்
குரிசிலைநோக்கி
மண்டலத்திருந்த மருந்ததுதெரியா வண்ணமண்
புனல்சில மழையாற்
கண்டிடாதாங்கு மறைந்திடப்பெய்த காத்திரென்
றுரைத்தனன் விடுத்தான். (உஅ)

சங்கமால்வரைவே தாசலம்பதும சயிலமா
நாகவெற்புயர்ந்த
மங்கலகிரியென் றுரைத்திடும்பஞ்ச
வரைநடு வைகுமாதலத்துட்
டங்கியவேத நாயகிபாகன் சந்நிதித்தெக்கணச்
சார்பிற்
பொங்கிவான்மேக மண்புனல்கலந்து பொழிந்தது
சுதைக்கடம்புதைய. (உகூ)

எதிர்ந்தவரளவுணர் கவர்ந்திடாவண்ண மிரும்புவிக்
கீழுறவாழ்ந்து
புதைந்தவாமுத கடந்தனைமுனிவர் புங்கவன்
சங்கரனருளாற்
சதைந்தருங்கொடிய வவுணரைத்தூர்க்கா கன்னியராற்
கடந்தாங்குப்
பதிந்தவாமுதைச் சிலபகற்பின்னர் பதிட்டைசெய்
திலிங்கமாப் பதித்தான். (௩0)

புரைதவிரமுத விலிங்கநாயகனைப் புலவருமுனிவரும்
போற்றக்
கரதலவிலிங்க மெனப்பெயர்கவித்தக் கடவுடன்
சந்நிதிக் கீழ்பாற்
றிரமுறுதேவ தீர்த்தமொன் றுற்றிச் சிவபரஞ்சுடரினைத்
தியானித்
திரவொடுபகலொன் றின்றிமாயோகத் திருந்தனன்
பராசரனென்பான். (௯௧)

என்றருள்சூத முனிவனைமீட்டு மிருமலவலிகடந்
துயர்ந்த
வென்றிசான்முனிவர் வினவுவாரந்த வெய்யதைத்
துர்க்கையருதித்துக்
கொன்றதுமன்னோர் கொற்றமும்பின்னர்க் குவிந்துமண்
புதைபடுங் குடத்தி
னின்றவாரமுத மிலிங்கமாய்த்திரண்ட நீர்மையு
மக்குறிநிலையும். (௯௨)

தேனலர்துளவோன் றந்தெள்ளமுதச் சிவக்குறி
கரதல விலிங்க
மானதுமந்த வருந்தவக்குரிசி லலையெறிகாவிரி
பவாநி
மாநதிநாப்பண் டேவமாதீர்த்தம் வகுத்ததும்
வரநதியெனுமத்

தூகறுந்தீர்த்த மகிமையுமதனிற் ரோய்ந்தவ
ரடைவுறும்பேறும். (௬௩)

விரித்தெமக்குணர்த்த வேண்டுமென்றறவோர் வினவலும்
விளம்புவான் பவாநி
புரித்திருமகிமை சதுர்முகனுலும் புகன்றிடற்கரிதவ
ஞெருநாட்
டிரித்துமாபதியைக் கண்டெதிர்வணங்குந் தன்மையோர்
பலன்சிவபுரத்தி
லிருத்திடுமென்ருல் வேறினிச்சொலுமா றெங்ஙனநுங்களுக்
கியம்பீர். (௬௪)

பதிவுறுமிப்பி வெள்ளியுங்கயிற்றுப் பணியுமேற்
படர்ந்தகான்புனலு
மிதுவெனவுலகை யுண்மையினினைந்த வெதிகளாற்
புகழ்ந்திடப்படுமெம்
முதாகர்வதரி மூலநாயகனை மூவிருகாலமும்
பணிந்து
வதிபவர்பலனைக் கற்பகாடவிவாழ் வானவர்களும்
பெறமாட்டார். (௬௫)

எற்றமிக்குயர்ந்த வப்பெருந்தலத்துக் கிணையதோபிறிதிலை
யருநூல்
சாற்றருந்தவமுந் தானமும்பலவாய்த் தழைப்பதங்
காதலான்முன்னுள்

வேற்றொருபுலத்து மன்னவன்மாசித் திங்களிற்
சிவநிசிவிரத
நோற்றருந்துலாதா னஞ்செய்தியார்க்கு நவலரும்
பரகதியடைந்தான். (௩௬)

பெருந்திருவுடையோ னளப்பருந்தானம் பெரியவர்க்கத்தலத்
தளித்துப்
பொருந்திடும்பலனைக் குறையுளோனுதவும் பொருள்கள்யா
தெனினுமங்குயர்ந்தோர்
கரந்தனிற்கொடுத்து வணங்கிடிற்பெறுமாற் கங்குலோர்
பாதியிற்சிவனை
யொருங்குமெய் யுணர்வால் வலஞ்செய்துதொழுவோ
ரொருகுடைக் கீழ்நிலம்புரப்பார். (௩௭)

பொருதிரைக்கங்கை நதிக்கரையடைந்து
பூசுரர்க்காயிரம் பசுக்கள்
மருமலர்த்துளவோன் முனிமயலொழித்த
வயிரவன் சந்நிதிமுன்றிற்
பரிவுடனளித்தோர் பெறும்பலனிந்தப்
பவாநியம் பதிக்கண்ணோர் மறையோற்
கொருபெருஞ்சுரபி யளித்துளோன் பெறுமா
லுரைப்பதென் னுமக்கியாம்பலவும். (௩௮)

பரிந்தொருவைகல் வசிக்கினுமினைத்த
படிபெலாமுடிக்குமப் பவாநி

புரந்திருக்கைலை யேயலால்வேறு
புகலவேண்டுவதிலை யனைத்துந்
தெரிந்துளபராச ணங்கயேற்றந்
தெரிதலான்மாயையைச் செயஞ்செய்
தருந்தவத்தனைத்து முணர்ந்தனனவனவ்
வவுணரைச்செயிக்குமா றரிதோ. (௩௬)

## நான்காவது பராசரச்சருக்கம்

## முற்றிற்று.

ஆகச்சருக்கம். ச-க்கு விருத்தம், (௨0௬)

திருச்சிற்றம்பலம்.







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஐ ந் தா வ து

# துர்க்கையவதாரச் சருக்கம்.

---

சொற்கவானவர் தொழுந்திரு நணாவுளுறையு
மற்கைவாரண வுரிக்கருணைவாரி யருளால்
விற்கைவாளவுண வேலையைமுன் வேதவுமைபாற்
றற்கைமாதர்க ளுதித்தவை தொலைத்தல் புகல்வாம். (௧)

எதிரிலன்புணர்வு ளீரினிது கேண்மினுலகிற்
கதிதரும்பதி கலாநிதி குலாமுடியுமா
பதியுவந்திடு டவாநிவள மாநகரலால்
விதிதரும்புவன மீதுதலம் வேறுமுளதோ. (௨)

அனையதொன்னகர் வயிற்பயில் பராச னருள்கூர்
முனிவர்தம்மொடு மம்மூரிவடி வாளவுணர்வெவ்
வினையமஞ்சியவர் வீறையற வெல்லமதியம்
புனையுமெந்தைதிரு வாலையமடைந்து புகலும். (௩)

ஐயகின்னரு ணலத்தினிது காறுமடியோங்
துய்யவாரமு திருத்தின மினிச்சுடுதிறற்
கையராமவுணர் கைக்கொளுவ ரென்றுகவலா
மெய்யர்யாவரும் வெருண்டன ரிருண்டமிடறோய். (௪)

வந்தடைந்தமறை மைந்தனெதிர் வந்தமறலி
சிந்தநெஞ்சுடல் சிதைந்திட முனிந்தகழலாய்
முந்தையண்டமுதல் மூவுலகுமுண்ண முடுகு
மந்தகாரவிட முண்டுயிரளித்த வருளோய். (௫)

பூதநாயக புரந்தரன் முகுந்தன்மலரோ
னாதிநாயக மெய்யந்தணர்க ணாயகவருள்
வேதநாயகி தன்னுபகமெய் வேதசைலச்
சோதிநாயக சரண்சரணெனத்துதி செய்தான். (௬)

நீலகண்டவள கேசுர நிரஞ்சனதிரி
சூலமங்கள சுரூபமணி மார்பசுதையைச்
சாலகங்கவிழிக்கடை நிரம்புதயவாற்
பாலனஞ்செய்தி யெனச்சுருதியிற் பரவினான். (௭)

சுருதியிற்சொல்பல பேர்கொடு துதித்தளியினாற்
சுருதியில்வணம் வழுத்தலும் நிரம்புகருணை
விரிதிரைக்கடல தாய்நிறை யிலங்கைவிமல
னரியசோதி வடிவாயவ னுதித்தனனரோ. (௮)

பானிலாமதி குலாமுடியும் வெய்யபரசு
மானும்வென்றி வரதாபயமும் வேதமடமான்
றனிலாவுமொரு பாகமுமிலங்கு தபனர்
போனெடுந்திரி சிரப்படை பொலிந்தவழகும். (௯)

(வேறு.)

இன்னவண்ண மெதிர்தோன்று
மிறைவைட்பராசன் முனிவரொடுஞ்
சென்னிமிசையஞ் சலிகூப்பித்
தேவர்தம்மி லிந்திரனீ
மன்னுபிரமா திகளின்மிக
வயங்குநான்கு முகத்தோனீ
துன்னுமாயா கடவுளரி
லுவணமுகைக்குந் தோன்றனீ. (௧0)

தரித்தவேணி யுருத்திரர்க
டம்மிலருள்கூர் சங்கரனீ
விரித்தமறையுட் சாமநீ
வருணநான்கின் வேதியனீ
தெரித்தகற்றைச் சுடர்விடுமா
தித்தர்தம்மி லுபேந்திரனீ
திருத்தமறைதேர்ந் தினிதுயர்ந்த
தெய்வமுனியி ஞரதனீ. (௧௧)

உயர்ந்தகடவுண் மடந்தையரி
லுமைநீயொளியிற் கதிரோனீ
யியைந்தயோக பண்டிதரி
லிலங்குசனற்கு மாரனீ
வயங்குமீசர் தம்மின்மயேச்
சுரனீமல்கும் பறவைகளி

னயந்தகலுழ னிவரையி
னலஞ்சேர்செம்பொற்சைலநீ. (கஉ)

மதவாரணத்திற் றிறலயிரா
வதநீ நதியின் வரநதிநீ
கதமார்வீரர் தம்மிலுயர்
கழற்கால்வீர பத்திரனீ
விதமாங்கடவுட் கணங்கடமில்
மிக்கவருள்சேர் விநாயகனீ
பதமீரிரண்டின்மேலாய
பதமாய்விளங்கு முத்தியுநீ. (கரு)

மனுக்கடனிற்சுவாயம்பு
மனுநீபூத மதில்வானீ
நினைக்கவுறுமிந் தியங்கடனின்
மனநீநிகரில் வில்விகளிற்
றனுக்கையுளவி ராமனுநீ
தருக்கடனிலேந் தாருவுநீ
யனைத்துநீமற் றெங்கெங்கு
மானபிரம நீயாமால். (கச)

என்னுமுனிவன் முனிவரொடு
மிவ்வாறேத்த வெழிற்சுருதி
யின்னுயகன் றன் றிருவுள்ளத்
துவகைபொங்கி மெய்யன்பான்

முன்னேநின்ற முனிவரனை
முறுவல்கூர்ந்து முகநோக்கிப்
பொன்னார்வேணி வதரிவனப்
புனிதன்றிருவாக்கருள்செய்வான். (௪௫)

புரியுந்தவத்தி லுயர்ந்தவுனைப்
போல்வாரெவரிப் புவனத்து
விரியுந்தலத்து மேலாய்நாம்
வியந்ததலமிவ் வதரிவனம்
பரியுநலத்தா னடியெமைப்
பன்னாள்வழுத்தி மிகநோற்றிங்
கரியதவப்பே றடைந்தவுன
தகத்துநினைத்த தறிந்தேமால். (௪௬)

வெம்போரவுண ரீண்டுபய
வேலைக்கடவு ளாரமுத
கும்பமதுகொண் டகல்வரெனக்
குறிப்புளச்சம் விடுதியவ
ரிம்பர்வியக்கு மிந்நகர்வந்
தீண்டற்கேது முற்பவத்தி
னம்புற்றியற்றுந் தவப்பேற்று
லீறிங்கதனுனடினர். (௪௭)

முத்திபயக்குந் தலமுலகின்
முனிவகேட்டி யயோத்திபுரி

சத்தியவந்தி நகர்காசி
துவாரைமாயா புரிகாஞ்சி
பத்திபயக்கு மாமதுரைப்
பதியிவ்வேழிற் பவாநிக
ருத்தமமதா மிந்நகர்வா யுயிர்நீத்
தோரொம்முலகடைவார். (கஅ)

சாதமாக வுணர்த்தியெம
தருட்சத்திகளாற் ஞானவரை
மோதிமுறுக்கி நினதெண்ண
முடித்தும்முனிவ வதகாறும்
போதமகிழ்ந்தெம் மாலயத்துப்
புனிதபஞ்சாக்கரமுன்னி
யேதமகன்றிங் குறைதியென
மீட்டுமமல னியம்புவான். (கக)

தாமநிலவுங் கருங்கூந்தற்சத்திமடவார் நால்வர்களெம்
வாமமுவக்கு மறைவல்லிவயினின்றுதிப்பா ரவராலத்
தீமைபயக்குந் தயித்திரரைச்
செகுத்துச்சகத்து மேலாமிக்
காமர்நகர்க்கு நாற்றிசையுங்
காவலாக விருத்துமால். (உ0)

அலத்தாரொருமுகா துணர்விறொடு
    மனந்தம்பிறப்பிற் செய்ததவப்
பலத்தாலிந்தப் பதியினிடைப்
    பயிறல்கிடைக்கு மாதலினுற்
சலந்தாறுவக்கும் தயித்தியரித்
    தலத்துளாவி தனைவிடுக்கு
நலத்தாலவர்க்கு மெளிதாக
    நன்கிற்கிடைக்குஞ் சாரூபம். (உ௧)

சந்தங்கடிந்த படைமணக்குந் தன்மை
    போலச்செருனர்செரு
வந்திங்கிறக்கிற் கதியுண்டா மறைதேர்முனியி
    துண்மையெனச்
சிந்தைதெளிதி யெனத்தெருட்டி யபையமீந்து
    தேவியைப்பார்த்
தந்தநிலைமை யருள்செய்து மறைந்தானிலிங்கத்
    தருண்மூர்த்தி. (உஉ)

இன்னவாறெம் மிறைநிகழ்த்தி மறைந்தபின்ன
    ரிருடியர்கோ
னன்னையுலகீன் றளித்தமறை யணங்கைவாழ்த்தி
    யெழுத்தஞ்சு
முன்னியிருந்தால் சராசரங்கட் குயிராயிருந்த
    வொருமுதல்பான்

மன்னுமுமைதன் சத்திகளி ளுல்வர்தம்மை
வரநினைத்தாள். (உ௩)

நினைத்தகணத்து முரிபுருவ நெற்றியோடு
நெளிந்தலைகள்
கனைத்தகடலி னடுவுதிக்குங் கதிர்வாண்முகமுங்
கடும்படைக
ளனைத்துந்தரித்த கரநிரையும் பிறைவாளெயிறு
மண்டமிறத்
தோணித்தகழலுந் தழற்சிற்றத் தோற்றமொடுமாங்
கவதரித்தார். (உ௪)

நாகநடுங்க விருநான்கு
நகமுநடுங்க வரக்கர்படை
சோகமுறச்செந் தீக்கதிர்கால்
சூலஞ்சுழற்றுஞ் செங்கையார்
வாகைபுனைந்த முரட்புயத்தார்
மறலிவெருவுஞ் சீற்றத்தார்
சேகுளவுணர் பலகோடி
திரளைமேய்ந்த வாட்படையார். (உ௫)

வியந்துஞாலந் தொழுபேக வீரையுலவா
வீறுடைய
செயந்திபுகழ்வண் கஞ்சுகமெய்ச்செயர்மர்த்
தினிவெஞ்சிற்றமுறிற்

பயந்துமறலி முதலானோர் பணியுஞ்சண்ட
காதினியென்
றியைந்தநாமம் பெற்றுள்ளா ளெதிர்வேறொருவ
ரில்லாதார். (உசு)

(வேறு.)

தேவதேவனை யிகழ்ந்துள கொடியனைச் செகுத்து
நாவைவாங்குகோ நாற்கடற் பொதிதழல விக்கோ
மேவிமேருவைப் பிடுங்குகோ வறிகிலம் வேதப்
பாவையாதுகொல் பணியெமக் கென்றடிபணிந்தார். (உஎ)

வணங்கியின்னண நின்றவர்வா ண்முக நோக்கி
பிணங்கொள் வெம்படைத் தடக்கைமீர் நீவிர்போயிந்த
மணங்கொண் மாநகர்ப் புறத்தலை கடலெனவளைந்த
கணங்கொள் தானவர்க் கடிந்திவண் வருதிரென்றுரைத்தாள்.

அன்னையெம்பெரு மாட்டியையடிபணிந் தருடஞ்
சென்னிமேற்கொடு சென்றனர் சேண்விசும்புருவுங்
கன்னிமூதெயிற் புறம்புபோய்க் கவிந்துநாற்புறமுந்
துன்னுவோரிடந் துடித்துளந் துணுக்குறவார்த்தார். (உகூ)

வஞ்சிவேய்ந்தவர் வாய்விடும் வலம்புரியோதைக்
கஞ்சிவானவர் செவித்தலம் புதைத்தன ரழல்கால்
குஞ்சிவான்முடி நிசிசரர் கோளரிமுழக்கங்
குஞ்சரத்திரள் கேட்டபோற் கேட்டனர் குலைந்தார். (௩0)

மைக்கரும்புயல் வண்ணன்முன் னிழைத்தவஞ் சனம்போ
லிக்கொழுந்தலத் தெதிர்ந்துபோ ரெம்மொடும் புரிவான்

புக்கமாயையின் புணர்ச்சியோ புராரிமாதவர்க்காய்த்
தொக்கவீரத்திண்டோற்றமோ வென்கொலென் றயிர்த்தார்.

என்றுபற்பல வெருவுறுமனத்தினு ரெண்ணி
நின்றமந்திரத் துணர்த்துவார் நீங்கதாங்கமித்த
மின்றுநங்களுக் கியன்றதா லினிதுறைகனவிற்
றுன்றுதீக்கணுத் தோன்றலா லீறெனநினைந்தோம். (௩௨)

எண்ணமெம்மனோர்க் கென்னவாய் முடிந்ததென் றிரங்கித்
திண்ணனீங்கினோர் தேறிநின்றொருவழி சேர்ந்தாங்
கண்ணலங்கவி யானைவேற்றுனையோ டெதிர்ந்து
கண்ணழற்பொறி சிதறினர் கடுத்துநின் றார்த்தார். (௩௩)

மாதிரந்தொறு மிருந்தவர்வாய்மடித் துறுத்து
மீதுவந்துவந் ததிர்தலும் வெஞ்சிலை குனித்துக்
காதுதுர்க்கைய ரொருவருக் கொருவராய்க் கரையில்
சாதுரங்கவாஹினிகளு முலைந்திடத் தகைந்தார். (௩௪)

சிலையும்வேல்களுங் குந்தமுநாந்தகத் திரளு
மிலைகொன்முலமுங் கணிச்சியுங் கதைகளுமெடுத்து
மலைபிறுர்த்தமர் மலைந்தவர்தலையெலாங் கொடிய
கொலையினீர்ங்கணை மாரியாற்றனித்தனி குறைத்தார். (௩௫)

கரையில்வாம்பரி யிராசியுங் கந்துசொல்யானை
நிரையுந்தேர்களு நிருதருநிழன்மணிக் கழற்காற்
பரையின்வந்தபொற் பத்திரையணங்களுர் சிலைவாய்ச்
சொரியும்வெஞ்சர தாரையாற் சூறையாய்ச் சுழன்ற. (௩௬)

துவசமற்றன மார்பகம்பிளந்தன தொலையாக்
கவசமற்றன சிலைபலதுணிந்தன கனலாய்க்
குவிசினத்தொடு மெதிர்ந்தவர் கொடிஞ்சிமான்றேர்போ
யவசமுற்றனர் சிலர்சிலரிரிந்தனரவுணர். (௩எ)

மடங்கல்போற்சிலர் வாளெயிறதுக்கி வாய்மடித்துத்
தடங்கொள்வான்றொடு தருக்களைத்தருக்குறு சலத்தாற்
பிடுங்கிமேல்விடச் சயங்கொளும்பிறைமுகக் கணையாற்
கடுங்கணூர்கள்பல் லாயிரங்கண்டமாய்க் களைத்தார். (௩அ)

மதிக்கொளும்பிறை வாளெயிற்றவுணர்வெங் குருதி
நதிக்கணெண்ணில நடிப்பனவலகைகள் கவந்தங்
குதிப்பநோக்கியாங் குவப்பொடு குடங்கரங் கொட்டிக்
கதிக்கவார்ப்பன கூளிகள்களமெலா மன்னே. (௩௯)

இன்னதன்மையாங் கெய்திடச் சிலரெழுந்தோடி
மன்னர்நால்வர்முன் வாய்புதைத் திறைஞ்சிவானவரை
வென்றுறச்சயங் கொண்டுளீர் மெல்லியர்வடிவாய்
மன்னிநால்வரும் தானையை மடித்தனரென்றார். (௪0)

பேசருந்திறற் றானையைப் பேருலகிருந்த
பாசிளைச்சிறு மடந்தையர் படுத்தனரென்ற
வாசகஞ்செவிப் புகுதலுங்கடையுக வடவை
வீசருஞ்சிகை யொடுகொதித்தாலென வெகுண்டார். (௪௧)

அன்றுவாசவன் முதலினோர்யாரையும் யாம்போய்
வென்றவென்றியும் வீரமுமென்செய விறல்வாய்ந்

தின்றோராயிழை நம்பெருந்தானையை யிரியக்
கொன்றபுன்மையே சாலுமென் றோர்ந்துளங் கொதித்தார்.

வருகதேரென வெயிறுதின் றெழுந்தவக்கிரனை
யருகிருந்தபோர்த் தண்டகன் விலக்கினன் யான்போய்க்
கருகிருட்குழ லாளையோர் கணத்திடை யாவி
பருகுமீள்வனீண் டிருத்தியென் றுரைத்தடி பணிந்தான். (௪௩)

வன்மைமிக்கநம் மாற்றல்புன் மாதர்மேலாற்றல்
புன்மையன்றியும் பூவையராருயிர் கோறற்
றன்மையும்பழு தெனநினைந் தயர்ந்துளதக்கோ
ரின்மைகூர்ந்திடின் வெள்கல்போல் வெட்கமுற்றெழுந்தான்.

மட்டில்பாரவெஞ் சிலையினைவாய்மடித் தெடுத்தான்
புட்டில்விக்கினன் கவசமும்புயங்களிற் புனைந்தான்
விட்டழன்றவெஞ் சீற்றத்தான்முன்னவன் விடைகொண்
டட்டதிக்குளோர் நடுக்குறக் களத்தடைந் தார்த்தான். (௪௫)

கொற்றவாட்படை தோமரங் கணிச்சிவெங் குலிசங்
கற்றைவெங்கதிர்ச் சக்கரங்கதாயுத முசுண்டி
மற்றுமுள்ளன படைக்கல மெடுத்துவா ழவுணர்
சுற்றினார்திசை தெரிந்தில தூளியின்படலம். (௪௬)

ஆகவத்தடைந் தவர்தமை யணங்கனா ரழன்று
மோகரித்தெழு மவரைவிலக்கியோர் கணத்தின்
வாகைபெற்றியான் வருவலென்றடற்சிலை வாங்கி
யேகவீரையாங் கெதிர்த்தன ளவுணரு மெதிர்த்தார். (௪௭)

அழற்சரம்பல தொடுத்தன ரங்குசமெறிந்தார்
தழற்செய்சூலம்விட் டார்த்தனர் தடக்கையார்நேமி
சுழற்றிவிட்டனர் தோமரம்வீசினர் சுடர்போ
னிழற்செய் காலவேல் திரித்தனர் கதங்கவுணிருதர். (சஅ)

அரத்தவேணியள் வயிரவான் சிலைகுழைத்தன்னோர்
சிரத்தையாயுதத் திரள்களைத் திறற்சிலைகுனித்த
கரத்தைவாகுவைக் கவசத்தைப் பற்பலகளையா
விரத்தவாறுகத் துணித்தன ளிமையவர் மகிழ்ந்தார். (சகூ)

வந்துவந்தெதிர் மலைந்தவர் வடிக்கணைமழையாற்
சிந்தநோக்கிய தண்டசன்றேறொடுங்கடிதின்
முந்திமூரிவிற் குனித்தவள் வாண்முகநோக்கி
யுந்துசிற்றவெங் கனற்கணு ணொருமொழி பகரும். (ருo)

மண்ணிடத்துறை பேதையுன் மருங்குலும்வலியு
மெண்ணிநோக்கிடி னெக்குமென் றித்துணைப்பொழுதுங்
கண்ணிநோக்கியான் முழ்த்தன னன்றியுங் கலைசூழ்
பெண்ணெனப்பொறுத் திருந்தனனுதலாற் பிழைத்தாய்.(ருக)

தாரணிக்கண்மின் ஞருயிர்தடிந்தன னென்ற
பேரெனக்குவந் தருமமி பிழைத்றப்போ வென்னப்
போரரக்கர்கோன் புகலலும் புரத்தைமுன் பொடித்த
மூரலானென முறுவல்கூர்ந் தாயிழை மொழியும். (ருஉ)

கொண்டிரத்தமுந் தசைகளுநிணங்களுங் கொழுவு
முண்டளப்பருங் கழுதுகள்சுவைக்கவுன் னுடலைத்

தண்டகக்கொடுந் தானவசகத்திர கண்டங்
கண்டமாயொரு கணத்திடைப் படுத்துவன்காண்டி. (ருங)

என்றலுங்கொதித் திரும்பிலீ ரைம்பது துலாத்திற்
குன்றமன்னதோர் கொடுங்கதை சுழற்றிவா ளெயிறு
தின்றுவீசினுன் சேணிடிபோல்வரு மதனைத்
தன்றடக்கையின் றற்சனிவிரலினுற் றகர்த்தாள். (ருச)

விட்டவெங்கதை பொடிபட வெகுண்டொரு வரிவி
ஞெட்டளப்பரும் வடிக்கணை துரந்தவ ளுதலி
னிட்டபொற்பணித் தோள்களி னழுத்தலு மிமைப்பிற்
புட்டில்வெஞ்சிலைக்கவசமோர் பகழியாற்பொடித்தாள்.(ருரு)

வேறு.

காலவங்கியி ளேர்தடங் கைத்தலச்
சூலமொன்றவன் மீதுதுரக்கவு
மாலமன்னவ னுங்கொரு சூலம்விட்
டேலுமப்படை யிற்றுக வீட்டினன். (ருசு)

ஏகவீரைமற் றென்றெதி ரில்லதோர்
வேகவெம்படைச் சூலம்விடுத்தவ
னுகவெற்பை யகழ்ந்தவ ளுவியை
மாகமேற்றினள் வானவர் வாழ்த்தினர். (ருஎ)

தண்டகாசுர னுகந்தரைக்கனோர்
கொண்டல்தாழுங் குவடெனச் சாய்தலுங்
கண்டதேவர்கள் கற்பகப் பூந்தரு
விண்டநாண்மலர் வீசிசின் றேத்தினர். (ருஅ)

ஏகவீரை யிறையவர் கோயில்சென்
ரேகைகூர வணங்கலு மொண்மறைத்
தோகையங்கர்க் கீழ்த்திசைச் சூழல்வாய்
வாகைபெற்றங் குறைவா நல்கினள். (௫௯)

ஈண்டுதெண்ட கனிற்றசொற் கேட்டலு
மூண்டதீயின் முழங்கினன் பொங்கினு
னண்டுவீர வசுரனென்பா னெடுந்
தூண்டுதேரின னாகவந் துன்னினன். (௬௦)

கங்கம்வீழ்ந்த களத்தின் பரப்பெலாஞ்
செங்கணீருக நோக்கினன் றீப்புகை
தங்குகண்ணினன் றண்டகற் செற்றுளா
ளெங்கெனத்தன் னிதள்கடித் தானரோ. (௬௧

கயந்தரிப்பருங் கந்துகம் காற்பல
முயர்ந்த தேரொடுருத்திரத் தோற்றமா
யியைந்தவீரன்வந் தெய்தலு மீறிலாச்
செயந்திவீரச் சிலைகொடு முந்தினள். (௬௨)

சியவேறெனச் செஞ்சிலை வாங்கியோ
ராயிரம்பதி னாயிரங் கோடியாய்
மேயவன்னவண் மெய்யும் விசும்புமா
காயமுங்கணை யாகவிரப்பினன். (௬௩)

பித்தனங்கை பிடித்தபி னாகனே
ரொத்தவிற்குழைத் தொள்ளிழை யாளவன்

பத்திரத்திரள் மாய்த்தவன் பற்றிய
கைத்தலச்சிலை யைக்கடிந் தானரோ. (௬௪)

கார்பொழிந்தெனக் கைநொடிப் போதினிற்
றேர்கொடும்பரி சிந்திடத் தானவர்
மார்பகழ்ந்திட வாளிகள் செம்புலா
னீர்பரந்திட வெங்கு நிரப்பினான். (௬௫)

கொடிதகர்ந்தன குஞ்சர ராசிகள்
முடிபிழந்தன மொய்பரி மாநிரை
யடிதுணிந்தன வாடகத் தேர்கள்போய்ப்
படிபடிந்து கிடப்பன பற்பல. (௬௬)

ஆதிநூல்வடி வாகிய வம்பிகை
பாதமுன்னியப் பாதகர் தம்பெருந்
தீதில்கொற்றத் திரட்டிறற் றுணையை
வாதநேருறும் பூளையின் மாற்றினான். (௬எ)

வெய்துநோக்கிய வீரன் வெகுண்டுமுன்
கைதெரிந்துள விச்சுவ கன்மனாற்
செய்தவெங்கதை வாங்கிச் செயந்திமுன்
பெய்தியுங்கரித் திட்டெறிந் தானரோ. (௬அ)

உற்றதண்ட மதோடை மதக்கைமா
நெற்றியிற்றுரும் பாயெள்ளி நெய்கமழ்ந்
தெற்றருங்கதிர்ச் சூலமெடுத்தவன்
கொற்றவாவி குடித்திட வீசினான். (௬௯

தடுக்கமற்றொரு சூலந்தறுகணன்
விடுக்கவாங்கதை வீட்டி விரைந்துபோ
யடுத்தவீரன தாகமகழ்ந் துயிர்
மடுத்துமீட்டுஞ் செயந்திகை வந்ததே. (எ0)

வீறுசால்புய வீரனவ் வாக்கைநீத்
தீறில்தேவுரு வெய்தி விமானமீ
தேறிவென்ற செயந்தியை யேத்திவிண்
ணூறுசென்று கயிலையை யண்மினான். (எக)

வென்றிவாய்த்த செயந்திவிரைந்துபோய்
மன்றல்வார்குழ லாரணவல்லிமுன்
னின்றுதாழ்தலு நீயிந்த மாநகர்த்
தென்றிசைக்க ணுறையெனச் செப்பினாள். (எ௨)

இத்திறத்து நிகழ்ந்தவை யோர்ந்தெழீஇ
மைத்தகார்நிற வஞ்சக னூறரி
யொத்ததிண்வலி யானுருத் தெய்தினன்
மர்த்தினிப்பெயர் மாதவண் முந்தினாள். (எ௩)

கொம்பன்னாளைக் கொடியவன் கண்ணுறீ
யெம்பிமார்வலி யீர்ந்திடு நுங்களைக்
கும்பமாவினைக் கோளரி கோறல்போற்
செம்புலாலுடல் சேதித்துங் காண்டியால். (எச)

பின்னர்தங்களிற் பித்தினை யாதலாற்
புன்னுனிப்பனிப் போதினி லாங்கவர்

மன்னுதானத்து நின்னையும் வைப்பதற்
குன்னினேமது காண்டி யுணர்விலோய். (எரு)

வேறு.

தானவன் மருத்தினி சாற்றக் கேட்டலு
மானவெஞ் சினக்கனல் மனத்தைத் தீய்த்திட
வானவர்த் தெறுமொரு வயிரவாட்கைகொண்
டானவ டோள்கண்மே லடர்ந்து தாக்கினன். (எசு)

படைச்சுடர் வாளது பருப்பதங்களி
னிடைப்படு மண்ணென விற்றகாலையிற்
றொடைப்புய வஞ்சகன் சோபமுற்றுவாய்
விடப்பருங் கைவலி விறலிற்குட்டினள். (எஎ)

ஊழிவான் முகிலிடி யொருபொருப்பிற
வீழுமாறெனவவன் மீதுதாக்கலும்
பாழிமா முடிபகிர்ந் தறுகுபாய்ந்தபோர்ச்
சூழிமால்யானையிற் சோர்ந்து சாய்ந்தனன். (எஅ)

பருத்தவெண் புகழ்பெறும் பவாநிகூடலின்
மருத்தினிக் குயிர்தரும் வஞ்சகன்றனை
யுருத்திர கணங்கள்கொண் டோங்குவெள்ளிவெற்
பிருத்தின ரிமையவ ரெவரும்வாழ்த்தவே. (எகூ)

மர்த்தினியருமறை மடந்தை முன்புசென்
றித்திற நிகழ்த்தியாங் கிறைஞ்சநோக்கியிச்
சித்திர நகர்க்குமேற் றிசைக்குக் காவலாய்ப்
பத்தியின் வைகெனப் பணித்திட்டாளரோ. (அ0)

வாவுமாத் தண்டகன் வீரன்வஞ்சகன்
மூவருங்காளியா மூவர்கையினு
லாவிநீத் தருங்கதி யடைதலீதெனத்
தாவில்சீர் முனிவர்க்குச் சூதன்சாற்றினன். (அக)

அடுந்திறற்காளிய ரவுணர் மூவரைத்
தடிந்தவா றுரைத்தனை தயவினின்னமுந்
திடம்பெறு சண்டகா தினியவ் வக்கிரற்
கடந்ததுங் கூறெனக் களறன் மேயினன். (அஉ)

# ஐந்தாவது தூர்க்கையவதாரச்சருக்கம்.

## முற்றிற்று.

ஆகச்சருக்கம் ரு-க்கு விருத்தம். (உகக.)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆறாவது

# வக்கிராசுரன் கதிபெற்ற சருக்கம்.



தக்கிரந் தொறுவரிற் றனிலயின்றுளோன்
சக்கரம் பெறவரு டலைவன் வைகிய
தெக்கண வளகையாந் தெய்வவைப்பிடை
வக்கிரன் பதம்பெறும் வண்மைகூறுவாம். (க)

தவலருங் கேண்மையோர் கேட்கத்தாபத
னுவலுவான் பின்னரு நொசியுநுண்ணிடைத்
துவரிதட் சசிபுணர் தோன்றலாதியோர்
சுவல்பதம் படச்செலத் துரந்தவக்கிரன். (உ)

சீற்றம்வந் துறிற்றனைத் திரணத்தெண்ணுவான்
காற்றென வுலகெலாங் கமனஞ்செய்குவான்
கூற்றமுங் காண்குறிற் குலையுங் கொற்றத்தான்
கீற்றுவெண் பிறையெனக் கிளர்ந்த தந்தத்தான். (௩)

கதங்கொடு கிழல்சுழித் தெதிர்ந்து கந்துகொன்
மதங்கவிழ் தறுகண்மான் மத்தவாரணஞ்
சதங்கொடு சதப்பெருக் கெண்ணிற்றங்கிய
பதங்கொளும் புயத்தினன் பகுந்தவாயினன். (௪)

நனைப்பருங் கற்பக நாடுநதெண்டிரை
கனைப்புறு மோரொழு கடலுந்தேர்கொடு
சினைப்பருங் காலெனச் சென்றுசுற்றியே
நினைக்குமுன் ருன்பயினிலையுளெய்துவான். (ரு)

அன்புறத் தன்னொடொத் தமைந்தமாரத
ரொன்பதி னுயிரத் திரட்டியோருளான்
பொன்பயி னேமியம் பொருப்புமேருவு
மின்புற வினைத்தென விறுகுந்தோள்களான். (சு)

பூண்பொலிந் திலங்குதோட் புலவர்கோன்முதற்
சேண்பயில் சூரர்க டிசையுளோர்சமர்
மாண்புற வந்தெதிர் மலைந்தபோதிவன்
காண்பது பின்னலான் முகங்கள் கண்டிலான். (எ)

இன்னபே ராற்றலி னிருந்துளானெதிர்
மன்னினர் சிலர்காம் வாய்புதைத்துநின்
றுன்னலர்க் கிடியனு யும்பிமாரெலா
மன்னினர் தென்புலங் கன்னிமாதரால். (அ)

கேட்டனன் கடையுகங் கிளர்ந்தவங்கிபோ
னுட்டநீர் நெருப்புக நக்கவெண்பிறைக்
கோட்டெயி றதுக்கிவான் குலையக்கொல்படைத்
தோட்டுணை நோக்கினுன் றமோர்னை நோக்கினுன். (கூ)

தடையகல் கேசரி சைலமாமுழைஞ்
சிடைபசித் திபங்கண்மே லெழுந்தபோலெழுந்

தடையலர் சொரிந்தகூ ரயிலுமாழியும்
பொடிபட வச்சிர கவசம்பூட்டினுன். (௪0)

கொலைசெயுஞ் சரமெனுங் கொடியநஞ்சுமிழ்
சிலையெனும் பாந்தளைத் தேவராதியோர்
கலையயில் புற்கள்வாய் கவரவென்றதோண்
மலைமிசை யேற்றினன் மடித்தவாயினுன். (கக)

எடுத்திட வெடுத்திட வெஃகமெஃகமாய்க்
கொடுத்திடுந் தூணியுங் குவவுத்தோட்புறந்
தொடுத்திடக் கட்டினன் சுருகியோன்றரும்
படைக்கல முள்ளன பலவுமேந்தினன். (கஉ)

பரசொடு சூலம்வெம் பாசநாந்தகங்
கரசிரகேடகங் கடிய வாளயில்
சிரசிடைச் சிலவர்கள் தாங்கித்தெண்டிரை
முரசமுங் கிழ்ப்பட வந்துமுந்தினர். (கங)

கடகரிபரிபல கட்டி யீர்த்திடுந்
தடநெடுந் தேர்கொடு பாகர்சார்தலுந்
தொடுகழ வவுணர்க டோன்றல்பேரியும்
படகமு முழங்கியாற் பரிக்கவேறினன். (கச)

விண்ணவர் வக்கிரன் வீரத்தன்மையைக்
கண்ணுறீஇ நடுங்கினர் கலங்குநெஞ்சின
ரண்ணலம் பணுடவி யாதிசேடனுந்
தண்ணெனப் பஃறலை துளக்கினரோ. (கரு)

தேரொலி மும்மதஞ் சிந்துசிந்துரக்
காரொலி விலாழிவாய் கலுழுங் கந்துகப்
போரொலி யவுணர்தோள் புடைத்துத் தாக்கிய
பேரொலி திசாமுகம் பிதிரவீங்கின. (கசு)

மாற்றல னெனப்பகர் வறியகானிலே
யாற்றலாற் பற்றிவா யருந்திநீற் றிடச்
சீற்றவெங் கனற்கடுந் தீயைமூட்டிடுங்
காற்றெனுந் தளத்தொடுங் களத்தைநண்ணினன். (கஎ)

பங்கமி லெம்பியர்ப் படுத்தபேதைய
ரெங்குளார் வரவென விளைத்தகொற்றவெண்
சங்கொலி யங்குள சண்டகாதினி
மங்கைதன் றிருச்செவி மடுத்தகாலையின். (கஅ)

கறைகெழு முத்தலைக் கடியசூலங்கொண்
டிறையவன் முப்புர மெரிக்கத் தோன்றிய
முறைமையிற் படைக்கல முழுதுமேந்தியாண்
டறைகழ லணங்கம ரகத்தையெய்தினள். (கக)

வந்தவ டனைக்குறித் தழற்கண் வாய்ப்பொறி
சிந்தவின் றன்னையுஞ் சிறிய வெம்பியர்
தந்திறங் கவர்ந்துளார் தமையு மாதபன்
மைந்தன்மா நகர்குடி வைப்பன் காண்டியால். (உ0)

கொத்தழற் செங்கணன் கூறமூரலுற்
றித்தனை வலியுமுன் னெதிரில் வீரமு

மத்திர மொன்றினு லறஞ்செய் யார்கடங்
கைத்தென விமைக்குமுன் கடிவன்காண்டிநீ. (உக)

பிறர்மனை நச்சினேர் பெருமைகேண்மைநல்
லறமினை குறைதல்போ லடைந்து நின்னுளேச்
செறிபவர் தம்மையுந் திரணப் போதினீண்
டெறிசுடர் வாட்கிரை யிடுவன்காண்டிநீ. (உஉ)

கொற்றவை குறுநகை கோட்டியிவ்வணஞ்
சொற்றசொற் கால்செவித் துருத்தியூடுபோ
யெற்றெறுஞ் சினக்கன லெழுப்பவிந்திரன்
மற்றெறுஞ் சிலையைவாய் மடித்துவாங்கினுன். (உங)

வடிக்கணை கடையுக வருடநேரெனத்
தொடுத்தனன் ருெடுத்தலுஞ் சுருதிநாயகி
யடித்தல மிணைந்துபோ ராழிமேலிவர்ந்
தெடுத்தன ளொருசிலை யேமவெற்பென. (உச)

விரைவினிற் குனித்தவன் விசிகராசியி
னிரையினைத் தொலைத்துமே னிரப்பிடும்பல
சரநிரைத் தாரைக டடக்கைமர்மத
வரைகளைப் புரவியை மடித்தவாலரோ (உரு)

இரைந்தன ரவுணரிங் கிருவர்கார்முகஞ்
சொரிந்திடு வடிக்கணைத் துங்கமாரியால்
விரிந்தன கடல்களும் விசும்பும் வேணியுந்
தெரிந்தில வமரருந் திடுக்கமெய்தினர். (உசு)

வேறு.

எரியொக் குங்கணூ ரிருவருமிடம்வலங் கறங்காய்த்
திரியக்கண்டிலாத் தேவருந்தீச்சிலை வழங்கு
மரியொக்குஞ்சர வனன்முகம் படப்படப் பஞ்சாய்க்
கரியக்கண்டனர் தானவர் சேனைவெங்கானம். (உஎ)

தன்னையொப்பருஞ் சண்டகாதனியெனும் வீரக்
கன்னிமற்றொரு கன்னலின் வக்கிரன் கடவும்
வன்னெடுந்தடந் தேரினைப் பாகரைவயிரக்
கொன்னுதிச்சர தாரையாற் குலைந்திடக் குமைத்தாள். ()

ஒல்லையிற்பருந் தரையிடைக் குதித்தொரு நொடியிற்
கொல்லயிற்படைக் கூற்றனூன் குரைகழன் முழங்கப்
பல்விதப்பதி னுயிரயோசனைப் படிவாய்
வல்லையிற்றனி தோன்றினன் வரிசிலையோடும். (உகூ)

அருவரைப்புயத் தவுணர்கோ னூற்றலினமைந்த
வுருவநோக்கினூ டானுமவ்விருமடங் குருவா
யிருமையிற்பொலிந் திண்டினுளிமையவ ரெவரும்
வெருவவெஞ்சிலை குனித்தனர்விளைத்தனர் வெம்போர்.

மங்குறேய்ந்திடு வானகநோக்கினும் வளைந்த
வங்கண்மாகில நோக்கினுமாசையை நோக்கிப்
பொங்குமோரேழு புணரியைநோக்கினும் புவன
மெங்குநோக்கினு மிவர்சிலை யுமிழ்ந்திடுஞ் சரங்கள். (௩௧)

பட்டதானவ ராக்கையைக் கரியவாம் பரியை [றுகக்
வெட்டியீர்த்துடற் குறைகுவைத் தொன்றொடொன்றி

கட்டியாடுவ கவந்தம்பந் தெறிந்திரு காங்கள்
கொட்டியாடுவ பூதமுமலகையின் குழாமும். (௩௨)

இன்னவாறம ரியற்றுவேற் சயமகளென்னும்
பொன்னனுள்புயப் பொருப்பின்மே லழற்சரம்போத
மின்னெயிற்றவன் விடுத்தலும் வெகுண்டொருகணத்தி
லன்னலாள்புன லம்புதொட் டாங்கலதயறுத்தாள். (௩௩)

பண்டுனோன்முகன் பாற்பெறு பத்திரம் பணைத்தோட்
சண்டகாதனி யுரத்திடை யுடற்றினன் றழற்கட்
டிண்டிறற்சினச் சயமகள் செக்கர்வானிறக்கைக்
கொண்டல்வாளிவிட் டககணை யாற்றலைக்குறைத்தாள்.

அரக்கர்கோன்கதி ராழியான் சரந்தொடுத் தார்த்தான்
புரத்தைவென்றருள் புங்கவன் பொருகணை விடுத்தச்
சரத்தைமாற்றின டானவன் பன்னகவிசிகந்
துரத்தினனதை யுவணவெம் படையினாற் றுலைத்தாள்.

சிங்கவாளிவிட் டார்த்தனள் சிங்கவாகினிகார்
மங்குல்போல்பவன் சிம்புள்வெம்படையினன் மாற்றிப்
பங்கமோகவெம் படையெடுத்துடற்றினன் ஞானப்
புங்கம்விட்டதைப் போக்கினளொருதினைப் போதின்.

பொருதவீரனிப் பூவையைச் சரங்களால்வெல்லற்
கரிதெனத்துணிந் தொருகதை யங்கையாற் சுழற்றிக்
கருதிவீசலுங் கதைபலகண்டமாச் சிதைத்தா
ளொருதினைப்பொழு தினிலுலை பழுத்தகூர்ங்கணையால்.

வேறு.

அண்டகோடிகள் பதைக்கவன்றுவரு மந்தகாசுரனைமானு மித், திண்டிறற் சினவில் வீரனென்றுசில சிந்தியாவடு திறற்சி னச், சண்டகாதினியொர் கொற்றமுந்திய சரந்தொடுத்தவன் வணங்கிடும்,பண்டயன்கணுறு கவசமுஞ்சிலையி னுணையுந் துணி படுத்தினள். (௩அ)

வச்சிரத்தனைய கவசமற்றுமடல் வரிசிலைக்குணமறுந்துமாங் கச்சமற்றமன வலிநிசாசரனை ரயிலெடுத்தனை யகழ்ந்துடற் பச்சிரத்தம தருந்தியாருயிர் படுப்பலென்றெதிர் விடுத்தனு மெய்ச்சுவற்கமுறை வோருவப்பவொரு வேல்தொடுத்ததனை வீட்டினள். (௩கூ)

சூறையிற்கடிது கொலைபழுத்தொழுகு துங்கவாள்கிடுகு கொண்டெதிர், மாறியொத்தட லமர்க்களத்திருவர் மலைவுறு ம்பொழுது நெடுவிசும், பாறிடைக்கருணை வேதவல்லிதிரு வருளினுகுமச ரீரியொன், றீறில்கொற்றமுள சண்டகாதினி தன்னிருசெவித்தல நுழைந்ததே. (சo)

ஆய்வுறும்பல படைக்கலங்களிலி வவுணர்புங்கவன தாரு யிர், மாய்வதின்றயன் வழங்கியிட்டபெரு வரமுமன்னதடு மா றகேள், தீயவெங்கொலைய மயிடமந்தக சிருங்கமொன்று கொடு தெற்றென, மேயவிங்கிவ னுரம்பகுந்துயிரை வீட்டிநல் லகதி காட்டென. (சக)

இருவிசும்பிடை யெழுந்தவாய்மைமொழி யிவ்வணஞ்சொ லவுணர்க்குவெங், கரியசெங்கண்விரி கவையடிக்குறிப கா

விறற்கடமை யுலவையொன், றுருவியங்கவ னுரம்பகுந்திட
உடற்றினுள்குருதி யாறுக, வருவியஞ்சைல மெனமபங்கியெதி
ரவுணர்புங்கவன் வீழுந்தனன். (சஉ)

பொறிகலங்கியலம் வந்துசோபமொ டிரண்டரைக்கடிகை
போதலு,மறிவுவந்தினி துதிக்கவாணவ மகன்றுசத்துவ குண
த்தனுப், நிறையுமன்பினிரு கண்கணீர்கலுழ நெஞ்சகங்குருகி
ந்ருக, மறைதொழும்பெரிய சண்டகாதினியை நோக்கிவக்கி
ரன் வழுத்துவான். (சஙு)

முன்னைநான்மறை முடிக்குமெட்டரிய முதல்வியாயுலகமே
ழினுக், கன்னையாகியுள நின்னையொன்றுமறி யாதபுல்லறிவி
னுபினேன், மன்னியிங்கரி னின்னெடுஞ்சமர் மலைந்தவென்
பிழை பொறுத்துமற், றென்னையுய்யும்வழி செய்தனின்கடன
தென்றுமீளவுமியம்புவான். (சச)

மெய்தருஞ்சுருதி வாய்மைதெய்வபல மில்லவற்குமிகு துன்
மதி, யெய்தலுண்மையதெனத்தெருட்டுமொழி யென்னிடை
ப்பெரி திருந்தசா, னெய்தலொண்கண்மலை வல்லிநீயெனநினை
ந்திடாதுமறநெறிபல,செய்தனன்கொடிய பாவியேனருள் செ
றிந்திடுங்கருணை யங்கனுய். (சரு)

என்றுபற்பல பணைக்கரஞ்சிர மிணைத்திரங்கின னியம்பலு
மன்றலங்குழன் மடந்தைவாண்முக மலர்ந்துபேருளளித்துநீ
யொன்றுமஞ்சலை யுனக்குவேண்டுவ துணர்த்தியீகுது மெனத்
தொழா,வன்திறற்கரிய குன்றமன்னபுய வக்கிராசுரன் வழுத்து
வான். (சகூ)

(வேறு)

கன்னியர்க் கரசேசுின்னைக் கண்களாற் காணப்பெற்ற
நன்னலப் பலத்தினாலு நான்மறைக் கரிதாமிந்தப்
பொன்னெியங் தலத்துநின்றே டியானமர் புரிந்ததாலு
மென்னுடை நாமமென்று மிந்நகர்க் கிருத்தல்வேண்டும். (சஎ)

பருந்திரை யுறழ்பவாகிப் பரஞ்சுடர் தனக்குமென்பே
ரிருந்திட வேண்டுமுன்கை யெறுழ்வலிப் படையாற்சால
வருந்துமென் னுவிக்கிந்த வைப்பிடை விரைவின்மேதிக்
கருந்தலைச் சிருங்கம்வாங்கிக் கதிபரிந்தளிக்கவேண்டும். (சஅ)

இவ்வண மன்புளோனு யிரத்தலும் விரைவின்வேதத்
தெய்வநாயகியைச்சண்ட காதினிசென்று தாழ்ந்தெம்
மையனையிறைஞ்சியிவ்வா றுரைத்தலு மருள்கூர்ந்தன்ன
செவ்வர மளித்துமற்றுந் திருவருள்சிறப்ப நல்கா. (சகூ)

பருங்கைமா வுரிப்பிரானும் பரையுமுன் பணித்தவாறே
கருங்கழனிருதர்வேந்தைக் கருணைகூர்ந் துரத்துண்மேதிச்
சிருங்கவெம் படையைவாங்கச் சிவசிவவெனக்கைகூப்பி
யொருங்குபே ராவிவிட்டா னும்பர்பூமாரிதூர்த்தார். (ரு0)

அந்தரத் திருந்தோர்தெய்வ வாடகமணிவிமானம்
வந்தொரு கணத்தினெய்த , வடிவமுந் தேசாய்த்தோன்றிப்
பைந்தொடி தன்னைவேதப் பாவையைப் பவாகிகூட்
லெந்தையை வாழ்த்திமேற்கொண் டெய்தினன்கைலைக்கம்ம.

கயிலையை யடைந்துதெய்வக் கணங்களிற் பொலிந்தானிப்
பான், மயிலியற் சாயற்றண்ட காதினிமடந்தைவேணிப்

புயல்கிடந் துறங்குஞ் செங்கேழ்ப் பொன்முடிக்கோயிலெய்தி
யயில்புரை நெடுங்கட்செவ்வா யாபணக்கொடியைத்தாழ்ந்
தாள். (ருஉ)

பத்தியின் வணங்கிநின்ற பத்திரைதனைப் பவானிக்
குத்தரதிசையின்வைக வுவகைகூர்ந் தருள்செய்தோங்குஞ்
சித்திகள்பலவுநல்கி விடைதந்தாள் தேவர்போற்றக்
கத்திகையோதிமின்னாள் வடதிசைக் காவல்பூண்டாள். (ருங)

வென்றிகொள் குணபாலேக வீரையுஞ் செயந்திமின்னாள்
தென்றிசை யிடனுமேல்பாற் செயமருத் தினியுந்தெவ்வர்க்
கன்றிய சீற்றச்சண்ட காதினிவடக்குமாகி
மன்றலம் பவானிகூடல் வைகினு ருலகமுய்ய. (ருச)

கேசவன் புகழுமந்தா கினிநதி கிடந்ததெய்வக்
காசியம் பதிக்குக்காரி காவலாயிருத்தல் போலப்
பாசிழைத் துர்க்காகன்னிப் பாவையர் பவானிகூடற்
றேசுள நகர்க்குநான்கு திசைகளுஞ் சிறந்தாரன்றே. (ருரு)

அங்கண்மா ஞாலத்துள்ளோர் யாரேனு மனையகன்னி
மங்கையர்ப் பூசையாற்றி வணங்கிடி னினைத்தயாவும்
பொங்கமா யடைந்துவாழ்வர் புரவலர்பூசித்தாரேற்
றுங்கமா நிதிக்கோவாகித் துன்னலர்க் கடந்துவாழ்வார்.(ருசு)

மண்ணிடை வானங்குன்றின் மதிநுதற் கருங்கட்செவ்வாய்
வெண்ணகைத் துர்க்கைமாரை வேண்டிமெய் யன்பிற்பூசை
பண்ணிடின் மாரிபெய்து பலவளஞ் சுரக்குமிந்தப்
புண்ணியக் காதைகேட்கிற் போதவுஞ் செயங்களுண்டாம்.()

இனையபே ராற்றற்கன்னி யேந்திழை மார்களாலவ்
வனகழற் புனைகாற்றிண்டோள் வக்கிரனுதியாய
முனைகெழு மவுணர்யாரு முடிந்தபின்முனிவர்கோமா
னனையதொல் பராசயோகி யளப்பருங் களிப்பிலாழ்ந்தான்.()

(வேறு.)

தொக்கநான் மறைதேர் முனிவர்முப்பொழுதுந் தொழவருள்திருநண்ணுவுடைய,முக்கணனடியார்க்கெளியனுதலினுன் முறைமையின் வக்கிரன்வேண்ட, வக்கிரபுரமென் றங்கர்க் கியற்பேர் வளம்பெறவமைத்தனன்றுனும், பொக்கமில் தவத்துவக்கிரேசுரனுய்ப் பொலிந்தன னிரம்புமாதரவால். (ருகூ)

காதமர்பணிலக் குழையினனருளால் வக்கிரன்கதிபுகுநீர்மை
யீதெனச்சூத னியம்பலுமிறும்பூ தெய்தியசவுனகராதி
மாதவரானு மகிழ்சிறந்தந்த மருந்தருஞ் சிவக்குறிவளனு
மோதருங்கடவுட் டீர்த்தமுமுறையி னுணர்த்துதி விரித்தினி
யென்றுர். (சூ0)

திருச்சிற்றம்பலம்.

## ஆறுவது வக்கிராசுரன் கதிபெற்றசருக்கம் முற்றியது.

ஆகச்சருக்கம் சூ.க்கு விருத்தம்-(௲ருக)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

# அமுதலிங்கப் பிரதிட்டை.

## வரலாறுரைத்த சருக்கம்.



மகந்தவாதியற்று முனிவர்சூழ்பவாரி வைப்பிடை வக்கிரன் கயிலை, புகுந்தவாறினிது புகன்றனமினியப் புண்ணிய நகரிடைமுன்னாண், முகுந்தனுங்களித்த வாடகக்குடத்து முதிர்சுவை யாரமுதெடுத்துச்,சுகந்தமாரிலிங்கப் படிவமாய்ப் பதிட்டைதொன்முனிபுரிந்தமை சொல்வாம். (க)

கரிசறத்துயர்ந்த சவுனகராதிக்கடவுண்மா முனிவரர்கேட்பவுரைசெய்வான்சூதன் றொல்லைநாளவுண ரொல்லையி லொழிந்தபின்பராச, னிரைசெறிவதரிநீழனாயகன்சந்நிதிக்குமேனிருதியின் றிசைவா, யரிதினிலாழ்ந்து கிடந்தவாரமுத கடந்தனையகழ்ந்தனனெடுத்தான். (உ)

படிமிசைப்பன்னாண் மண்சிலைமாரிபதித்திடப் புதைந்ததெள்ளமுதங், கடினமாயொன்றாய்த் திரண்டிடநோக்கிக் களிப்

பொடு கங்கைதேக்கெறிய,முடியுளபரம லிங்கவாகார மீதெ
னமுனிவர்கோ னினைந்தாங், கடியவர்பலர்க டம்மொடுமமுத
வருட்குறிபதித்திட நினைந்தான். (௩)

ஆர்த்தலைபுரளும்பாற்கடலமுதமாழ்ந்திடு முழைஞ்சினையமு
த,தீர்த்தமாயிரற்றி யன்னதிற்கங்கைச் செழுநதியாகியதெய்வ
நீர்த்திருநதிக ளனைத்தையுமாவா கனஞ்செய்து நிருமலனருளா
லேத்தருமுனிவர் கமண்டலதீர்த்த மெவையுமவ் வோடையி
ற்பெய்து. (௪)

எண்ணருந்தவத்தோர் தம்மொடுமந்த வெழிற்சுதா சங்கம
தீர்த்தப், புண்ணியத்தடத்தைப் பூசனைபுரிந்து பராசரன்
போதவைந்தெழுத்து, முண்ணினைந்தாடி விதிமுறைக்கடன்க
ளுவகையின்முற்றியபின்னர்ப்,பண்ணவர்மூவா யிரவருஞ்சங்
கற் பத்துடன்குடைந்தறமுடித்தார். (௫)

பூத்தருள்சொரியுங் கற்பகநாட்டுப் புண்ணியக்கடவுள ருவ
ப்பக், கோத்திரத்துயர்ந்த பிதிர்க்கடவுளர்கள் குதுகுலித்துவ
கைமீக்கூரக், கேத்திரபிண்ட மிரணியசிரார்த்தமெனமறைதி
ளர்த்தியவனைத்து,மாத்திரிதண்ட வைதிகமுனிவர் வரன்முறை
வழாதவண்முடித்தார். (௬)

எல்லையிறவத்தோர் தம்மொடும்பின்ன ரிகபரமுணர்ந்து
யர் பராசன், வல்லையினெழுந்து மறையொடுந்தெய்வ மங்க
லதூரிய முழங்கத், தொல்லையவ்தரி மூலநாயகனை வலஞ்செ
ய்து சுதாகடத்தொடும்போந், தல்லுறழ்கண்டத் தெந்தை
யாலயத்துக் கணித்ததாநிருதியின் றிசைக்கண். (௭)

சம்புமாதேவன் சங்கரன்சைவச் சங்கமச்சிவக்கொழுந் திருக்கைக், கம்பிடுதூரத் தடைந்தனர்சைவ வாகமமுறையின் வேதிகைசெய், தும்பருமியக்கு மங்கலமுகுர்த்தத் தொளிதிகழ்திப்பிய வமுதைத், தம்பருங்கரத்தா லிலிங்கமாய்த்திரட்டிப் பராசரன்ருபனஞ்செய்தான். (அ)

சுதிதருமமுத விலிங்கநாயகனைக் காவிரிகரைபொருபவானி, நதிநடுநிலத்துப் பதிட்டைசெய்தன்பர் ஞானமாதவர் சுரரோடும், விதிமுறைவழாது பூசனைமுடித்து வேதமோர்நான்கினும்விளங்கு, முதுமொழிப்பயனுற் றடங்கணீர்புரள முன்னர்நின் றிறைஞ்சினன்றுதித்தான். (௯)

வலந்தருபுலிக்கான் மாதவன்மழலை மதலைபால்வேண்டிடவிரங்கி, நலந்தருதன்பா னறுங்கடல்பரிந்து நல்கியசம்பனேபோற்றி, சலந்தருங்கனகன் ருக்கியதூணிற் சனித்திடுமோனிடமடங்கற், கலந்தசெங்கதிரோ னனையகூராழி யளித்தருளமலனேபோற்றி. (௧0)

பொருப்புரங்கடந்த புங்கவன்றன்னைப் புறந்தரப்பொருதவன்றந்தை, யுரப்பரும்புயங்க ணெரிந்திடவொருசற் றூன்றியதாளிணைப்போற்றி, முரிப்புறபுருவ நெரித்துவாய்மடித்த முயலகக்குறளினைச் செந்தீக், கரப்பருங்கண்கள் பிதுங்கிடமிதித்த கழன்மலர்க்காலிணைப்போற்றி. (௧௧)

அடுத்தளிநெடுமான் பூட்டியகன்ன லஞ்சிலைகுனித்தலர்க்கணைக, டொடுத்தவனுகம் தூள்படச்செந்தீச் சொலித்திடு நுதற்கணைப்போற்றி, முடுக்குறுகொற்ற நிசிசரர்புரங்கண் மூன்

றையுமொருதினைப்போதின், மடுத்தெரியுண்டு தேக்கிடவழங்கும் வாணகைக் குரிசிலேபோற்றி. (கஉ)

திருந்துமாலயனு மிருவிலங்கிண்டுஞ் சிறகடித்தெழுந்துமேற்பறந்தும், நிரந்தரந்தேட வண்டமூடுருவ நிமிர்ந்தருள் சோதியேபோற்றி, பரிந்துபேருணர்வாற் பற்றெலாமற்றுன் பதமலாற் பரம்பிறிதிலையென், றிரந்திடுமேழை யெம்மனோர்க்கிரங்கி யெளிவருமீசனே போற்றி. (கங)

கந்தடுதறுகட் கடாங்கவுட் பனைக்கைக் கதக்களிற் றுரியனே போற்றி, யந்தகனுவி பறித்தசெஞ்சூல வடற்படைச் செங்கையாய்போற்றி, வந்தெதிர்கூற்றை மடித்தொருமறையோன்மைந்தனுக்காருயிரளித்த, சந்திரமவுலிச்சடையனேபோற்றி சங்கராசயசயபோற்றி. (கச)

ஞானநாயகனு யடியனுக்கிரங்கி நறுஞ்சுதை கவர்ந்திடவெழுந்த, தானவர்க்கடிந்திவ் வதரிகாவனத்துட் சந்ததம்விளங்கியென்பொருட்டால், வானவர்க்கரிய சுதாமயவிலிங்கவடிவமுமாயினையென்று,மேனிமிர்செங்கை முகிழ்த்துநாத்தழும்ப விவ்வணம் விமலனைத்துதித்தான். (கரு)

மறைவழியொழுகும் வைதிகவிரதர்தம்மொடும்வடித்தபேரன்பா, னிறைதருபராச னிம்முறையுணர்வா னிமலனைப்பழிச்சவுநீலக், கறைகெழுமிடறும் பிறைதவழ்சடையுங் கரதலப்பொலிவு மெண்டோளு, மெறிகதிர்மூர னிலவொடுந்தோன்றியிறைவனவ்விலிங்கமூடெழுந்தான். (கசா)

கரந்தை யஞ்சடையான் வெளிப்படக்கண்ட கறையறுமு னிவர்கோனுருகிப், பரிந்தெதிர்சிறப்ப வருளலைகொழிக்கும் பார்வையான் கடைக்கணுேக்கி, யருந்தவநீயிவ் வமுதிஞலி லிங்க மமைத்திவண் பதிட்டைசெய்தன்பாற், புரிந்தபூசனையா ன்மகிழ்ந்தனமெனத்தன் பொன்முடியசைத்திவை யருள்வான்.

தலங்களின்மேலாந் தலமிதின்வதரிச் சாகைவாய் முளைத்தி டுமூல, விலிங்கம்விட்டகலா துறைதல்போலிந்த வெழிற்சுதா மயம்போலிந்திலங்கு, நலங்கொளிக்குறியின் வைகுவோமிந்த நற்சுதாமயசிவக்குறியை, யிலங்கியார்பூசித் திறைஞ்சினுமூல விலிங்கபூசனைப்பல மடைவார். (கஅ)

அறநெறியிகழ்ந்தோர் குரவரைப்பழித்தோ ரந்தணரரும் பொருள் கவர்ந்தோர், பிறர்மனைவிழைந்தோர் பொய்மொழி நாளும் பிதற்றுவோருன்சுவைத்துண்போர், நறவினைக்குடிப் போர் துணிந்துபெரய்ச்சான்று நவிலுவோர் நான்மறையோ ரைக், கறுவுவெஞ்சினத்தாலிகழ்ந்துளோருயர்ந்த கற்புடைய ரைப்பழுதுரைப்போர். (கசு)

தந்தையைத்தாயைத் தமர்களைவிருந்தைத்தணப்பருமனைவி யைத் தனைச்சான், மைந்தரைநாளும் வழிபடுவோரை யதிதியை வான்சுதைப் பசுவைப், புந்தியிற்பரிந்து புரந்திலோர்கண்டி பூ தியையிகழ்ந்துளோ ரெம்பாற், சந்ததம்விளங்கும் தண்டுழாயல ங்கற் றலைவனைப்பிரித்து வேறுரைத்தோர். (உ௦)

ஒருமைசாலவைக்கண் வழக்கினிலோர முரைத்துளோ ரோண்பொருள் கவர்ந்து, கருமலர்நெடுங்கட் டுவரிதட்கனி

வாய்க் கன்னியர்க்கொடுத்துளோர்காத, லுரிமைவேறிருப்பப் பழிபடுகணிகையொள்ளிழையார்நலந் துய்ப்போ, ரிருமைசால் பிறர்தந்திருவினிலழுக்கா றெய்தினோர்பிறர்க்கிடரிழைப்போர்.

மங்கலநெடுநாண் கந்தரத்தொழிந்த மங்கையர்ப்புணருவோர்மாற்றார், தங்களையெறிவதல்லது சேர்ந்தார்த்தடிந்துளோர்சதுமறைபுகன்ற, புங்கமார்கடவுட் புண்ணியத்தலங்கண் மகிமையைப்பொய்யென நினைவோர், பைங்கயலூர்நீர் மொக்குளின்வாழ்க்கை மானிடர்ப்பாடியே திரிவோர். (உஉ)

என்றிவைமுதலா மளப்பரும்பவங்க ளனைத்துமிக் காவிரிபவாரி, யொன்றியநகர்க்க ணடைந்துநீகண்ட வொண்சுதாநதிபடிந் [illegible]பா, லின்றுநீயமைத்த சுதாமயவிலிங்கத் தெம்மையாராதனை புரியிற், றுன்றியபனிவெஞ் சுடர்தெறத்தொலையுந் தன்மைபோற்றொலைந்தருள் பெறுவார். (உ௩)

எனத்திருவாக்கா லருள்செய்துமீட்டு மிருந்தவன் வேண்டியவரங்க, ளனைத்தையுநல்கி யமலயாய்விளங்கு மச்சுதாவிலிங்கத்துள்வதரி, வனத்துறைவேதநாயகிபாகன் மறைந்தனன் வானவர்மலர்க, ளனைத்தையுந்தூர்ப்பமுனிவ ரரவென்றார்த்தனரஞ்சலி முகிழ்த்தார். (உ௪)

ஈங்கிவையமல னருள்தரப்பெற்ற விருடியர்புங்கவன் மகிழ்வுற், றுங்கமுதிருந்த குடத்தினைக்கொடுபோ யச்சுதாசங்கமத்தடத்து, ளோங்குறப்பதிப்பக் காவிரிபவாரிக் குள்ளுறவூற்றெடுத் தொழுகி, நாங்கிளர்மூல வாகினியாகிக் கலந்ததச்சங்கமநதிவாய். (உ௫)

பொன்னியேகங்கை யமுனையேபவாநி பொருவரும்பரா
சரன் வகுத்த, மின்னவிரமுத நதியதேவாணி யல்லதுவேறல
விந்தத், தன்னிகர்பிறிதில் தலந்திரிவேணி சங்கமமாதலாற்றெ
ன்பாற், கன்னிமாமதில்சூழ் காசியின்மேலாய்க் கவினுமிக்கடி
நகர்மாதோ. (உசு)

புரையறுதவத்துப் பராசரனமைத்த புண்ணியவாரமுதிலிங்
கம், கரதலந்திரட்டி யமைத்தலானுமங் கரதலவிலிங்க மூவுல
குஞ், சுரர்களுஞ்சுருதி யருந்தவர்குழாமுந் தொழுஞ்சுதா
சங்கமவிலிங்கர், திரனுறுமிந்தத் திப்பியவிலிங்க நாமமிவ்வாற
தாய்ச் சிறக்கும். (உஎ)

(வேறு.)

இன்னதொல்லாமுத லிங்கமூர்த்திதன்
சன்னிதிக்கெதிரரு டளைத்தவானுளோர்
மன்னெடுங்கரங்களால் வகுத்தகழ்ந்தெடுத்
தின்னறீர்தீர்த்தமொன் றியற்றினாரரோ. (உஅ)

திரனுறதெள்ளமு தளித்தசெங்கண்மால்
வரனுறுங்கருணையால் வானுளோரகழ்ந்
தரனுறக்கண்டதா லுயர்ந்துளோரெலாஞ்
சிரமுறதெய்வதத் தீர்த்தமென்பரால். )

சுரர்கரமலர்களாற் றொட்டதாதலிற்
கரதலதீர்த்தமென் றுரைப்பர்காட்சிகூர்
சரதநன்னெறியினி தளிக்குஞ்சார்ந்தி
னொருமுறைகுடைந்தவர்க் குண்மையீதென. (௩0)

திருத்தகுங்கடவுளர் செய்ததீர்த்தம்புக்
கருத்தியினுடியங் காதிகேசவன்
மருத்திருமலரடி வணங்கினெய்திடுங்
கருத்தினிலுள்ளிய கருமம்யாதுமே. (௫௧)

மந்திரமாந்திரு வாரிமீமிசைச்
சந்ததம்விளங்கிடுந் தலைவதண்டுழாய்ச்
செந்திருமார்பக தெவ்வர்க்காய்ந்துயர்
புந்திகூர்கடவுளர்ப்புரந்தநேமியாய். (௫௨)

ஆரணக்குரவனை யாடகாம்புயப்
பூரணநாபியம் பொகுட்டினேந்திய
நாரணவெனத்துதி நவின்றுநாண்மலர்ச்
சீரணிபதயுகந் தியானஞ்செய்துபின். (௫௩)

நின்றிருவடிவமாய் நிரம்புமிப்புன
லின்றினிதாடுது மெனவுமன்பினாற்
சென்றதிற்படிந்துதற் பணஞ்செய்வோர்திரு
நன்றிசால்பயனெலா நன்கிற்றுய்ப்பரால். (௫௪)

நவையறுசூர்தட நண்ணிநாற்குலத்
தெவரெனுமிம்முறை படியினீர்ங்குழற்
றுவரிதட்கமலைமென் ரேகைநாயகன்
றவலருந்திருவரு டழைக்கவாழ்வரால். (௫௫)

மெய்ச்சுடர்நடுவுற மேடத்திங்களிற்
றச்சனாட்சுரர்தொழுந் தடத்திற்றற்பணித்

திச்சையினுடிஞே ரிகத்தெலாமடைந்
தெச்சநூறவற்கரு மின்பந்துயப்பரால். (௩௬)

மதிகதிரவனிடை யொன்றும்வைகல்வாய்
நதியொருமூன்றுசேர் நலங்கொடீரத்தின்
முதிர்புனற் சிரார்த்தங்கண் முதலசெய்குனர்
கதியினிற் குல்த்தொடுங் களிப்பின்வைகுவார். (௩௭)

தேசினிற்கிளர்துலாத் திங்களிற்றுலா
ராசியிற்பாற்கர னணுகும்போதினின்
மாசறமவுனமாய் மலினயாக்கையைத்
தூசகன்றெழிந்திடச் சுத்திசெய்துபின். (௩௮)

தன்னுரியவளொடுஞ் சங்கற்பத்தினம்
முன்னதிமுகத்திடை யடைந்துமூழ்கிஞோர்
முன்னையபிறப்பொரு நூறின்முற்றிய
பன்னரும்பவங்களற் பஞ்சிற்றீயுமால் (௩௯)

இந்திரைநாயக னினிதினீன்றருள்
மைந்தனைகீர்த்திடு மைந்தர்பெற்றினுஞ்
சந்ததந்தனதனுத் தரைக்கண்வாழ்ந்துபின்
கந்தரங்கறுத்தவன் கழற்கணெய்துவார். (௪0)

இந்தமுன்னதிருடைந் திரங்கியன்புகூர்ந்
தந்தணற்கோதன மருத்திஞேருயர்
சந்திரமண்டலஞ் சரித்துவாழ்ந்துபின்
பிந்திராசனத்திருந் தின்பந்துய்ப்பரால். (௪௧)

இருபிறப்பவர்களி லொருவற்கேனுமிவ்
வருநதிதீரத்தி லன்னமீய்ந்திடின்
வருபலன்விளைந்தநெல் வயமெலாந்தரப்
பெருகுறுபலனினும் பெரியதாகுமால். (௪௨)

திங்களையிரவியை யரவந்தீண்டுநா
ளங்குருக்கேத்திர மாதிவைப்பிடைப்
பங்கமில்தானஞ்செய் பலனெலாந்தருஞ்
சங்கமநதியிலோர் தானஞ்செய்திடின். (௪௩)

கள்ளவான்பொறிகளைக் கடிந்தமாதவன்
றெள்ளிதிற்றெருடுஞ்சுதா தீர்த்தந்தோய்ந்திடிற்
கொள்ளைவெம்பவமெலாங் குறிப்பறிந்தருள்
வள்ளியோர்ப்பொருந்தினோர் வறுமைபோலுமால். (௪௪)

காற்றெறவுடைபடுங் காரின்வெம்பவ
மாற்றிடுந்திப்பிய வளங்கொடீர்த்தங்கட்
கேற்றமீண் டிசைத்திட வெல்லையில்லதாற்
சாற்றினஞ்சிலவெனப் பின்னுஞ்சாற்றுவான். (௪௫)

(வேறு)

இந்தனையசுதாலிங்க மகிமையுந்தீர்த் தாதிகளினிருமையாவு
மெந்தைபிரானருந்தவன்வேண் டிடக்கருணை கூர்ந்தளித்தவி
யல்பினாலே, சந்ததமும்விளங்கியரு டழைத்திடுந்தெக்கணவள
கைத்தலத்துவைகுஞ், செந்திருமால்விடையாற்குத் திருவிழா
ப்பராசமுனி சிறப்பித்தானால். (௪௬)

சித்திசிறந்திடுமேடத் திங்களின்முன் பக்கம,திற்செங்கைநா ளுஞ், சத்தமியும்பொருந்தியிடுஞ் சுபதினத்திற் றுசாரோணங் தான்செய்துள்ளப், பத்தியொடுமிந்திரனே முதலாயதேவர்மு தற் பதவிவாழு, முத்தமனைப்பராசமுனி வரவழைப்பவனைவ ரும்வந் துற்றுரன்றே. (சஎ)

பங்கமில்சேர்முனிவர்சுரர் பராசனைப்பார்த்தமுதநதி பவாநி பொன்னிச், சங்கமத்தானமும்வதரித் தாருவுமச்சாகையின்கீ ழ்த் தயங்குங்கோடி, செங்கதிர்போன்முளைத்தமுக்கட் டே வையுநும் மாலியாங்க டெரிசித்தேமென், றங்கவர்கள்புகழ் ந்திடவு முனிவர்பிரான்முகமனுரைத் தன்புகூர்ந்தான். (சஅ)

மங்கலதூரியமுழங்க மறைமுழங்கவைங்கரனை வழுத்திப்பி ன்னர்க்,கங்கைமதிச்சடையானைப் பூரணைநாட்காறுமுயர் கட வுட்டச்ச, ணங்கையினலமைத்தவெழில் வாகனத்துந்தினந்தி னமு மமரர்சூழ்ந்து, செங்கைமலர்குவித்துவா மறுகுதொறுந் திருப்பவனி சிறப்பித்தானல். (சகூ)

இந்நெறியாயிருடியர்கோன் றிருத்தெருக்க டொறுமுல கேன் றெடுத்தவேத, மின்றெடுமைங்கரன்குமான் முதற்றே வரொடுமிலந்தை விமலன் றன்னை, நன்னிலத்திலுள்ளோரு நா காட்டுறைவோரு நயனந்துஞ்சாப், பொன்னுலகத்துள்ளோ ரும் போற்றநவ,தினமும்வலம் புரிவித்தானல். (ரு0)

பருவமுறும்பூரணை நாட் டனதனடாத்தியசுவணப் பதுமா காரத், திருவுருவம்பொலிந்தடந் தேர்கண்மிசைத்திரிபுரங் கள்செற்றகொற்றத்,தொருவனைவேதாம்பிகையை யொரும

ருப்புளோனை யயிலோனையேற்றி, யருமறைவாழ்த்தெடுப்ப
வுல குய்யவுயர்திருவிழா வாற்றினுனல். (ருக)

புண்டரிகப்படிவாய பொன்னிரதத்திருவிழாப் பொலிவை
க்கண்ணுற், கண்டவருந்தேர்ச்சிகரங் கைகூப்பித்தொழுதவரு
ங்கயிலைவாழ்வார், தண்டடர்தேர்வருமுன்னர்ச் சதுர்த்தசிநா
ளினையதிருத் தலபுராணங், கொண்டுணர்வினுற்பாராயணம்
புரிந்தாற் பிரமகத்திகுலையுமன்றே. (ருஉ)

இம்முறையெம்பிரானூர்க்குத் திருவிழாவிருடியர்கோ னிய
ற்றியாங்கு, மும்மலர்தீர்முனிவரொடும் வதரிநிழன்முளைத்த
சிவ முதலைத்தன்பூங், கைம்மலராற்பதித்தருளுங் கரதலநாயக
னையறு காலந்தோறு, மம்மர்கெடப்பூசித்து மாதவஞ்செய்தங்
நகரின் வதிவான்மன்னே. (ருா)

பொற்கலத்துப்பால்கலந்த வமுதிருக்கப் பசித்தொருவன்
புழுங்கல்போலு, நற்கடிநீர்நன்கிருப்பவொருவனீர்நசையானு
வறத்தல்போலுங், கற்பகம்போனிழலிருப்ப வொருவனெடுந்
தீச்சுரத்தாற் காய்தல்போலு, மற்புதவிங்நகரிருப்ப வடைந்
துய்யாதொருவனய லடையுந்தன்மை. (ருச)

திருந்தியவிந்நகர்நாமந் திருநணுச்சங்கமகேத் திரஞ்சீர்சா
லப், பொருந்துமகாவீரபுரம் விசயநகர்வதரிவனம் புவனமூன்
றுங், தெரிந்திடுதெக்கணவளகை பராசரகேத்திரம்பிறவி செ
குத்துஞானம், பரிந்தருள்வக்கிரபுரம்பே ரானந்தநெறியளிக்
கும் பவாநிகூடல். (ருரு)

சேணுடர்தொழுஞ்சுருதிச் சேயிழைபங்கமர்ந்தசிவக் கொழுந்தைச்சென்று, காணுதகண்ணுமந்தக் கடிநகரைவலஞ்செய் யாக்காலுமேலா, மாணுநற்கதியளிக்குந் திரிவேணிசங்கமத்தி ன்வந்துதோயா, வீணையாக்கையுமா னிடரடையின்சேத னமே வேறென்றன்றால். (ருகா)

அங்கதேயத்தினிருந் தொருமறையோ னிவனயதலத் தடைந்துமுக்கட், சங்கமேசனைவழுத்திக் கதிபெறல்போனீவிரும த்தலத்தினுண்மை, பொங்குபேரன்பினெடுமுணர்ந்தனுட்டித் திடுதிரெனப்புகன்றானன்பி, னெங்குமாய்நிறைந்தசுதா விலிங்க வரலாறனைத்து மெடுத்துச்சூதன். (ருஎ)

## அமுதலிங்கப் பிரதிட்டை வரலாறுரைத்த சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம். எ - க்கு விருத்தம். (சoஅ)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## எட்டாவது

# மாலுதானவிருடிசரித்திரச் சருக்கம்.



மேலுளாளமுதச் சிவகோசம்விதித்தவண்
ஞாலமுய்யவழி படுநீர்மை நவின்றனஞ்
சாலவின்னுமோ ரந்தணன் சேய்வடுச்சாபமாய்
மாலுதான முனியினெழித்தல் வழுத்துவாம். (௧)

சங்கையில் தவத்தோன்றனை மீட்டுமெத்தாபத
ரங்கதேய மறையவன் யாவரிலங்கர்த்
தங்கியெப் பணியாற்றி வெஞ்சாபந் தணந்துபோய்
நன்கடைந்தனன் சாற்றெனச் சூதனவிற்றுவான் (௨)

உம்பர்க்கோய் விலுவப்புற வேள்வியுஞற்றிடு
மம்பொற்றூர்ப்புரி நூன்மணி மார்பரளப்பிலார்
நம்பற்போற்றி யினிதுறை யோர்நகர் நாவலஞ்
செம்புத்தீவினி லங்கர்தந் தேயத்திருக்குமால். (௩)

தேவராலயமுந் தருமங்கள் நிலைத்திடு
நாவினுன்மறை நாளுநவிற்றி நலத்தொடு

மோவிலாரழற்கூட்டிப் பின்னுண்ணுமுயர்குலப்
பூவினர்சுரர் வாழ்தலிற் பொன்னகர் போன்றதால். (ச)

திருமிகுமெச்சிர்க்கர் வேதியர்தங்களிற்
றருமசாலனென் றோர்மறை யோனுயர்சைவமெய்ப்
பெருமைசான்றவன் பெண்ணொருபாதியன்பெய்கழற்
கொருமைநீடுமெய் யன்பினன்மிக்கவொழுக்குளான். (ரு)

அத்தியானபரன்றரு மங்களனைத்தையு
நித்தியாகமநீர்மையிற் செய்பவனெஞ்சகச்
சுத்தியான்பரிசுத்தமு ளோர்களுடன்பயில்
பத்தியான்பரமார்த்த வியாபகப்பண்புளான். (சா)

இன்னதன்மையன் றன்வழி யெக்கியசன்மனென்
றுன்னுநாமமுளான்பல வோமமுஞற்றிய
தன்மையன்றன் மரபினொழுக்கந் தவாதவன்
வன்னியோம்பி வளர்ப்பவன் மாசறுமாண்பினன். (எ)

தாங்குபேரறஞ் சார்தரு மெக்கியசன்மனென்
றோங்குமந்தணன் பாலொரு சேய்வந்துதித்தனன்
பூங்கழைச்சிலை வேளினும்யாணர்ப் பொலிந்துளான்
றேங்குமாற்றல்கொடே வளர்ந்தான்வளர்திங்கள்போல்.

வட்டவாண்முக மைந்தனை நாமம்வடுவென
விட்டழைத்தன னின்னமு மோர்பெயரேற்றமே
தொட்டதன்ம சருமனுமாமெனச் சூட்டினன்
சிட்டன்மைந்தன் றனக்கு வயதைந்து சென்றதால். (க)

வென்றியாரணவேதியன் சேய்க்குபவீதமா
மன்றலாற்றினன் வைதிகன்னெறிக் கேற்கவே
யொன்றுதேசிகன் மாட்டருநூல்களுணர்த்தினன்
வன்றிறற்சுதனிந்நெறி மாண்புறவாழுநாள். (கo)

வேறு.

தக்கபேருணர்வுநல்குங் கல்வியுட்டயவாற்றந்த
மிக்குயர்குரவற்போற்றி வியப்புறுதருமசன்மன்
றெக்கணையளித்துமீட்டுந் தேசிகற்பணிந்துதங்க [ன்.
ளொக்கலைப்பிதாவைத்தாயை யுவப்பொடுஞ்சென்றுதாழ்ந்தா

அங்கவராசிகூடி யிருக்குநாளவனுக்கன்பால்
மங்கலவதுவையாற்றத் தொடங்கினர்மரபுக்கேற்ற
தங்குலத்துயர்ந்தசார்பிற் றனிமகட்பேசிமன்றற்
கிங்கினிதாற்றவேண்டும் பொருளெலாமீட்டுமெல்லை. (கஉ)

எறிசுடரழல்வேட்டுண்ணு மெக்கியசருமனென்னு
மறையவன்மகனைநோக்கி மைந்தபோய்மகத்துக்கேற்ப
வறைதருதருப்பைகுஞ்ச மரசமம்பலாசமாதி
நிறைதருசமித்தையெல்லாங்கொணர்கெனநிகழ்த்திவிட்டான்.

வடுவெனுந்தருமசன்மன் மறைச்சிறுர்சிலவரோடுங்
கடிதினேர்வனத்திற்புக்கான் கட்வுண்மாமகத்திக்கூட்டப்
படுவனக்காட்டம்வேண்டிப் பழுவத்துட்படருங்காலை
நடுவுறுதவத்துவைகா னசமுனியிருக்கைகண்டான். (கச)

காலுணுந்தவத்துவைகா னசமுனிக்கடவுண்மைந்தன்
சாலநன்குணர்ந்தமாலு தானமாதவத்தோன்வேத

நாலையுமுடிவுகண்டோன் புண்ணியநலங்கொடீர்த்த
ஞாலமீதுள்ளவெல்லாம் யாத்திரைநடந்துதோய்வோன். (கரு)

விண்டவைம்பொறிகளாதி விடையவாசனைநீத்தாங்கோர்
தண்டளிர்த்தாருநீழற் றவஞ்செய்தான்றவஞ்செய்வோனைக்
கண்டனன்றருமசன்மன் சிற்றினங்கலத்தலாலே
பண்டையவிதியின்சார்வாய்ப் புந்தியும்பாய்ந்ததன்றே. (கசா)

விரிந்துமேற்படருங்கற்றை வேணியுமேனியெங்கும்
பொருந்தியவுரோமக்காடும் வள்ளுகிர்பூண்டகையும்
பரிந்துளவிகாரரூபப் படிவமுற்றிருந்தானென்று
தெரிந்துமண்கற்கள்வாரிச் சிந்தினர்திருமெய்மீதின். (கஎ)

தன்னையுமறந்துமேலாந் தத்துவமுணர்ந்தியோகத்
தின்னிலைகண்டுதூங்கா தினிதுறங்கிடுவோன்றன்னைப்
பின்னருமணற்கல்வாரிப் பெய்தனர்பெரியோன்கண்டாங்
கன்னவர்சிறுரொன்றுன்னி யகன்றுவேறிடத்திற்போனான். ()

அறிந்தவனகலப்பின்சென் றறிவிலார்புறத்திற்றுக்க
வெறிந்தனர்கல்லாலந்த வெல்லையிற்சிறிதுசீற்றம்
பிறந்ததுகல்லாய்நீவிர் பீடழிந்துறுமினென்னச்
சிறந்துளோனறிவுகொன்ற சிறியர்மேற்சாபமிட்டான். (கக)

ஆயிடையறத்தைநோக்கு மந்தணன்சாபமென்னுந்
தீயிடைவாடியோடிப் பணிந்துநாஞ்செய்தகுற்ற
நீயிடைபொறுத்துக்காத்தி நிகரிலோயென்னயார்க்குந்
தாயினுமினியானுள்ளத் தயாவொடுமுரைப்பதானான். (௨௦)

தக்கவர்குலத்திற்றேன்றுந் தன்மையீருமக்குத்தந்த
விக்கடுஞ்சாபநீத்தற் கேதுவொன்றிசைத்துமிந்த

மைக்கருங்கடனீர்சூழ்ந்த மலர்தலையுலகின்மேலாய்
மிக்கதோர்கடவுட்டான முண்டதுவிளம்பக்கேண்மின். (உக)

தெக்கணதிசையிற்கொங்கு தேயத்திற்றிகழுமந்த
மிக்குயர்தானமுன்னீர் விரைவினிலுண்டோன்றந்த
பெரக்கமில்பொன்னியாறும் பவானியும்பராசப்புத்தே
டொக்கபேரன்பாற்கண்ட துய்யதெள்ளமுதயாறும். (உஉ)

ஒன்றதாய்க்கூடுமந்த வொப்பருந்தெய்வத்தான
முன்றிருவதரிகீழன் மூளைத்தருள் சுயம்புமூர்த்தி
தன்றிருகிருதித்திக்கிற் றயங்கிடுமெதனுலந்த
மன்றன்மாநகரங்கொங்கின் வதரிகாவனமென்றோங்கும். ()

வந்தவர்பாவமென்னும் வறுமையையறுத்துஞானச்
சுந்தரவாக்கநல்குஞ் சுயம்பிரகாசமாகிச்
சந்ததம்விளங்குமுத்தித் தலமதையல்லால்வேறு
மைந்தர்காள்பிறிதுகாணே னென்றனன்மற்றுஞ்சொல்வான்.

மாசகல்கயைதன்மாடே யாயிரமறையோர்க்கன்ன
நேசமுற்றளித்துத்தற்ப ணுதிகணியமத்தோடும்
பேசருங்குரவர்தேவர் பிதிர்க்களுக்கியற்றிற்கோடி
பூசுரர்க்கன்னதானங் காசியிற்புரிந்தபேறும். (உரு)

மருவருங்கயையின்மாட்டு வடதருநிழலின்ஞாங்கர்ப்
பரிவொடும்புகல்பிரேத பருவமூலத்தின்றன்கீ
ழொருமறையோனுக்கன்ன முதவிடிற்சுருதிநான்கு
மருமையினோர்ந்தகோடி யந்தணர்க்கருத்தனேராம். (உசா)

தில்லைகாளத்திகாஞ்சி திருமுதுகுன்றஞ்சேணூர்
தொல்லையவருணைகும்பீச் சுரமுயர்சுருதிக்கான
மல்லலந்திருவையாறு மதுரையாலங்காடிந்த
வெல்லையில்தலங்களெல்லாம்விசேடமென்றிசைக்கும்வேதம்.

இன்னதொல்தலங்கட்கீண்டி விப்பிரரொருவற்கேனு
மன்னமாங்களிக்கிற்கோடி யந்தணர்க்கருத்தும்பேறும்
பன்னுமித்தலங்கடோறும் பயின்றதானப்பேறெல்லாம்
பொன்னியிற்பவாநிகூடும் புகழ்நகர்கொடுக்குமன்றே. (௨அ)

அருட்டுறுவாசதீரத் தருணடம்புரிவோன்முன்றிற்
றருத்தசைநட்டோன்வாழுஞ் சன்னிதியிடத்தும்பவ்வ
முருக்குமுன்னதிசூழ்தெய்வச் சங்கமமுகத்தின்முன்னி
யொருப்பிடச்செய்ததான மொன்றினுக்கனந்தமாமால். (௨௯)

இனைபதொல்தானத்தீண்டி வீசனைக்குறித்துமுன்னூல்
புனைபவருவப்பத்தானம் புரிந்திந்தத்தலபுராண
மனையவர்தம்பாற்கேட்கு மன்புளோர்கடல்நீரெல்லாந்
தனியறப்பெய்துதானந் தந்திடுபலத்தைச்சார்வார். (௩0)

செறிபொழிற்பவாநிகூடற் றிருநகரடைந்தியாரேனு
மறையவர்தமக்கோர்முட்டி மாதவர்தமக்கோர்பிட்சை
யறிவுடனளித்தோரிந்த வம்புவிதிகிலமெல்லா
முறுசுடர்க்கதிர்போனேமி யுருட்டியோர் குடைக்குளாவார்.

மணிதிகழமுதக்கேணி பவாநிகாவிரிவந்தொன்று
மணிபுனறோய்ந்துநூலோர்க் குதவிவளித்ததுயோ

ரிணையறுதெய்வலோகத் திற்கடைக்காமதேனுப்
பணிபுரிந்தேவல்செய்யக் கற்பமும்பயில்வர்மாதோ. (ருஉ)

கங்கையம்பதியிற்கோடி கபிலையான் கற்றோர்க்கேயுந்
துங்கசுற்பலமிங்கிந்து சுடர்புகுந் தினத்தும்பாந்தள்
பொங்கிரு சுடற்காய்நாளிற் றிங்களும் பிறப்பிற்போத
மங்கல மறையோர்க்கன்பாலோர்பசு வழங்கினோற்காம். (ருரு)

ஞானவாரமுதலிங்க நாயகன்றனக்குஞ்மேற்பாற்
பீனவார்தேவதீர்த்தம் பெட்புறத்தோய்வோற்கங்க
வீனமதகலுமீசற் கேறுவிட்டவர்க்ள்வெள்ளி
மானகத்திருந்தெம்மீசன் மலர்ப்பதமடைகுவாரால். (ருச)

பூரணைத்திதியுமாங்குப் பொருந்தியவறுமீனுளுஞ்
சார்வுறினமுதலிங்க பாரிசந்தயங்குசெவ்வே
லோராறுமுகப்பிரானை யொண்கருநெய்தற்போதா
லாரினிதற்சித்தாலு மருங்கவிவல்லோராவார். (ருரு)

திங்களோராறுமந்தத் தேமலராற் பூசித்தா
லங்கவர்மூகரேனு மருந்தமிழ்க்கார்வெற்பார
மங்கலமுனிபோலாவ ரங்கத்தால்வலஞ்செய்வோர்கள்
பொங்கொளியரசராய்முப் புவனமும்புரப்பரன்றே (ருசு)

(வேறு)

மகரத்தாதபன் வந்துளிவண்சுதை
திற்பொற்றீர்த்தஞ் செறிந்திடுஞ்சங்கம
முகநற்றீர்த்தத்தின் முன்னிநின்றுடியாங்
குகரத்தாசை யுதவினநல்கினோர். (ருஎ)

மன்றல்வார்சடை வானவன்வாழ்வுறு
மின்றயங்குகயிலைவை யெய்தினிற்
சென்றுயோனிச் செனனத்தைவேரறக்
கொன்றுகோடி குலத்தொடும் வைகுவார். (௩அ)

சுருதியன்றியம் மேன்மைமற்றோர்சொலற்
கரிதுறங்கட் கடைந்தவிச்சாபமப்
புரிதனிற்சென்றப் புண்ணியதீர்த்தமாந்
திரிவிதப்புன ரேய்ந்திடிற் றீருமால். (௩௯)

மாலுதானமுனிவனிவ் வாய்மையைச்
சாலவோதித் தவத்துறைவைகினன்
மாலுளந்த தருமசன்மன்மறை
வாலரோடு மருண்டுவெழிக்கொள்வான். (௪0)

கலையெலாந்தனி கற்கினுமூழிலாற்
கலகில்புல்லறி வேமிகுமாதலாற்
குலனில்வந்து நன்கோதியுநந்தமக்
கிலகுமிக்குறை யெய்திற்றென் றேங்கினன். (௪௧)

இந்தவாறுனி யேகுமளவையி
னந்தமார்க்கத் தடைந்தவர்க்கண்ணுறீஇ
வந்துசாபம் வலித்திடும்வாறெலாந்
தந்தைபாற்சென் றுணர்த்திடச்சாற்றினர். (௪௨)

பேதையோங்கள் பிழைத்திடப்பின்னுமம்
மாதவத்தனருள்செய்த வாறெலாம்

போதவோதவிரங்கினர் போயினா
யாதினும்விதி யாற்றலைவெல்வர்யார். (சரூ)

மட்டில்யோகவை கானசபுத்திர
னிட்டசாபம்வர் திம்மெனநான்மறைச்
சிட்டர்மைந்தரைச் சிறிவநதாக்கையைத்
தொட்டகாலையிற் கல்லெனத்தோன்றினா. (சச)

தேய்ந்தவெண்பிறைக் கண்ணியைச்செஞ்சடை
வேய்ந்தமுக்கண் விமலனருளினு
லாய்ந்தருந்தவ னோற்றைம்புலன்களைக்
காய்ந்துளார்கதம் யாவர்கடந்துளார். (சரு)

மாலுதானமுனிவவ ரோதயன்
போலயாவர் புரையறநோற்றுளோர்
மேலுமன்னவன் மேன்மைபெரிதெனச்
சிலருக்குயர் சூதன்மொழிந்தனன். (சசு)

## எட்டாவதுமாலுதான விருடிசரித்திரச்
## சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் அ-க்கு விருத்தம். (சருச)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

# தருமசன்மன்கதிபெற்றசருக்கம்.

கந்தனுகருந்தவவை கானசமுனிக்கோன்
மைந்தனதுசெய்கையை வழுத்தினமெய்ஞ்ஞானந்
தந்திடுபவாவிக ரிற்றருமசன்மன்
வந்துருவடைந்துகதி மன்னியதுசொல்வாம். (௧)

தொல்லையமுனிக்குருசில் சொற்றசுடுசாபம்
வல்லையினெழிந்துமறை மைந்தர்நெறிகூடி
நல்லகதியெய்திய நலம்புகறியென்று
வெல்லையிலருந்தவர் வினவிடவிசைப்பான். (௨)

வன்மையுளகற்படி வமைந்துவனநிற்போர்
தன்மையவர்முன்சொல வுணர்ந்தவர்தனிப்போய்
நன்மகவினைக்குள சமித்துநனிகொண்டு
தன்மகன்வரத்துனிய தந்தையையடைந்தார். (௩)

வந்தவரையெக்கியசன் மன்றழல்வளர்ப்பான்
கொந்துறுசமித்துகள் கொணர்ந்திடவிடுத்த
மைந்தனிதுகாறுமனை வந்திலனுடன்போ
நந்தனர்களுந்தனக ணண்ணிலர்களென்முன். (௪)

எண்டருவனத்திடை வழிக்கணெதிர்நீவிர்
கண்டிலிர்கொலோவெமது காளையரை யென்று
விண்டமொழிகேட்டனர் விளம்பிடமறைத்தா
ரண்டரனையானவர் முகக்குறியறிந்தான். (ரு)

ஐயமெவனுள்ளவை யகத்துமறையாதீண்
டொய்யெனவுரைத்திடுதி யென்றலுமுயர்ந்தோய்
தையலர்மயங்கெழி றகுந்தருமசன்மன்
மையின்முனிசாபமிட வன்கலுருவானன். (சு)

கூடவருபூசுர குமாரருமவன்றன்
மாடுதுறுகல்லென வனத்திடையிருந்தார்
நாடுதிவிரைந்தென நவின்றமொழிகேளா
வாடினன்மிகுந்துயர வாரியில்விழுந்தான். (எ)

காதினனுரத்தையிரு கைகொடுசிரத்தின்
மோதினனருங்கலைகண் முற்றுமெனதையா
வோதினைகொலின்னவை யுனக்குவரவோயமன்
போதெசவனத்திடை புகுத்தினன்முடித்தேன். (அ)

அருந்துயருளந்தவனை நோக்கியறிவுள்ளோய்
வருந்தலைமனக்கவலை மாற்றும்வழியுண்டாற்
றெரிந்தமுனிசாபமது தீரவுபதேசம்
புரிந்தசெயல்கேள்விகள் புலப்படவுரைத்தார். (கூ)

சுரத்திடையெமக்குமுனி சொன்னமுறையெல்லாம்
விரித்தினிதுரைத்துன்மகன் வெய்தினெமைநீர்போய்த்

தரித்திவிர்களொன்றுகுறை யாதெமதுதந்தைக்
குரைத்திடுதிரென்றவ னுரைத்திடவடைந்தேம். (௧0)

என்றுமறைமைந்தன்மு னிசைத்தநலமெல்லா
மொன்றுமறவாதவ ருரைத்திடவுளத்திற்
றுன்றியிடுகேதமத கன்றுசுரர்நெஞ்சு
ணின்றொளிர்பவாநிநகர் நித்தனைநினைந்தான். (௧௧)

கிட்டினர்களன்பொடிரு கேள்வியினருத்து
மட்டவிழ்பவாநிமகி மைச்சிரவணத்தால்
விட்டதுபெருந்துயர் விரோசனகரங்கள்
பட்டிடவுடைந்திடு பனிப்படலமென்ன. (௧உ)

வல்லமறையந்தணன் மனத்திடையிருந்த
வல்லல்களிமைப்பிடை யகன்றதருளில்லாப்
புல்லறிவினோரிடை புகுந்திருவுமேலா
நல்லுணர்வினோர்கணுறு நல்குரவுமென்ன. (௧௩)

உய்திறமுணர்த்தியிதை யத்துளுவகைத்தேன்
பெய்தவர்தமக்குரிதி பெய்துவிடைநல்கி
மைதவிருளத்தன்மறை யோர்பலர்களோடும்
வெய்தினிலடைந்தனைய வெஞ்சுரநுழைந்தான். (௧௪)

ஏகுநெறியிற்பறவை யேந்தவிடமாயுங்
காகம்வலமாயுமெதிர் கண்டிடுநலத்தால்
வாகைபெறுமோர்தரு மருங்குகிழன்மைந்தர்
தேகமுழுதும்பொலி சிலாவடிவுகண்டான். (௧௫)

மூசுபிறவித்துயருண் மூழ்கியிடுகாயத்
தாசினையறுத்தரு ளளித்தடிமைகொள்வான்
பாசிளையொர்பங்கொடு பவாநிபுரிவைகு
மீசனருளிவ்வண மிருந்ததெனவுன்னு. (௧௬)

கருக்கொளிருளுட்கவரு காலையினுதிக்கு
மருக்கன்வரவம்புய மலர்ந்ததெனவிண்ணோர்
புரிக்குமுயர் சங்கம புரோசனருணெஞ்சை
யுருக்கியிடநெக்குள முடைந்துருகிநின்றான். (௧௭)

விச்சையுளவிப்பிரரின் மேலவன்மெய்யன்பி
னிச்சைகொடிரங்கியடி யார்களினிதிட்ட
பச்சிலையுவந்தருள் பவாநிநகர்வைகும்
பிச்சனையடைந்துகதி பெற்றிடநினைந்தான். (௧௮)

ஆய்ந்தமறையாளர்சில ரோமமெடர்சாபந்
தோய்ந்தசிலையைச்சிலர் சுவற்சுமையவாக்கி
வாய்ந்திடுகுடும்பமொடவ் வண்புறவநீங்கிப்
பாய்ந்திடுமெய்யன்பினொடு தென்றிசைபடர்ந்தான். (௧௯)

நாடுநகரும்பரு நகங்களுநறும்பூங்
காடுநதியும்பல கடந்துமணிமன்று
ளாடுமமலன்றல மனைத்தையுமிறைஞ்சி
யீடுபயில்சோணுறை யெல்லையினையுற்றான். (௨௦)

(வேறு.)

வல்லையிற்சிவ வடிவமாம்வதரிகாவனத்தி
னெல்லையைத்தனி யடுத்திடவடுத்திடவெடுத்த

கல்லுருப்பொறை நெட்டியின்பொறையெனக்காண
வல்லறீர்ந்தமெய் யந்தணனதிசயித்தடைந்தான். (உக)

கோலமாழிகைகிளைகளுங் கோபுரப்பொலிவு
மேலவானவரிறைஞ்சிடு விமானமுஞ்சுருதி
நாலுமோர்ந்தரு ணயந்தவர்நடாத்திடுமோம
சாலைமடலையுந்தெரிந்திட வடிக்கடிதாழ்ந்தான். (உஉ)

காரினேங்கிடு மங்கலமுரசமுங்கற்போ
ரோருநான்மறை யோதையுமும்பர்வாய்த்துதியும்
பாருளோர்தொழு முழக்கமுங்காவிரிபவாநி
யாரவாரமுஞ்செவித்தலம்பருகினனணைந்தான். (உ௩)

சென்றுதெக்கண வளகையிற்புகுந்தனன்செம்பொற்
குன்றமன்னதோர் கோபுரம்பணிந்துபோய்க்குறைதீர்ந்
தோன்றுமங்க ரந்தணர்தம்மொடுமொல்லைப்
பொன்றருந்திரிவேணிசங் கமக்கரைபுக்கான். (உ௪)

மாலுதானன்முன்புணர்த்திய நன்னெறிவழாமற்
சாலுநீர்மையிற் சங்கற்பநெறியொடும்வேத
வாலசுந்தரிபாகனை யுன்னிநின்மலமாங்
கோலவானதிதனையொடும் விதிமுறைகுடைந்தான். (உ௫)

குடைந்துதற்பணமுனிவர்க்குங் குரவர்க்குந்தென்பா
லடைந்துளோர்கட்கு மமரர்க்குமன்பினுங்கியற்றி
மிடைந்தசைவவேதியர்முத லனைவர்க்கும்வெறுக்கை
தொடர்ந்துநல்கினன்னியதிக டொறமுடித்து. (உ௬)

சாபவன்கலைத்தக்கவர் கரந்தழீஇப்பதும
நாபனுன்முகனயந்துஙன் மலர்க்டேய்ப்பரவு
நூபுரத்திருத்தாளனை நுவலரும்பவாழி
மாபுரத்துறைமறைக்கொடி மணுளனையுள்கி. (உஎ)

மந்திரங்களிலுயர்ந்த பஞ்சாக்கரமறைவாய்ச்
சிந்தையுட்பலவுருவுற வுண்மையிற்செவித்திட்
டிந்தவெஞ்சிலைமுன்னுருப் பெறுகவென்றீண்டி
யந்தணுளரப்புனலிடை மும்முறையாட்ட. (உஅ)

இட்டவேதியன்சாபமங் கிளஞ்சிறுநாகஞ்
சட்டைவிட்டல்போற் கழன்றதுவேதகந்தாக்கப்
பட்டவல்லிரும்புருவுபோய்ப் பைம்பொனனதுபோற்
சட்டகத்தொடுந்தோன்றினன் றருமசன்மாவே. (உகு)

வந்துதாதையையன்னையை மருங்கெலாநிறைந்த
வந்தணுளரைத்தாழ்தலு மரவெனுமோதை
யிந்திராதியர்செவிகளிற் புகவெடுத்திறைத்தார்
கந்தவார்சினைக் கற்பகப்பூந்தருமாரி. (௩0)

சாதநன்னெறித்தருமசன் மாமறைமுழங்க
வேதநாயகிபாகனை விதிமுறைபூசித்
தேதநீங்கியங்கப்பிர தக்கணமியற்றி
மாதவன்புகலறநெறி வழாதெலாமுடித்தான். (௩க)

எச்சமங்கிருந்திருமையா லீசனுக்கியற்றி
நிச்சலுந்திரிகாலமு நிமலனைப்பூசித்

திச்சையுள்ளனயாவையு மிலங்கைநீழலின்வாழ்
பிச்சனுன்மறைப் பிராட்டிநாயகன்றரப்பெற்றான். (ருஉ)

சங்கமத்துறைபடிந்துயர் தனிப்பெருஞ்சுருதி
மங்கைபாகனைவரன்முறை பூசித்துநெடுநாட்
டங்கியெம்பிரானருள்தரத் தந்தைதாயொடும்போ
யங்கத்தேயத்தையடைந்தனனருந்தவமறையோன். (ருரு)

அருமகம்புரிந்தறம்பல செய்தரனருளாற்
றருமசன்மனுக்கருமண முடித்தருந்தவஞ்செய்
தொருமையன்புறவாழ்ந்துபின் னிறுதியினுமைகோ
னிருமலர்ப்பதஞ்சார்ந்தன னெக்கியசன்மன். (ருச)

தாதைநற்கதியடைந்தபின் றவலருங்குணத்தோன்
போதநாடொறுமளப்பரும் போகங்கடுய்த்து
மாதவத்தனுய்த் தருமசன்மாவெனுமறையோன்
வேதநாயகிநாயகன் வியன்பதமடைந்தான். (ருரு)

சிதையுமன்புளோர் திரிகரணங்களிற்செய்த
துதைதருங்கொடும் பவமெலாந்தூயநுண்பஞ்சு
கொதிதருந்தழற்பட்டபோற் குலைந்திடமிந்த
வதரியந்திருவைப்பிடை யொருபகல்வதியின். (ருசு)

நித்தமாயொளிர்நிருமலப் படிவமாய்நிரம்பு
சுத்தமாய்நிகழ்சுருதியின் சொருபமாய்க்கதிக்கோர்
வித்துமாயந்தமாதலம் விளங்கலால்விமல
னுத்தமத்திருவதரிநீழலை விடாதுறைந்தான். (ருஎ)

வேதமிக்குணர்பராசரன் சுகனுயர்விபண்டன்
காதிபுத்திரன்காசிபன் கவுதமன்கபிலன்
மாதவப்பெரும்பரத்துவ ஞாதன்வசிட்டன்
வாதராயணனுதியோர் ரோற்றங்குவதிவார். (௩அ)

தாதுகுந்திருவதரிமா நகர்க்குமுத்தரத்தி
ேனதுகன்னலோர் மூன்றினுளொப்பறவுயர்ந்த
வேதவெற்பெனுமொருமலை விமலமாய்விளங்கு
மாதலாலதன்பெருமையை யாரறிந்திசைப்பார். (௩௯)

ளக்குமிந்நகர்க் கையிருகன்னலின்கீழ்பா
லளப்பருஞ்சுடர் வாரணசயிலமுமமரா
ருளத்திலங்கெழி லுரகமாவடுக்கலுமிடையின்
வளப்பருங்கமலாசல முந்தனிவைகும். (௪0)

பரப்புதென்றிசைப் பாங்கர்மங்கலகிரியென்னும்
பொருப்பிலங்கிடுமினையவாய்ப் புகலுமோரைந்து
பருப்பதங்களினுப்பணிற் பழமறைக்கரிதாய்
மருப்பொலிந்திட விளங்கிடும்வதரியங்கானம். (௪க)

சீலமிக்ககா யத்திரிசிலையொருமூன்று
மூலலிங்கமும் வதரியுமுளைத்தருள்வடிவாய்ச்
சாலவோங்கியவருமறைச் சயிலமுங்கடல்சூழ்
ஞாலமீதினிலொன்றலாற் பிறிதிலைநவிலின். (௪௨)

இந்தவுத்தமதானத்தை யெவரெனுமுணர்வால்
வந்துகாண்கினுங்கேட்கினு மிகவழிபடினுஞ்

சிந்தைவேட்டனவனைத்தையு மிம்மையிற்சிறப்பா
லெந்தையார்தரத்துய்த்தபின் முத்தியெய்திடுவார். (௪௩)

சுருதியின்படித்தாந்திரு வதரியைச்சூழ்ந்து
பருதிமாலயன்புரந்தரன் பன்னிருசுடரோ
ருரைதருஞ்சனகாதிய ருருத்திரர்வசுக்கள்
வரைதரும்புகழ் மேருவையாதியமலைகள். (௪௪)

கங்கையாதியகடவுண்மா நதிகணற்கதிக்கா
பங்கடைந்தருளுண்மையி னமலமாம்பொருட்டாற்
றங்கிசித்தியம்வதிதலாற் றனித்தனிவிரித்து
நங்களுக்கெபானுணர்த்துமா றெவன்மறைநுவன்றீர். (௪௫)

மாகரிந்நகர்மகிமையை யுணர்ந்தபின்றங்கள்
போகபூமியைமறந்தன ரலைகட்புவிவரயப்
பேசனுகியபெருந்திறற் காதிசேய்பிரம
யோகியானதவ் வுத்தமதலத்தினுலன்றோ. (௪௬)

அருமைமிக்கவிம்மாதல மகிமையுமளப்பில்
பெருமையும்பெரிதாதலாற் பிறங்குநூற்கேள்வித்
தருமசன்மனச்சாபதீத் தருங்கதிசார்ந்தங்
கிருமையெய்தினு னென்றனனிருடியர்கோமான். (௪௭)

## ஒன்பதாவது தருமசன்மன்கதிபெற்றசருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௯-க்கு விருத்தம்-(௫௦௧)

திருச்சிற்றம்பலம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பத்தாவது

# விசுவாமித்திரன்.

## பிரமவிருடியான சருக்கம்.

---

தாதிவர்நறும்பூந் தடந்தொறுமலர்ந்த தாமரைப்பொகுட்டிடைத்தணவா, தோதிமச்சேவல் பெடையொடுந்தேற லுண்டினிதுறைந்துகண்வளரு, மூதெயிலுடுத்த வளம்பொலிபவாகி முதுநகரடைந்துநோற்றினிது, காதிசேய்பிரம விருடியாயுயர்ந்த காதையைவிரித்தினிப்புகல்வாம். (க)

அவிர்தருபோதச் சவுனகராதி யருந்தவர் சூதனைமீட்டும் புவிதனிலிறைமை பூண்டகோசிகனப் புனிதமாதலத்தடைந் தருளா, லிவரருந்தவஞ்செய் தலகெலாம்பிரம விருடியென் றியம்பிடப்பெற்ற, தவலருஞ்சிறப்பை யுரைத்தியென் றிசைப் பமுனிவரன்மகிழ்ச்சியிற்சாற்றும். (உ)

கத்திகைநறும்பூங்குழன்மடமகளிர் கவரிகளிருபுடையிரட்டமத்தமாவெருத்தம் பொலிந்தொருகுடைக்கீழ் மாநிலமுழுவதும்புரக்கும், கொத்தலரலங்கன் மன்னர்தங்குலத்துக் கோ

சிகன்கோதகல்செங்கோ, லுத்தமநெறியான் மனுமுறைநடாத்தி யுலகரசியற்றுமந்நாளின். (ங)

தன்னுழையவராற் கள்வராற்றன்னாற் றரியலரான்மறவிலங்கா, லின்னலோரணுவுமிடையுறுவண்ணமினிதுகாத்திருநிலம்புரக்கு,மன்னரேறனைய கோசிகனொருநாள்விலங்கடுவேட்டைமேன்மனனுய்க், கொன்னுனைவேற்கைப் படைக்குழாத்தோடுங் குறுகினனொருவனச்சார்பில். (ச)

தன்னரும்பனைக்கை மும்மதநால்வாய்த் தழற்சிறுதறுகண்மால்வேழ,முள்ளருங்கவன வாம்பரிபுலிப்போத் துறழ்சினத்திறலுடைக்கழற்கான், மள்ளர்களொடும்போய் வெண்பிறைக்கோட்டால் வாவினுற்சிதைந்ததேனருவி, வெள்ளமாயோடுமொருமலைச்சார்பின் மேவிமாவேட்டையாடினனுல். (ரு)

சல்லரிதுவைப்ப முருகியங்கறங்கச் சாபவன்கொலைஞர்கள்குரவை, செல்லெனமுழங்க வடுகொலைமிருகத் திரள்பலபடுத்துமேற்செல்லு, மெல்லவன்கரங்கண் முறுக்கிடச்சிலபோதெழிற்றருநீழல்வாய்வைகி, யல்லறீர்ந்தளப்பி ருனைகளோடும்வசிட்டனுச்சிரமத்தையடைந்தான். (சு)

தளப்பெருங்கடலோ டணைந்தகோசிகனைத் தாயருமகவினைக்கண்டாங், குளப்பருங்களியா னேக்கிமாதவர்க்கு ளுத்தமவசிட்டன்மாமுகம, னளப்பிலவளிப்ப வணங்கினன்விடைதந்தருளெனப்பசிக்கியாமுதவல்,களிப்பொடுமெருந்தி யேகுதல்கடனென் றுணர்த்திடக்கவுசிகன்புகல்வான். (எ)

அருந்துதல்வாழ்த லனைத்துமின்னதுவே யல்லதுபிறிதிலையளவில், பெருந்திறற்முனையிருத்தலாலெமக்குன்பேருளோ

ன்றுமேசாலு, மருந்தவத்துயர்ந்தோ யென்னலுநகைகூர்ந்தந ல்படிந்தமலனைப்பூசித், திருந்தமுதருந்தி யேகலாமென்ன விய ம்பினனிருடியர்பெருமான். (அ)

போதமிக்குயர்ந்தோ னருள்செயக்கேட்ட புலன்றெரிய மைச்சர்களுயர்ந்தோர், மூதுரைகடக்க லறனலவென்று முக மலர்ந்திசைந்தனனாகி, நீதியினெருப்பட் டேகினன்றனது நியதி கணெறிமுறைமுடித்தான், மாதவன்காம தேனுவையழைத்து வேண்டுவவழங்கென வகுத்தான். (கூ)

வந்தநாற்படைக்கு மந்திரத்தவர்க்கு மாசனம்வகைவகைதி ருத்தி,யிந்திராதியர்க்கு மெய்தொணுவமுதி னின்சுவைப்போ னகவருக்கங், கந்தமார்பலங்கள் முதலியவமைத்துக் காத்தினிதி ருந்திடுமெல்லை, விந்தைசேர்விசுவா மித்திரனென்னும் வேந் தனுங்குவப்பொடுமெய்தா. (கO)

மறுவறுதவத்தோன் முகமனூற்பந்தி வரிசையாலாசனத்திரு த்தி, யறுசுவையுண்டிக் கமைந்தனவனைத்துங் கடவுளானளித் திடப்பெய்து, நறியநெய்தயிர்பால் தீஞ்சுவைப்பலன்க ளாதிய ணிவுறப்படைப்ப, வெறிகமழ்தாரான் சுரரமுதருந்து மேன் மையின் விருந்துசெய்தனனால். (கக)

தூக்கமிலிமையோர் மாதவனளித்த தூயதெள்ளாரமுதுண் டு, தேக்கிடல்போலச் சேனையும்பூசச் செல்வருந்திறல்கெழு வேந்தும், தாக்கரும்பசிதீர்ந் திகபரமுணர்ந்த தாபதற்புகழ்ந்த லுந்தகவால், பூக்கமழ்கந்த மாடைபொற்கலந்தாம் பூலமும்வரி சையினுதவா. (கஉ)

இன்னணம்வேட்ட வனைத்தையுமிமையோ ரெழினகர்ச்சுரபியீந்திடலு, மன்னவன்காணு வதிசயமடைந்திம் மாதவவசிட்டன்மாட்டிருந்த, பொன்னவிர்சுரபி யிருநிலமுழுதும் புரந்தரனுலகமுமடையி, னுன்னினவனைத்து முதவுமற்றிதனுக் கொப்பதொன்றிலையெனநினைந்தான். (கரு)

கரந்தனிலவிரு மாழியங்கமலக் கண்ணினன்கதிர்மணிமார்பி, னிருந்தவளிந்த வுருவெடுத்திருடிக் கியற்றியபணிகொலோவீசன், பெருந்திருவருளோ மந்திரவலியோ யாதெனப்பேசுகேனிந்த, வருந்தவன்செய்த தவவலிக்கேற்றம் யாதெனவதிசயமடைந்தான். (கச)

நிவப்புறுசெம்பொன் மேருவுங்குபேர னிதியமுநெடுங்கடல்சூழ்ந்த, புவிப்பொறையேந்து புயங்கர்கோன்றிருவும் புரந்தராதியர்பெருவாழ்வு, மூவப்பொடுங்காம மாதியவிடைய மொருத்துமிக்கொளிவிடநோற்குந், தவப்பெருவலிக்கோ ரணுவெனநினைந்து தன்னரசாற்றலைவெறுத்தான். (கடு)

இவ்வணநினைந்த கருத்தினனாகி யிருடியைப்பார்த்தினிதுயர்ந்த, செவ்வியோயுனது தவப்பெருவலியாற் செகத்திரண்முழுவதுமங்கைத், திவ்வியாமலகக் கனியெனக்கண்டா யுனக்கரிதொன்றிலைத்தெரியிற், குவ்வினைப்புரக்குங் கொள்கையாலெமக்கிக் கோவினைநல்குதியென்றான். (கசு)

சுமையுலகளிக்குந் தோன்றலிங்குரைப்பக் கேட்டருள்தூயவன்சுரபி, நமதல்வளித்தற் காசநீயழைத்தால் னன்னுமேற்கொண்டுசெல்கென்ன, வமைவொடுமுன்னர் வருந்திநாம

ழைக்க வணைத்ததாலன்னதென்றுரைப்ப, யிமையவரானைத் தூதர்நீருபாயத் தெம்முழைத்தருதிரென் றிசைத்தான். (௧௭)

கணங்கொடுசென்ற காளையரரசன் கட்டுரைதலைக்கொடு சென்று, குணங்களாற்கொணரார் குணங்களாற்பிணிப்பப் பொடிபடக்கோட்டினூற்சிதைத்துத், தணந்துயர்தவத்து வசிட்டன்மாட்டெய்தித் தாழ்ந்தியான்பிழைத்தவாறென்கொன் மணந்தருமடிகட் கென்னமுன்வணங்கி வாய்மையாலினிதிசைத்திடுமால். (௧௮)

நின்மனதுவக்க வளித்ததோவன்றி திருபர்கோனெனேமன நச்சி, வன்மையிற்பற்றித் தன்னகர்செல்வான் மதித்ததோசாற்றெனவுயர்ந்த, சன்மதியுனோநான் றரவிலைநிரையுன் றன்மனதென்றலுந் தடைதீர்ந், தென்மணிகுயிற்றுந் தன்னமரிருக்கைக் கேகுதற்கெழுந்திடுமெல்லை. (௧௯)

சற்றுறுசினத்தாற் றுனையைநோக்கித் தராதிபனம்முழைவிரைந்து, பற்றுதிர்தருதிர் பசுவினையென்னப் படைக்குழாமொல்லைபோய்வளைந்து, சுற்றலுந்தெய்வச் சுரபிவெஞ்சிற்றஞ் சொலித்துடன்மயிர்த்துளைதோறுந், தெற்றெனப்பலர்களுதித்திடநினைப்பச் செனித்தனர்திறல்கெழுவீரர். (௨௦)

படைக்கலந்தாங்கி யுதித்தவரந்தப் பார்த்திபன்றுனைமேற்பாய்ந்து, முடுக்கிவெஞ்சீற்றம் விளைத்தலும்வேந்தன் முனைப்படைமுரிந்துபோய்ப்பைம்புல், விடைக்கிடைபற்ற நோக்கியகவுசி கேந்திரன்வெள்கியாமெழில்சேர், குடைக்குலமன்னர் குலத்திடைவந்து மென்செயவென்றுளங் குறித்தான். (௨௧)

வேறு.

எய்தியதானைகள் வெங்கிடல்கண்டரு ளிகல்வேலான்
மைதவிர்மந்திரர் தங்களைநோக்கியிம் மகியாவும்
மெய்தகவாளுகி னும்பலமொன்றிலை மேலாகச்
செய்தவமேபெரி தாயுளதென்றுரை செய்தானல். (உஉ)

நீட்டியசெங்கதிர் சூழவிருந்த நிலப்பார
மாட்டுறைமந்திரர் மீதுசுமத்தி வளந்தேங்கு
நாடடின்விடுத்தினி நான்மறையோனென நனியோக
மீட்டுவனென்று நடந்தனனல்வினை யிசைவாலே. (உ௩)

மன்றல்செறிந்து விளங்கிவளங்செழு மாமேருக்
குன்றமடைந்தலர் தண்டலைதுன்றிய குணபாலிற்
சென்றனன்வன்னி நறுந்தருநீழல் சிறந்தங்க
ணொன்றினன்வைகி யிருந்துதவத்தி னொருப்பட்டான். (உச)

மிக்கமனப்புல மூடியவிந்திய வெங்கானை
யக்கரமைந்தெனும் வாழ்கொடகற்றிமெய் யருண்ஞானந்
தொக்கமெய்வித்தினை வித்தியருட் சொருபானந்த
மிக்கபலன்செய் தருந்தவயோகம் விளைத்தானல். (உரு)

ஓடியவெம்பரி மானைவிறத்துறி னுள்ளாகக்
கோடியவெங்கடி வாளம்வலித்திடு குணமேபோ
லிடிவிரிந்த மனத்தைநிறுத்த நிவந்தோடு
மீடுனவாயுவை யீர்த்தசைவின்றி யிருந்தானல். (உசு)

(வேறு)

மயர்வறவுயர்ந்தவேதம் வகுத்தவட் டாங்கயோக
மியமநன்னியமமீறி லாசனம் பிராணயாம

முயர்பிரத்தியாகாரந்தா ரணையுமைப் பருந்தியானந்
தயையுளசமாதியென்னச் சாற்றுமிவ்வியோகமெட்டின். (௨௭)
விரிந்துளவுயிர்கொல்லாமை மெய்மைகள்ளாமையன்பி
னெருங்குமிந்தியமடக்க லொருவர்பாலேற்றிடாமை
பரிந்துளவியமமாகும் பன்னருமறைகடேர்த
னிரம்பியமகிழ்ச்சிபூசை சவுசநன்னியமமாமால். (௨௮)
ஊருவிற்றாள்கண்மாறி யேற்றிமாலொழிந்திருத்தல்
சீருறவோங்குபத்மாசனமெனத் தெரிப்பரிந்த
வேர்கெழுதவிசின்யாக்கை யெய்தியவழிபிராண
னேருறநிறுத்தறன்னைப் பிராணயமென்பர்நூலோர். (௨௯)
தாங்கருஞ்செபத்தோடாற்றல் சகற்பமாந்தனிச்செபத்தை
நீங்கியபிராணயாமங் கற்பமாகிளாங்காரத்
தோங்கிநின்றுயர்ந்தகாயத் திரியினையுதித்துமீது
தேங்கிடமுக்கால்நன்கிற் செபித்தலும்பிராணயாமம். (௩௦)
வீண்டரேசகநன்மூச்சை விடுத்தல்பூரகமதேற்றல்
கொண்டுளேநிறுத்தல்தன்னைக் கும்பகமாகுமென்பர்
திண்டிறல்விடையந்தன்னி லிந்தியஞ்செலாதடக்க
லெண்டருமறைகள்வல்லோர் பிரத்தியாகாரமென்பார். (௩௧)
திறனுறவிதையமுச்சி யுந்தியிற்சித்தந்தன்னை
நிறுவல்தாரணையதாகு நிமலமாய்நிறைந்தமுக்கட்
கறைமிடற்றவனைக்கால காலனைக்கருத்துளூன்றித்
திறனுறவேறொன்றெண்ணு திருத்துதல்தியானமாகும். (௩௨)
புறம்பினுமுள்ளுமெங்கும் பூரணமாகிநின்ற
திறம்பெறுபிரமந்தன்னைத் தெரிவுறவெங்குநோக்கல்

சிறந்திடுஞ்சமாதியாமென் றுணர்த்துவர்சிவாகமாதி
யறிந்தவரிந்தவோரெட் டங்கமாயோகமெல்லாம். (௬௩)

வீக்குமாசனத்தின்வைகி மேதகவிழிகடன்னை
மூக்கினன்னுதியினட்டி மாயையைமுறுக்கிஞானந்
தேக்கிமிக்குயர்ந்தகாயத் திரியுனிச்சிவசொரூப
நோக்கியாயிரப்பத்தாண்டு நுவலரும்யோகஞ்செய்தான். (௬௪)

வாயுவுங்கந்தமூல வனமுமிர்ச்சலமுமாகி
யாயிரப்பத்தாண்டெல்லை யருந்தவமுயன்றபின்னர்த்
தீயினுளுருக்குஞ்செம்பொற் றேகமோடெழுந்துசென்று
மாயிரும்பிரமயோகி யாயினம்வசிட்டவென்ன. (௬௫)

என்றலும்பிரமயோகி யின்னநீயல்லையென்று
வன்றவனுரைப்பவுள்ளத் தடக்கியசீற்றத்தோடுஞ்
சென்றனனுயர்ந்தஞானத் திருமறைக்காட்டினண்ணி
நின்றதோர்வன்னித்தாரு நீழல்வாயிருந்துநோற்றான். (௬௬)

பன்னருஞ்சிரத்துமீது பன்னிரங்குலிக்குமப்பா
னன்னர்சேர்மூலந்தன்னின் ஞானநாளத்துமீதே
யின்னனுவாதியாமெட் டிதளொடுஞ்சித்துரூப
மன்னியபொருட்டினப்பண் வயங்கியதொன்றேதென்னில்.

ஆரொளிபரப்பிநூறு யிரங்கதிரவிர்தல்போலப்
பேரொளிவிளங்குமென்று குடிலையேபேசுகின்ற
வோரொளிதன்னைமாறு தன்னிகின்றிலக்கமாண்டு
சேருறஞானச்சாவித் திரியுனித்தவஞ்செய்தானல். (௬௮)

இவ்வணமிமையோரஞ்ச விருந்தருந்தவஞ்செய்தேகிச்
செவ்வணவசிட்டன்பாற்சென் றருந்தவந்திருந்தநோற்றியா
மெவ்வமற்றுயர்ந்ததூய பிரமமாவிருடியானே
மொவ்வுதியென்னலோடு முறைசெய்வான்வசிட்டன்மீட்டும்,

திரமுறுதவங்கள்பன்னாட் செய்ததாற்றவசியாகி
யுரனுறவிளங்காநின்றுயென்னலுமுவக்கானின்னும்
பிரமமாவிருடியென்று பேசிலனெனவுள்ளெண்ணி
யிருமடங்கின்னநோற்போமென்றுன்னியெழுந்துபோனன்.()

எல்லையில்சையவெற்பை யெய்தினனெய்தியாங்கோர்
நெல்லியந்தாருநீழனெடிதிருந் தருநூல்சொன்ன
நல்லவாறெழுகிச்சாவித் திரியுன்னிநாளுநோற்று
வல்லவீரைந்திலக்கம் வருடமும்யோகஞ்செய்தான். (சுரு)

தடம்படுமுலகினுள்ள சராசரமனைத்துமெல்ல
நடுங்கிடநாகநாட்டோர் நாட்டமுஞ்செவியுமூடக்
குடைந்ததோரோதைகேளாக் குரவனையாதிவானோ
ரடைந்தனர்சையவெற்பி லருந்தவத்துயர்ந்தோன்பாங்கர். ()

ஐயநின்றனைப்போனேற்றார் யாவர்கொல்குருரமாய்நீ
செய்தவம்பெரிதுமிக்காய்ச் சிறந்திடும்பிரமயோக
மெய்திலையினியிப்பூவி னேற்றமாம்பவாநிகூடற்
றுய்யமாதலத்துநீபோய்த் துன்னுதியென்றுபோனர். (சா)

வேதியனறிவானோர் வியந்துமுன்விளம்பிப்போந்த
நீதகல்விசுவாமித்திரன் சிவனுருப்பெற்றுங்குப்

போதல்போலெழுந்து தெய்வப்பொன்னியிற்பவாங்கூடு
மாதலத்தடைந்துசங்க மாதிரேர்விதியினுடி. (௪௪)

சிவவடிவாயகாயத் திரிசிலையிடத்தும்ஞானத்
தவமருள்சங்கமேசன் சன்னிதானத்துமேலா
யுவமையில்வேதக்குன்றத் தச்சியுமிருந்துபன்னு
ளுவலருங்கந்தமூல நகர்ந்துமாதவத்தைநோற்றுன். (௪௫)

முன்னருந்தவஞ்செய்தார்க்கு மும்மடங்கதிகமாமிப்
பொன்னகரிடத்தநூறு புண்ணியப்புத்தேழாண்டு
மன்னிமெய்வருந்திநோற்கு மாட்சியாலுலகமெல்லாம்
வன்னிபோலெழுந்தன்னேன்செய் மாதவர்தகித்ததன்றே. ()

இந்திராதிவானே ரிதையமாகுக்கத்தோடும்
வந்தனர்வசிட்டன்றன்பால் வழுத்தினர்வழுத்துங்காலை
யந்தணன்முனிபாலெய்தி யருந்தவபிரமயோகி
யிந்தமாதலத்தினானு யினியுனைக்கொப்பார்யாரே. (௪௭)

புரிதனிலுயர்ந்தவிந்தப் புண்ணியநகரின்வந்து
பெரிதுநீநோற்றலாலே பிரமமாவிருடியானு
யரிதுனக்கினிவேறில்லை யருண்மிகுங்கடவுளானை
வருதியென்றழைக்குமுன்னே வந்துமுன்னேவல்செய்யும்(௪அ)

என்றெதிர்வசிட்டன்கூற விசலறபிரமயோகத்
தோன்றினமுனிவன்போத வுவகையின்மலர்ந்தகாலைத்
துன்றியமுனிவராதி சுரா-ாலாம்புகழ்தல்செய்தார்
வென்றிமாதவஞ்செய்வோரகன் யகைமையைவிளம்பலாமோ.

விப்பிரவிருடியான மேன்மையோன் பவாங்கூடன்
முப்புரங்கடந்தமூரன் முதல்வனை மூன்றுபோதுஞ்

செப்பமிக்குயர்ந்தபூசை திருத்தியத் தெய்வஞான
வைப்பிடைவதிந்தானந்த மகிமையார் வழுத்தவல்லார். (௫0)

ஆதலாற்பிரமயோக மருந்தவன் றனக்குநல்கு
மாதலமகிமையார்க்கும் வழுத்திடற் கரிதங்கெய்தி
யாதொருபுருடனேனு மருமறைச்சிலம்பினேற்கிற்
றீதகல்சரீரத்தோடுந் தேவனாய்விளங்குறிண்ணம். (௫௧)

எதிகளாற்புகழுங்காயத் திரிசிலையிருந்துள் ளன்பாற்
றிதமுறச்சுசியாற்காயத் திரியிலோர் செபஞ்செய்தாலுஞ்
சதுமறையத்தியானந் தான்செய்தபலன்வந்தெய்தும்
பதிதரும்வந்துகாணிற் பாவனராவரன்றே. (௫௨)

சிவவடிவானகாயத் திரிசிலையிடத்திபாரேனு
முவமையின்றுயர்ந்தவட்டோத் திரசகத்திரத்தையுன்னிற்
புவியிடைமற்றைத்தானம் புக்கிமெய்பன்பிற்கோடி
திவியமாயிருந்தகாயத் திரிசெபித்ததுநேரொக்கும். (௫௩)

விதியினாற்செபித்திட்டாலும் விதியின்றிச்செபித்திட்டாலு
மதிகமாம்பலமேயல்லா லற்பமாம்பலமுறாதா
லிதுமறைநூவன்றவுண்மை யென்றினிதுணர்வீரிந்த
முதுநகர்பிறவிக்காலை முறுக்கிடுஞ் செந்தீயாமால். (௫௪)

தெள்ளியவிச்சுவாமித் திரச்சிவயோகியெங்க
ளெள்ளருந்தவங்களாற்றி யிருடிபத்தினையாய்முக்கண்
வள்ளலைப்பாவிப்பன்றுள் வதிந்துபின்வடபான்மேரு
வொன்னொளியடுக்கல்சார்ந்தங் குவப்பொடும்வைகினால்

பதிகளிற்றிலகமாமிப் பவாநியம்பதியைப்போல
வதிசயம்பயக்குந்தான மகலிடத்துளதோவிந்த
முதுதவன்பிரமயோகி யாகியமுறைமைசொற்ற
கதைபவுடியத்திலென்று கழறினன்கருணைச்சூதன். (௫௬)

## பத்தாவது விசுவாமித்திரன் பிரமவிருடியான சருக்கம் முற்றியது.

ஆகச்சருக்கம். ௧௦ - க்கு விருத்தம். (௫௫௭.)

திருச்சிற்றம்பலம்





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பதினோராவது
# தந்துவர்த்தனன்வரம்பெற்ற
# சருக்கம்.

இன்னணம்விசுவா மித்திரன்பிரம விருடியாயினசெயலீதிப் பொன்னகரிடத்துத் தந்துவர்த்தனனும் புரவலன்போந்தருட்சுருதி, மின்னொருபாக நாயகனருளால் வேண்டியவரம்பெரிதடைந்து, தன்னிகர்பிறிதில் கதியினையடைந்த தன்மையையெடுத்தினிதுரைப்பாம். (க)

நுணங்கியகேள்விச் சவுனகர்கேட்க நவலுவான்றெரிவருநுண்காற், பணாற்றிகழ்பாந்தட் பஃறலைக்கிடந்த பாரிடைப்பவாரியம்பதியின், மணங்கமழ்வதரி மூலநாயகனை வணங்குவோர்மிருத்துவைச்சயஞ்செய்,திணங்குமெஞ்ஞானச் செல்வராய்வீட்டி லிருப்பதற்கையமொன்றிலையே. (உ)

யாதொருகரும முற்றிடவேண்டி லங்கரடைந்தருள்வடிவாம், வேதமங்கலைபங் காளனைப்பரவி வேண்டிடினெளிதினெய்திடும், மாதலமதனி னிரவிதன்குலத்து மன்னவனொரு

வன்முன்வந்து, மேதகவேட்ட பொருளெலாமடைந்து வியந்தபின் விமலவீடடைந்தான். (௩)

என்னவுமன்னோன் செய்கையைவிரித்தீண் டியம்புதியென்னலுஞ்சூதன், பன்னுமின்னுமிழு மணிமுடிவேந்தர் பாவுறுந்திறல்கெழுகழற்காற், பொன்னியந்துறைவன் மரபினிலுதித்த புண்ணியன்புரந்தரன்போல்வான், றன்னிகரில்லா மாண்பினன்றகைசால் தந்துவர்த்தனனெனுந்தக்கோன். (௪)

தீமையுங்கொடிய பொய்மையுமொதுக்கித் தெண்கடலுடுத்தபார்முழுதும், வாய்மையும்புகழுந் தருமமுந் தவமும் வண்மையுமானமும் பொறையுந், தாமகவளிக்குந் தன்மைபோல் வளர்க்குந் தகைமையான் றரியலரென்றும், பாய்மதவேழத் திரள்களைச்சாடும் படர்சினக்கோளரிபோல்வான். (௫)

திருமகள்முகமுங் கலைமகளுவுஞ் செயமகள்புயங்களுந்திடமாம், பெருமகள்மனமும் பிறங்குசந்தானப் பேரணங்குதாமுமென்மேற், றருமகள்கரமுஞ் செருமகளுருந் தயங்குசௌபாக்யமின்மார்பு, மருளமயினுவந்து வீற்றினிதிருப்பப் பெற்றனனருந்தவப் பலத்தால். (௬)

அறத்தவிசுறையு மருந்தவத்தோற்கு மந்தணர்தமக்கு மெய்யன்பா, லுறைத்தபேருணர்வி னெருப்பமெருத்தா லுயர்நவபுண்ணியர்சார்பின், றிறத்துமின்றெழுகு சீர்மையானுதி சேடனுயிரஞ்சிரத்தானிற், பொறுத்தபார்ச்சுமையை யாற்றிமன்னுயிரைப் புரிந்தரசியற்றுமகாளின். (௭)

சொலத்தருமறைநூ லொருங்குணர்ந்துயர்ந்த தூயவன் றொல்பரத்துவாச, குலத்தினிலுதிததோன் றீர்த்தயாத்திரை

செய் கோதிலான்சைவவாகமநூல், கலைத்திரளுணர்ந்து தெ
ளிந்துளோன்சங்க கன்னனென்போன்கடம்பசியான், மலைப்பு
யன்றந்துவர்த்தனச்சோழ மன்னவன்மருங்குவந் தடைந்தான்.

குடைபயில்கரமுங் குளிர்மதிமுகமுங் கோதிலாத்திருவெ
ண்ணீற்றழகும், விடையவன்படிவக் கண்டிகைபூண்டு விள
ங்குமுன்னூன்மணிமார்பு, முடையதொல்படிவி னெதிர்வ
ரக்கண்ட வொண்முடிவேந்தர்கோனெழுந்து, முடிமிசைச்செ
ங்கை குவித்தெதிர்வணங்கி முறைமையாலுபசரித்தனனால்.(கூ)

தம்பதியொடமைத் தரபதமறையோன்றுண்மலர்விளக்கியப்பு
னலை, யும்பரும்வியக்கும் புனலெனப்பருமுள்ளூற்சுத்திசெய்
திறைஞ்சி, யம்பொனாசனத்தி னிருத்தலுமிருந்த வந்தணரர
சனைநோக்கி, நம்பியவறனு மைந்தரும்வளமும் நன்மையோ
வெனநனிவினவா. (கo)

முகமலர்ந்தையன் வினவுதல்கேளா முகிழ்த்தசெங்கையின
ன்வேதச், சிகையுணருரவோய் நின்னருணலத்தாற் சிறட்பெர
மேரசுசெய்திருந்தே, னகமதின்வேறு குறைபிறிதிலைச்சந் தா
னமொன்றருந்ததுப்பற்றுன், மகவளித்திடெ லறிகிலாதைய
மைந்தனில்வாழ்வுளேனென்ன. (கக)

தானமாகாயஞ் சலதரந்திமிரஞ் சசிமடர்தையர்குணஞ்சாந்த
மாநணிகவன மந்திரஞ்சுபமா மங்கலஞ்சொற்பிரசங்கம்
பானியவோடை துறைகளையஞ்சம் பகர்சபையருந்தமிழ்வா
ணர், பூரிறைபுகழ்நற் கொடைகுலமேலாம் புதல்வனால்விளங்
குமென்றே. (கஉ)

ஆதலானாதி நூலொருங்குணர்ந்த வந்தணவடியனேனினியு ன், பாதநாண்மலர்கள் டிறைஞ்சிய நலத்தான் மைந்தனைப்ப டைத்தவனானேன், றீதனையகன்றே னென்றெடுத்திசைத்துச் செங்கரங் குவித்தலுஞ்சிறந்த, வேதியர்தலைவன் சிவன்பத நினைந்து வேந்தனைப்பார்த்திவை நவிலும். (கங)

சங்கலைதவழும் பொன்னிநன்னாட கேளெனச்சாற்றுவான் றகைசால், கொங்குமண்டலத்திற் காவிரிநதியிற் குளிர்மணி கொழித்திடுபவானி, சங்கமஞ்செய்யு நாப்பணிற்கடவுட் டான மாயொருசிவதலமுண்,டங்கதிற்பரமாற் புதவடிவாகி யவதரித் திருந்ததோர்வதரி. (கச)

அலக்குமத்தருவி னிழல்வாய்மறைகட் கனாதியாய்முளைத்தரு ள்பழுத்த, விலிங்கமொன்றருணச் சோதியின்வடிவா யிருந்த தாலிந்திரனயன்மால், துலங்கருட்பராசன் வசிட்டனாரதனைத் தொன்னகர்தன்னை யெந்நாளும், வலங்கொடுவணங்கி மக ஞ்செய்துநோற்று வதிந்தனர் வேண்டுவவடைந்தார். (கரு)

கருதியவுதவுந் தருக்களேவந்தக் கடவுள்வைப்பிடைநெடுவத ரித், தருவதாய்ப்பணைத்துப் பலங்களுங்கொத்துஞ் சாய்வசெயு மாய்விளங்கிடுமெம், பருவலர்வனத்தின் விஞ்சையரியக்கர் வான வர்சித்தர்கண் மறையோ, ரரவநாட்டவர்க ளிருடியர்முனிவ ராதியோர்நீங்கிடமாட்டார். (கசு)

மூதெயிலுடுத்த வச்சிவதான மூவுலகமுந் தொழச்சிறக்கு
மாதலினங்குச் சங்கமேச்சுரனை யரியகாயத்திரிசிலையை
வேதவன்கிரியை வதரிமாத்தருவை மெய்மையால்வலஞ்செய்

துதினமுந், தாதவிழ்மலர்சேர் கரைத்திரிவேணி சங்கமப்புனல் படிதக்கோர். (கஎ)

எண்ணியகருமம் யாதேனுமெளிதி னெய்திடுமாதலினந்தப் புண்ணியதலத்தை விரைவினிலடைந்து புரவலசங்கமமாடிக் கண்ணினுண்மணியாய் விளங்கிடும்வதரி காவனக்கடவுளைவி தியா, லுண்ணிறையன்பின் வழிபடுவாயே லுனக்குநற்பொரு ளுறுமென்றான். (கஅ)

பின்னருமுறைப்பான் பார்த்திபவேதப் பெண்ணொருபாகனா லயத்துச், சன்னிதிநின்று வேண்டினவெண்ணித் தாழ்ந்துநூற் றெட்டதாய்வலஞ்செய், திங்கிலதிங்க ளளவையுமியற்று மெ ல்வையினிலந்தையங்கனியொன், றன்னவனருளாற் கிடைத்தி டுங்கிடைத்தா லரும்பெறன்மகவுனக்குண்டாம். (க௯)

கிட்டியதெய்வ வதரியங்கனியைக் கிளர்சுடர்மணிமுடியோ யுன், மட்டவிழ்கூந்தற் கற்புடைமனைவி மலற்கரத்தளித்தவ ட்கருத்தி, யிட்டபினெந்தை யருளினுன்மகப்பே றெய்துநீயே கெனவியம்பிச், சிட்டனான்மறையோ னுசிசெய்திறைவன் சிற ப்பினிதளித்திடப்போனன். (உ0)

(வேறு.)

நூனெறியான னிவ்வாறுநுவன்று
போனபின்வெய்ய புலிக்கொடியுள்ள
மானனிவாண்முடி மன்னர்பிரானும்
வானவர்கோனின் மகிழ்ச்சிசிறந்தான். (உக)

மந்திரர்தம்மொடும் மாமறையாளன்
வந்தருடன்மை வழுத்திமெய்யன்பர
லெந்தைபவாநி நகர்க்கினிதெய்தச்
சிந்தையொருப்படு செய்கையனானான். (௨௨)

கங்குலுநண்பக லுங்கடிமன்றல்
பொங்குபவாநி புரித்திரிவேணி
சங்கமநாயகனைச் சதுர்வேத
மங்கைமணாளனை வாழ்த்துவதானான். (௨௩)

அங்கமொராறு முணர்ந்தவரன்பாய்
மங்கலவோரை வகுத்ததினத்திற்
சங்கமகேத்திரஞ் சாரவெழுந்தா
னெங்குமெழுந்தின் னியங்கள்கறங்க. (௨௪)

வேதியர்மங்கல வாசிவிளைக்க
மாதவர்வந்து வெண்ணீறுவழங்கப்
போதநியெல்றயர் புண்ணியர்கூற
வாதுவரின்மை யகன்றினிதோட. (௨௫)

மாமிசைமந்திரர் வந்துவணங்கத்
தேர்மதமாப்பரி சேனைகள்சூழத்
தாமரையாள்பயி றன்சடிமார்ப
னேர்மணியான மிவர்ந்துநடந்தான். (௨௬)

முத்தமணிக்கொடை மொய்த்தபதாகை
சுத்தவியங்கடு வைத்திடவானிர்

தத்தலையின்புடை சாமரைதிங்கள்
வத்திரமாமட வார்களிரட்ட. (உஎ)

இன்னெறியில்லொடு மெய்தியமன்னர்
மன்னனனீக வளத்தொடெழுந்தே
கன்னிமதிற்கடி மாநகர்நீங்கிச்
செந்நெறிமேற்றிசை சேரநடந்தான். (உஅ)

தன்றிருநாட்டுள சைவதலங்க
ளொன்றும்விடாது வணங்கியுளன்பாற்
சென்றுதனெல்லை கடந்தணிசேரன்
குன்றடருங்குடகொங்கையடைந்தான். (உக)

வண்டுகெடத்தலர் வாயுகுதேற
லுண்டுகளிப்பொடு செவ்வளியூதக்
கொண்டல்படிந்துயர் குன்றின்முழங்கக்
கண்டுநடிப்பன காமருமஞ்ஞை. (௩0)

தேறல்வளர்த்த கறிக்கொடிசேண்காம்
பேறிநறுந்தரு விற்படர்கிற்கு
மீறில்வரைக்க ணிருந்திளிநான
யாறின்முனிக்கற லாம்பல்களூட்டும். (௩௧)

ஓர்பொழுதுங்குளி ருறைபொருமற்
கார்முகிலாகிய போர்வைகவித்துச்
சார்வுளசெம்மணி யைத்தழன்மூட்டி
யேர்பெறமின்ற வடுக்கல்களெல்லாம். (௩௨)

பருப்பதநீடிய பச்சிமகோங்கின்
றிருப்பொலிவைப்படர் செம்பியர்கோமான்
விருப்பொடுநோக்கிவ் வில்லவன்மேனாட்
டரிப்பொடுசெய்தவ மேதவமென்றான். (௩௩)

இன்னனமெண்ணி மகிழ்ச்சியினெய்தும்
பொன்னிநறுந்துறை வன்புகழ்வேத
மின்றொருபாகன் விளங்கியநண்ணு
மென்றுமரும்பதி யெல்லையையுற்றான். (௩௪)

ஆழிநெடுங்கிரி யானையும்பொற்
சூழிகையுங்கதிர் தோய்மணிமாட
மாழிகையுந்தனி கண்டருண்மன்னன்
வாழியயான மிழிந்துவணங்கி. (௩௫)

(வேறு.)

சங்கசன்னகுஞ்சரமுமறக்குரிசின்முன் சாற்றியதலமீதென் றங்கைகூப்பியின் றடிக்கடிதாழ்ந்துசென் றமைச்சர்கள்புடை சூழப், பொங்குதானையைப் புறத்தினிலிருத்திமெய்ப் பூசுரரொ டிர்தோன்றி, மங்கலஞ்சொல மலரடிவணங்கியம் மாநகரி னடைப்புக்கான். (௩௬)

சிந்துரச்செழுஞ்சுண்ணமும் பொரியும்வெள்ளரிசியுந்,திருச் சாந்தம், கந்தமும்பனி மலர்களுந்தருப்பையும் கலவையும்வர ம்பின்றிச், சிந்தியெங்கணும் டெடந்திடுமெந்தணர் திருத்தெருவ லஞ்செய்தே, வந்துவானவர் நெருங்கிடுங்கோபுர வாயிலைப்ப ணிந்தானல். (௩௭)

பந்துவர்க்கமும் பாவலர்வர்க்கமும் பாரிருபுடைசூழத்
தந்திரப்பெருந் தலைவர்களுடன்வரச் சாமரைபுடைதுள்ள
மந்திரக்கலை மறையவராசியின் மங்கலவணிதாங்கித்
நந்துவர்த்தன மன்னவனன்பொடுஞ் சங்கமக்கரைபுக்கான். ()

அங்கமாறையுஞ் சுருதியோர்நான்கையு மளந்தருண்மறைச்
செல்வர், தங்கள்வாய்மனு வழிமுறைசங்கற்பந் தனிப்புகன்ற
ருள்வேத, மங்கைபாகனை யுன்னிநற்றுணையொடும் வரன்மு
றைகுடைந்தாடி, யங்குத்தர்ப்பண திகண்முதற்கருமங்க ளனைத்து
முற்றியபின்னர். (நகூ)

இப்பிவாய்ப்படுமுறைமணியாதல்போ லிரும்பலம்பெரிதீயு
மொரப்பிலுத்தமமறையவர்க்கறநெறி யுறும்பொருண்முதற்ரு
ணந், துப்பினிந்துபே ரன்பொடுமருந்தவர் சூழ்வரப்பெருஞ்
சாய்கை, செப்புவோரொடுஞ் சென்றுகாயத்திரிச்சிலையினைப்
பணிந்தேத்தி. (சo)

அஞ்சலித்தசெங் கையொடுமுருகிய வகத்தொடுமெழுத்தஞ்
சுஞ், சஞ்சரித்திடு நாவொடும்ஞானநீர்ததும்பியவிழியோடு, ம
ஞ்சரிக்குழல் வேதநாயகிமண வாளன்வைகியசெம்பொன், வி
ஞ்சுமாலயம் புகுந்தனன்மறையொலி வேதியர்குழுவோடும்.

வேதநாயகி பாகனைமாலயன் விபுதருக்கரியானைப், போத
நான்மறை முடிகளுந்தொடர்வரும் புனிதனைப்புரங்கொன்ற
நேதவாணகை விமலனைக்கண்டலுஞ் செங்கனல்மெழுகாகி
யோதரிளொசை வுருகினன்கரங்குவித் தோவியமெனநின்றான். ()

கடிகையொன்றுசெல் காறுமெய்யானந்தக் கடல்படிந்தெ
ழுந்தான்போற், படியில்வீழ்ந்தனன் பன்முறைபரவினன் ப
ண்ணவர்தமைப்பார்த்தெம், மடிகளுக்கபி டேகமாதியவினை
ந் தாற்றுதிரெனத்தூவெண், பொடியணிந்தருள் புண்ணியர்
திருக்கையாற் பூசனைசிறப்பித்தார். (௪௩)

முன்னியக்கர்கோன் பூசனையியற்றிய முறையினும்பெரிதா
க, மன்னர்மன்னவன் சோடசமுகமனுல் மறைவிதிவழுவாம
லென்னையாளுடை யிறைவனைப்பூசைசெய் திறைஞ்சிவாழ்த்தி
னனெந்தை, தன்னருட்பெரி தடைந்துவேதியரொடுஞ் சன்
னிதிவலஞ்சார்வான். (௪௪)

பிரதமைத்தின மாதியாய்முப்பது பெறலருந்தினங்காறும்
விரதம்வைத்தொரு நியமமாய்நினைந்தவன் வேதியர்திரள்சூழ்ச்
சரதான்மறை முழங்கிடத்தூரியந் தனித்தனியெழுந்தாற்பத்
தெரிதருங்கதிர் மரபினுன் றிருப்பிர தெக்கணம்வருகின்றன்.

வலஞ்செய்வான்வரும் போதினிற்றெய்வத வதரியந்தருச்
சார்பி, லலங்கொள்பூங்கனி யொன்றெதிர்தோன்றலு நான்
மறைக்கொடிபாகத், திலங்குமீசன தருளெனவிறைஞ்சின
னெடுத்தனனினம்போற், றலங்குகண்களி லொத்தினன்மகி
ழ்ந்தனன் சுடர்முடிமிசைவைத்தான். (௪௬)

இன்னபேரரு ளதிசயங்கண்டது மிருமருங்குறுநூலோர்
மன்னனின்றனக் கனவிலாப்புகழுடை மைந்தன்வந்துதிப்பா
னென், றன்னலோர்சொல வணங்கினன்வேண்டவே வளித்த

னன்களிவெள்ளந், தன்னிலாழ்ந்தனன் வலஞ்செய்துநாயகன் சன்னிதிக்கெதிர்சார்ந்தான். (சஎ)

அருத்தியான்மிக வணங்கினன்றுதித்தனன் னருளடைந்தவ னுகிக், கருத்துமுற்றிய பன்னிகைவதரியங் கனியளித்தனன்பி ன்னர்த்,திருத்தகுர்தலமறையவர்க்களவறுசெம்பொனல்கியன் பாயப், புரத்துவேள்விக ளதிதிபூசைகண்முதல்யானவயும்புரிந் திட்டான். (சஅ)

இன்னநீர்மையி னுட்குநாளன்பினமிக் கேத்தமாயெழில் வேந்தன், முன்னர்வேதியன் மொழிப்படிநூல்வழி முறைமை யுந்தவிராமற், பன்னிதன்னெடு முப்பதுதினமுமப் பதியிடை வழிபட்டான், குன்றுரும்பணி யுள்ளமும்புறம்புமொத் துனுற் றுநாளினிலோர்நாள். (சகூ)

சாலவேதியர் தம்மொடுமெருத்தியாற் சங்கமேசனைமூன்று காலமுந்தொழு தாலயம்வலம்வருங் காலயினருள்நேக்குஞ் சேலைவென்றகண் மறைக்கொடிதன்னெடுந் தெக்கணவள கேசன், மூலமாந்திரு வதரியஞ்சாய்கைவாய் முளைத்தனன்வெ ளிநின்றான். (ருo)

கண்டுமன்னவன் கண்கணீர்கலுழ்ந்திடக் கையினைநெடு மோலி, கொண்டுமெய்மயிர்க் கூச்செறிந்தன்பினுக் குளறிவீ ழ்ந்தெதிர்நிற்ப, வண்டர்நாயக னருட்கணேக்களித்துநின் னன் பினுன்மகிழ்வுற்றேம், தொண்டரின்குலந் தழைத்திடவுயர்தரு சுதன்றனையளித்தேமால். (ருக)

நந்திவர்த்தன மன்னனந்தமையிந்தத் தலத்துமேவழிபாடு,வந்
தியற்றவக் குதித்திடுமகன்குல வர்த்தனனெனநாம, முந்தவைத்
தெம தருளினுலகெலா முறைமையிற்புரந்தீறி, லிந்தவைப்
பிடை யெம்பதம்பெறுதியென் றியம்பினன்மறைந்தானல். ()

வே று.

இவ்வாறமல னிசைத்து மறைந்திடவச்
செவ்வாறுணர்ந்த திறல்வேந்தன் செங்கைகுவித்
தெவ்வாவெளியேனை யுன்னடிமைக் காளாக்கு
மெய்வாய்மை வேதவிழுப்பொருளுன் றுள்சரணம். (ருங)

காயாமலர்மேனிக் கண்ணனும் பூங்கஞ்சமலர்
மேயானுங்காணு விமலா வடியேனைத்
தாய்போற் றலையளித்தென் றன்னைப்பணிகொண்ட
சேயாரும்வேணிச் சிவனே நின்றுன்சரணம். (ருச)

விண்ணுமெண்ணுய் விரிபுனலாய்த் தீயாகித்
தண்ணுருங்காலாய்ச் சராசரமாயெவ்வுயிர்க்குங்
கண்ணுயனுத்திரண காட்டங்களு நிறைந்த
கண்ணுவுடையவரு ளுயகநின் றுள்சரணம். (ருரு)

பூவேறுகண்ணிறைடும் புள்வாய் கிழித்தருளு
மேவேறுகையா வெளியேன் குறைதீர்த்த
தேவாதிதேவா திருகண்ணு வீற்றிருக்குஞ்
சேவேறுடைய சிவனே நின்றுன்சரணம். (ருசு)

என்னத்துதித்தா னிறைஞ்சி யருள்பெற்றுன்
பின்னுஞ்சிறப்பாற் பெருமானைப் பூசித்தான்

மன்னும்வதரி வலஞ்செய்து மாமறையோர்க்
குன்னும்பசும்பொன்னொருகோடியாங்களித்தான். (ரு௭)

தேசிற்பராச னமைத்த சிவலிங்கம்
பூசித்தருள்பெற்றுப் புண்ணியனு மெண்ணரிதா
மாசிப்பெருங்கவச மந்தணர்க டாம்பூட்ட
நேசித்தணிந்து திருப்பவிடை கொண்டான். (ரு௮)

பன்னியொடோங்கு படையும்புடைசூழச்
சின்னமொடுதாரை சிலம்பச்செழுங்கவரி
கன்னியர்கள்வீசக் கதிர்வெண்குடைநிழற்றத்
தென்னளகைமின்னை வலஞ்செய்துபுறம்போந்து. (ரு௯)

வேதகிரியைவலஞ்செய்து வீழ்ந்திறைஞ்சி
யாதியருள்பெற்றுச் செங்கோடமர்த்தபரஞ்
சோதிபதம்பரசித் துன்னார்திறமுருக்கிக்
காதுங்கதிர்வேலான் காவிரிநாடெய்தினான். (௬0)

வந்துநகரெய்தி மன்னர்பிரான்வானுலகத்
திந்திரனேயென்ன வரசியற்றியிறிலா
மைந்தற்பயந்துகுல வர்த்தனனென்றேநாமந்
தந்துபலகலையுஞ் சாற்றுவித்துமேம்படுத்தான். (௬க)

பத்தியுடன்கலைக ளெல்லாம்பழுதறக்கற்
றுத்தமனுய்கின்றகுல வர்த்தனனுக்கொண்மணஞ்செய்
தெத்திசையும்போற்ற வெறிநீர்பிறக்குகலை
மொய்த்ததிருஞாலம் புரக்கமுடிசூட்டி. (௬௨)

இம்மைமறுமை யிரண்டுக்குஞ்சாதனமா
நன்மைநெறியொழுகி ஞானியாய்நற்றவஞ்செய்
தன்மைநிலவேத வுமையொருபால்வீற்றிருந்த
செம்மலருள்கூட்டத் திருத்தாணிழல்சேர்ந்தான். (சஙா)

மன்னர்பெருமான்றந்து வர்த்தனவேந்தன்னகரின்
முன்னவனைப்பூசித்து முத்தனுமாய்ப்புத்திரனைக்
கன்னலன்போற்பெறறுக் கதியடைந்தவாறீதென்
றன்னரியமாதவர்க்குச் சூதனெடுத்துரைத்தான். (சுச)

ஆதலாலர்தவருந்தலத்தி னுண்மைவிரித்
தோதவோர்க்கு மூலவாதெம்மீசனையம்
மாதலத்திற்காண்போர் வறுமைபிணிமுதலாந்
நீதகன்றவேள்போலச் செல்வராய்மேம்படுவார். (சுரு)

## பதினோராவது தந்துவர்த்தனன் வரம்பெற்ற சருக்கம் முற்றும்.

ஆகச்சருக்கம் கக-க்கு விருத்தம். சுஉஉ.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பனிரெண்டாவது

# மருத்தன் கதிபெற்ற சருக்கம்.

செந்திருக்குடி கொண்டுவைகுதிருப்பூவாசி புரிப்பிரான்
றந்துவர்த்தன னைப்புரந்தருள் தந்ததன்மைவிளம்பினு
மந்தரச்சிலை யொத்தவாகன் மருத்தனென்றொரு வன்கணன்
வந்திவ்வைப்பிடை வெம்பிறப்பினை மாற்றுறுஞ்செயல் சாற்
றுவாம். (க)

கருத்துமுற்றிய சவுனகாதியர் கேட்கமெய்ப்பொருள் கை
வரும், திருத்தமிக்குள சூதமாமுனி செப்புவானுயர் விப்பிர
ரருத்தியிற்புக ழுரியதெக்கண வளநகயம்டதி யதனிடை
மருத்தனென்பவனெந்தைகையின் மரித்துமுன்கதிமன்னினன்.

என்றுரைத்திடுமெல்லையன்னவ னியல்பனைத்து மியம்பெனு
வென்றியந்தணர் வினவமெய்யன் விளம்புமுன்புவி மீதினிற்
கன்றுவெஞ்சின வரியனுரா காசுரன்கதிர் கால்வட
குன்றமன்ன புயத்தினனருள் குட்டனர்தகவவுணனே. (உ)

அகமிருந்த வுளத்தினன்விற லவுணரேறெனுமந்தகன்
மகன்முரண்கெழு தூமவக்கன் மடங்கலேறனையானவன்

நகையிற்பெறு பொருள்மருத்த னெனுந்திறற்றகு வோ னெடும், புகைமுரிந்தெழு வடவையிற்செறி புலவர்மேலமர் பொங்குவான். (ச)

அறமுமேன்மையு மன்புமேதகு மறிவுமானமு மாதியாந் திறமும்வேரொடு கொன்றுதின்றிடு தீமைநெஞ்சகமுண்மை யின், மறமும்வஞ்சமு மன்னுயிர்க்கு வருத்தமும்புரி வான்மிக நிறைபருந்தவ மறையவர்க்கு நெருக்கமேசெயு நீர்மையான்.(ரு)

ஆலயந்தொறு மன்னியெந்தை யருச்சனைக்குவிலக்கமாய்ச் சாலவங்கணி யற்றவந்தவர் தமையடர்த்த ரியற்புலா லாலருந்தல முன்னவெங்கு மசங்கியஞ்செய் தருந்தவர் பாலடைந்தவ ராற்றும்வேள்வி படுத்தவ்வாகுதி பற்றுவான்.()

இம்பரன்றியு மும்பர்நாக ரிருக்கையெய்தி யெதிர்ந்துளார் தம்புயப்பல முழுதும்வென்று தருக்கிவாகை மிலைந்துபொற் கும்பமென்முலை மாதரார்சிறை கொண்டுதண்ட மியற்றலா லம்பொனுட்டரு மெண்டிசாதிப ரனைவரும்பய மெய்தினர்.(எ)

முடங்குளைவிரு காலளிக்குல மூசுகற்பக நிரைகளைப் பிடுங்கிவந்ததன் னகரினிட்டணி பெற்றதேவரை வெற்றியா லடங்கவென்றர மகளிரைப்பல மதனிலாடல்செய் தறனெ லாங், கடந்துபாவ வுருக்கொடேண்ணில் கடுங்கொலைத்தொ ழிலிட்டினன். (அ)

சமிடர்ந்தை தனக்குவட்டுறை சதமகன்றனை யாதிய திசையிருந்துள கடவுண்மன்னர் செருச்செய்தாற்றல் சிதைந் தபோய், வரையிலுள்ள கயிங்மோலிம வரையின்மன்னினர்

வார்கு, ழசைவில்சன்மலி புரமிருந்தட லவுணர்கோனர சா
ற்றினன். (கூ)

மும்மைசால்புவ னத்துமிந்த முரட்கொடுந்திற லவுணர்தஞ்
செம்மலான மருத்தனென்றிடு தீயவன்புரி தீமையால்
மெய்மைசால்தரு மந்தவம்புகழ்வேள்விபோயொழிதாழ்வினன்
மம்மரெய்தி நடுக்கமுற்றன மண்ணும்வானுலகங்களும். (கo)

வேறு.

அடுந்திறற் கடுமெருத் தாசுரன்புரி
கடுந்திறற் கஞ்சிவான் கடவுளோரிம
னெடுங்கிரிப் புறத்தினி னெடிதுகாளிருந்
திடும்பைமிக் கூர்ந்துபின் னிதையத்தெண்ணினர். (கக)

குரவனும் பொன்னிடங் குறுகியிங்கிலை
வெருவருமுளத்தவர் விரிக்கவேந்தனும்
புரவலராதிய புலவர் தம்மொடு
மரியநாண் மலர்மகன் வையத்தெய்தினன். (கஉ)

நனிவரு தவத்துறை நாரதாதிய
முனிவரு மினிதவண் முன்னுங்காலையிற்
கனிவரு முளத்தினன் கமலநாயக
னினிதவர்க் கருள்புரிந் திருக்கைநல்கினன். (கா)

இருந்தவர் தானவனியற்கை யாவையுந்
தெரிந்திட வுணர்த்தலுந் தெருட்டுவானவன்
பெருந்திற லுடையனப் பெற்றியோன்றனை
திருந்திறங்கடக்கரி தெம்மனோர்க்குமே. (கச)

ஆதலாலவன்முற ணறுத்து நம்மனோர்க்
கேதமதகற்றிநற் இளமை நல்குவான்
மாதொரு பங்குடை வாதனேயலான்
வாறையிறவத்துளீர் வல்லர்யாவரோ. (கரு)

என்றிசைத் தவரொடு மெகினப்புள்ளின்மேற்
சென்றனன் றன்னுழைச் சேர்ந்துளாரொடு
மின்றிகழ் வெண்ணிலா விரிக்கும்வெள்ளியங்
குன்றிடை யும்பர்தங் குழாத்திற் கூடினன். (கசு)

நடங்கொளு மலர்மகன் றன்னொடுஞ்சுர
ரடங்கலுந் திருககடை யண்மினர்களென்
றிடெங்கழனந்திபோ யிறைவன்முன்பணிந்
தொடுங்கிவாய் புதைத்துநின் றொதுங்கிக் கூறினர். (கஎ)

அரிதெதிர் நந்தியெம் மடிகள்கூறலுஞ்
சுருதிமா முடிக்கருந் தோன்றலன்னவர்த்
தருதியீண்டென்னலுந் தாழ்ந்துபோயவர்க்
குரைசெய்து விரைவினின் முன்னருய்த்தனன். (கஅ)

அகனமர்ந்திறைஞ்சய வமராராதியோர்
முகமலர் மகிழ்ச்சியா னோக்கிமூரல்கூர்
பகவனுங் கண்ணருள் பரப்பினனெடுஞ்
சகஙிரை படைத்தவ னிறைஞ்சிச்சாற்றுவான். (உக)

புண்ணியபுராதன புரிபொற்கொன்றையங்
கண்ணிய வன்றெனமைக் கவரப்பாற்கட

னண்ணிய தீவிட மயின்றுநங்களைத்
தண்ணளியாலுயிர் காத்ததற்பரா. (உ0)

அருத்தியாற் றுதித்தய னறைகுவான்மறைச்
சிரத்துறைதேசிக திதியின் மைந்தரின்
மருத்தனென் றொருகொடும்பாவிவானவர்
புரத்தையும் புவியையும் பொடிசெய்தானரோ. (உக)

தருக்களைப் பிடுங்கினன் றவஞ்செய் வோர்களை
நெருக்கினன் வேதியர் நிரப்பும் வேள்வியை
முறுக்கினன் முருக்கிதழ் முத்தமூரல்வேற்
றிருக்கர மகளிரைச் சிறைகொண் டேகினன். (உஉ)

பாங்கறு மக்கொடும் பதகனுற்றிய
தீங்களப்பிலசில தெருட்டினே மலற்
பூங்கழற் புனிதவிப் புரந்தராதியோ
ரேங்கினர் திகழ்ந்தவா றீதென்றோதினன். (உ௩)

இன்னண மயனிசைத் திடலுமெம்பிரான்
றன்னுளத் தமைந்தவன் றனையகோரமாய்
மன்னியம் மருத்தனை மடித்துநுங்களை
நன்னரிற் காத்துமென் றபயநல்கினன். (உ௪)

இப்பெருங் கயிலையி னேற்றமாயொரு
வைப்புள தெமக்கது வதரிகாவன
மப்பெருந் தலத்தைநீ ரடைதிர் போதிரென்
றொப்பிலான் றனிவிடை யுவந்துநல்கினன். (உ௫)

மலைக்கொடி பங்கமர் வரதன்றன்விடை
தலைக்கொடு விபுதருஞ் சசிமணாளனுங்
கலைக்கொடி கேள்வனும் வதரிகாவன
நிலைப்பெருந் தானத்தை நெடிதுசார்ந்தனர். (௨௬)

வந்தருட்காவிரி பவாநி யொன்றிய
சிந்துவிற் குடைந்துயர் தெய்வமாமறைப்
பைந்தொடி பாகனைப் பணிந்தவ் வைப்பிடை
மந்திரத் தவரொடு மகிழ்ந்து வைகினார். (௨௭)

மன்னருங் கடவுளர் வதரிவைப்பெனும்
பொன்னகர் வயிடைப் பொலிந்தகாலையி
னிந்நிலை யுணர்ந்திடு மருத்தனென்பவன்
றன்னெடும் படையொடுந் தருக்கினெய்தினான். (௨௮)

நெடுந்தினம் பெருஞ்சமர் நேர்கிலாமையா
லடுந்தின வுய்த்திடு மலங்கற் றோளினன்
கடுந்தழற் சிற்றத்தான் காலனெஞ்சக
நடுங்கிடுந் தோற்றத்தா னணுகினானரோ. (௨௯)

வேறு.

முந்தையிற் கடல்வாய்நஞ்ச முளைத்தழன் றெழுதலபோல
வந்தவன் றன்னைக்காணு வானவர்முதலோர் யாருஞ்
சிந்தனை கலங்கிமுக்கட் டேவரீ காத்தியென்ன
வந்தனை செய்தாரந்த வாறெலா மமலன்கேட்டான். (௩௦)

தொழுந்திரு வதரிமூலச் சுயம்பிர காசலிங்கத்
தெழுந்தன னகோரரூப மெடுத்தெம திறைவன் செந்தீக்

கொழுந்துறழ்சடையுஞ்செக்கர் வதனமுங் கொற்றவாகு
மழுந்தும்வெம் படைகளேந்து மங்கையுமாகித்தோன்ற. ()

மெய்யுருப் பார்க்குந்தோறும் வேறுவே றனந்தானந்தங்
கைகளுங் கதிர்கால்சூலக் கடும்படை கிடந்தமொய்ம்பும்
பையரா வரையும்பாத பந்தியும் வதனக்காடுந் .
துய்ய பாதங்கடோறுந் தூக்கியகழலி னார்ப்பும். (௩௨)

இன்னதோர் படிவமெய்தி யடியரை யினிதுகாப்பான்
மன்னியோர் விளையாட்டுன்னி வந்தனன் வதரிமூல
முன்னவன் பின்னுமுன்னு மூரிவெம் படைகடாங்கி
யன்னவன் மருங்குபூத ரளப்பிலர் சூழ்ந்துவந்தார். (௩௩)

எரிசிகைச் செங்கட்பேழ்வா யெறுழ்வலிக் குறுந்தாட்பூதப்
பரிசனத்தோடு முக்கட் பராபரன்பவாகிகூடற்
புரிமதிட் புறம்புபோதப் பூரியன் றன்னைப் போர்க்குத்
திருகுவெஞ் சினத்தாற்பூதர்தெற்றென வழைக்குமெல்லை (௩௪)

உருத்தமர்க் கழைக்குங்காலை யோசனை யொருநூறெல்லை
யெரித்திடு மிடிபோலார்த்திட் டெழுந்தன னிரைந்துசேனை
விரித்திடுங் கடல்போற்சுற்ற விண்ணவர் நடுங்கவந்த
மருத்தனைக் கண்டபூதர் மாதரா ருருவமானார். (௩௫)

ஓவியர்க் கெழுதவொண்ணா வுருப்பொலிந் திலங்கின்ற
பூவையர் படிவங்காணாப் பொருக்கென வயிர்த்துமாற
னேவினிற் றளைப்பட்டேமாந் தெம்முடை யிருக்கைக்கிந்தப்
பாவையர்க் கொடுபோய்த் துய்க்கப்பரிந்தன்பவேதோரான்

மெல்லெனக் குறுமென்றென்றல் வீசியவசந்தகாலத்
தெல்லையங் கிருத்தலாலே யேக்கறு விரகநோய்கொண்
டொல்லையிற் றொடர்ந்தானந்த வோவிய மன்னர்மெல்ல
மல்லன்மாநகரின் பாங்கர் வந்துதம் படிவங்கொண்டார். ()

காண்டலும் கனல்போற்பொங்கிக் கைதவப்படிவமாய்வந்
தீண்டின ரிவர்கொலென்றுவெயிறுதின் றெறுழொன்றேந்தி
யாண்டவர் மீதுதாக்க வக்கணத்தகோரரூபத்
தாண்டவமூர்த்தி யந்தத் தறுகணன் வெருவத்தோன்றும்.(ருஅ)

உதித்திடு மிறைமேலன்பால் யோசனை நீளமாயோர்
கதைப்பெரும் படைவிட்டார்ப்பக் கடவுண்மா முறுவல்பூத்
மதிக்கதிர் மட்கத்தோன்றும் வான்சுடர்ப் பருதிகோடி [தோர்
பதித்தபோ லிலங்குகுந்தப் படையினைப்பணித்துவிட்டான்.()

அதெத்திறை விட்டகுந்தப் படையையோர் கதையாலன்னோன்
றமெத்தனன் றமிக்கவெங்கோன் றண்ணகைகோட்டிச்செங்கை
தொடுத்தொரு பொருப்புமானும் தோமரமெறிந்தா னினச்
செடித்தலைமருத்தன்மற்றோர் சூலத்தாற்சிதைத்தான்மன்றே.

அரிலே புணர்ந்தசோதி யமர்வினை யாடல்செய்வா
னுன்னிமற் றொருவிற்கோட்டி யூதைவெங் கணையைவிட்டா
னன்னவ னதனைமாற்ற மயேந்திர வம்புதொட்டான்
முன்னவ னழலம்பெய்தான் மூடனிர்க்கணையாலட்டான்.(சக)

அம்பைந்தா னுறுமத்த யானையைப் பிளந்தான்பின்று
மம்பைந்தால் விலாழிசிந்து மாயிரம்பரியை மாய்த்தா

னம்பைந்தா லவுணரீரை யாயிராவி யுண்டா
னம்பைந்தா லொருநூறுழி யரிவிரையறுத்துவீழ்த்தான்.(சஉ)

கரும்பொனு லமைத்தநூறு துலாத்திலோர் கதையைக்கைய
னரும்பொறி விழிகள்சிந்த வடற்கரத் தெடுத்துவேதச்
சுரும்பமர் குழலிபாகத் தோன்றன்மே லெறிந்தானந்த
விரும்பெறுழ்சாம்பராய்வெந் திற்றது பலருங்காண. (சரு)

மறைமுதன் மீட்டுஞ்செந்தீ வடவையின் பிழம்புபோல
வுறுகதிர்ச் சூலமூன் றி யோசனை நெடுமைத்தான
தறைகழன் மருத்தன்மார்ப மகழ்ந்திட வெறிந்தான் மற்றோர்
திறலுடைச் சூலம்வேறு திரித்ததைத் தடுக்கவிட்டான். (சச)

ஆண்டகைபடைபோயன்னோனயிற்படைதுமித்துமார்பைக்
கீண்டவனுவிவெளவிக் கிளர்மதிக்குழவிவேணித்
தாண்டவன் றிருக்கைவந்து தங்கிய தமரார்யாரு
மாண்டவன் றன்மைகண்டு மலர்மழைவருடித்தார்த்தார்(சடு)

மலையெனத் தளர்ந்துசாய்ந்த மருத்தனுன் மறைமின்பாக
னிலையயிற் சூலத்தாக மிற்றலான் முற்றுஞான
நிலையினை யடைந்துதிண்கை நெடுமுடிசூடப்பித்திங்கட்
கலைமுடி யவனைநோக்கிக் கண்கணீர்கலுழக்கூறும். (சசா)

பாவியே னையரின்கைப் படையிலிப் பவாவிவைப்பி
னுவினீத்திடு பேறுற்றே னுதலா லறிஞானோர்
மேவுநின் பதந்தாளா வேண்டுமென் பெயரொன்னாளுந்
தேவநிற் கிருத்தல்வேண்டு மெனக்குறை யிரந்துரைத்தான்.

கோடெங்தொழிற் புலையரேனுங் குறுகினார் தம்மைக்காக்கு
நெடுந்தகை யாதலாலே நிமலனுமதற்கு நேர்ந்தான்
கடுந்திறன் மருத்தனுவி சிவகணங் கவர்ந்துவெள்ளித்
தடங்கிரி யுய்த்தார்வானத் தருமல சிமையோர் தூர்த்தார்.()

தேயமுற் றிரந்துளோர்கள்யாரேனு நினைத்தவெல்லா
மீயுமெம் பெருமானன்பர்க் கெளியவனுதலாலே
மாவைவல் லவுணன்வேட்ட வரகல்கி மருத்துலிங்க
மாயினன் வதரிமூலத் தமர்ந்தரு ளமலமூர்த்தி. (சக)

எண்ணருங் கணங்களோடு மெய்தியவகோரமூர்த்தி
விண்ணவர் வாழ்த்தமூல லிலிங்கத்துட் புகுந்தானந்தப்
புண்ணிய விபுதரெல்லாஞ் சங்கமப் புனறோய்ந்தன்பா
பண்ணலைப் பூசையாற்றி யங்ஙகர் வதிந்தார்மன்னோ. (ருo)

அந்தமுமுதலுமன்று மில்லவ னகோரமூர்த்த
மந்திரமிந்த வைப்பின் வைகியோ ரெட்டுவைகல்
சிந்தையிற் கயிபாகிச் செபித்திடிற் பவங்களெல்லாம்
வெந்தழற் பஞ்சாயாக்க மேவிப்பின் வீடுசார்வார். (ருக)

ஆற்றவுமன்புகூர்ந்திக் காதையை யரசர்கேட்கின்
மாற்றலர் பகையைவென்று வாகைபெற்றுயர்ந்துவாழ்வ
ரேற்றமிக் குயர்ந்தவிந்த வெழிற்றலப் பெருமைவேதஞ்
சாற்றிடுந்தகைமைத்தல்லான் மற்றையோர் சாற்றற்பாற்றோ

மாதிரமளக்குந் திண்டோண் மருத்தனிவ் வதரிசூழ்ந்த
போதலர் கமழ்பவாரி புரியிடை யாவீர்த்து
மேதகு கயிலைசேர்ந்த விதமிதென் றறிஞர்கேட்ப
மூதருமறைதேர்சூத முனியெடுத் துரைத்தான் மன்னோ.(ருா)

## பனிரெண்டாவது மருத்தன் கதிபெற்ற சருக்கமுற்றிற்று.

ஆகச்சருக்கம். கஉ - க்கு விருத்தம். ௬எடு.

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பதின்மூன்றாவது

# சக்கரதீர்த்தச் சருக்கம்.

---

திருத்திகழ்ந் தழின்வைகுந் தெக்கணவளவை யென்னும்
புரத்திடை மருத்தன்பேறு புகுந்தது புகன்றேமும்பர்
தருத்திரு நாடுபோற்றுஞ் சக்கரதீர்த்தமாதி
யுரைத்திடுந்தீர்த்தமேன்மை யுண்மையி னுணர்த்துவேமால்.

மங்கல மறையோர்கேட்ப மீளவும் வழுத்துஞ்சூதன்
சங்கமச்சயம்புமூர்த்தி சன்னிதிக் கீழ்பாற் கற்றைச்
செங்கதிர்ப் பருதிப்புத்தேள் சிவலிங்கம் பதித்துப் பூசித்
தங்கதின் குடபாற்றன்பே ரமைத்தொருதீர்த்தஞ்செய்தான்.

தருமமி யதனிற்றிங்க ளுண்மதிச் சடையோன் றன்னுள்
புனையமா வாசைமிக்க பூரணையிவற்றினந்த
வினைகெடுந் தீர்த்தமாடி யிரவிமந்திரத்தாற்செம்பிற்
குனிதரு கலத்திற்கோதி குளமுதனிரம்பப்பெய்து. (௩)

தக்கணையொடுமொன்றாலோர் செங்கையி லளித்தாலங்கே
பக்கணத் தகன்றுநீங்கு மருஞ்சுரா பானதோடஞ்

செக்கர்வான் கதிர்முன் ஞன்கு மந்திரஞ் செபித்ததீர்த்தம்
புக்கினிதாடுந் தூயோர் பொன்னுலகமர ராவார். (ச)

மயர்வறுமனத்தோராகி மறைக்கொடி பங்குளானைத்
தயையொடுந் தியானித்தங்குத் தரக்கதள் வைகினாரு
முயர்தரு மெழுத்தைந்துள்ளே யுச்சரித்தொழுகின்வெய்ய
முயலகன் குமரகண்ட முதுபிணி குலையுமன்றே. (ரு)

முன்னவன் கோயில்வைகி முறைமையா லெழுத்தோரைந்து
முன்னினோர் சரீரார்த்தத்தி னொளிவிடு விமானமேறிக்
கன்னல்விற் காமற்காய்ந்தோன் கைலையிற் கற்பகால
மன்னியங் கிருந்துமீளா மலரடிமுத்தி சேர்வார். (சு)

முதுகிரியேமகூட முன்னவனருணைக்குன்றங்
கதிதரு காஞ்சிகாசிக் காத்தியம் பகங்காளத்தி
சதுமறை வனஞ்செங்கோடு தயங்குகோ கருணத்தான
மதிதரும் பிருகுகன்னம் வளங்கெழு கும்பகோணம். (எ)

மன்னருள் சிறந்தவீம வனந்திரு வானைக்காவல்
பொன்னவிர் புலியூராலம் பொழிலுறும் திருவெண்காடு
தன்னியவாரூரிந்தத் தலங்கதி மறுமைக்கியு
மின்னருட் பவாநிகூட விகுத்திலே முத்திகூட்டும். (அ)

தெக்கண வளகையாருந் திரதெரி சனஞ்செய்துள்ள
தக்கவர் தமைக்கண்டன்பாற் றுழ்பவர் கயிலைத்தானம்
புக்குனி துறைவரென்றுற் புகல்வதென் புநர்பூசத்தி
னக்கதிர்த் தீர்த்தந்தோய்வோர் பெறும்பலனளக்கொணுதால்.

மார்கழி மதியின்மூல நாண்முதற் காலின்வானத்
தேர்செழு பருதிவந்த வெல்லையிற் புலருமுன்போய்ச்
சூரியதீர்த்தந் தோய்ந்தம் முப்பதுதினமுந் தூய
நார்கோடத் தடத்துளாடி யாதவனும்மமுன்னி. (கo)

என்னரு மகரத்திங்க ளிரதசத்தமிநாளேழு
வெள்ளெருக் கிலையிற் சாணம் வியந்துவைத் தறுகுசூடித்
தெள்ளுமக் கதைதூய் வெய்யோன்றீம்புனறோய்ந்துநெய்தற்
கள்ளவிழ் மலர்தூய்மன்றுட் கடவுளைவழிபட்டுள்ளோர். (கக)

புத்திரபௌத்திராதி பொருவறவுயர்ந்தபோகந்
துய்த்தபின் வீடுசேர்வா ராதலிற் சுடரோன்றீர்த்த
வுத்தமாலனையாவ ருரைப்பவ ருயர்ந்தவேதச்
சத்திபங்கமர்ந்தஞானச்சயம்புவுக் கோணத்தின். (கஉ)

குருமணிப்பொன்னியாற்றின் குணக்கிலோர்குரோசந்தன்னி
லொருமையா லுள்ளன்பூறி யுரோமசன் பதிட்டைசெய்தா
னொருசிவகோசமேல்பா லோங்குசன் னிதியதாக்கி
யிருமைபா லிலிங்கநாம முரோமகேச் சுரனென்றிட்டான். ()

மலத்தைவென் றவன்ருபித்த குறிமைமார் கழியந்தத்திற்
சலத்துயர்பொன்னி நன்னீர் சங்கற்ப விதியாலாட்டித்
திலத்திலக் கதைபிலற்சித் திறைஞ்சிடிற் றெவ்வாங்கூற்றின்
வலித்திறஞ் செகுத்துவானோர்வாழ்த்திட வளமைபூண்பார்.()

வேறு.

சங்கரன் வதரியின் றருவின்றக்கணத்
தங்கனோ ரம்பிடு தூரத்தம்புய

மங்கையை மணிகௌர் மார்பினேந்திய
செங்கண்மால் சக்கர தீர்த்தமொன்றரோ. (கரு)

பஞ்சபாதகங்களைப் படியிற் பஞ்சதைச்
செஞ்சிகி தீத்தல்போற் றீக்குமன்னதிற்
றஞ்சமென் றடைந்தொரு தானஞ்செய்திடி
லுஞ்சவே ஞெருதவ முஞற்றவேண்டுமோ. (கசு)

மார்கழி தக்ஷிலமா வாசையிற்றடந்
தேர்கெழு மிரவிமந் திரத்தையுச்சரித்
தாரெனுங் குடைச்தா ஞலயத்தினை
யேர்பெறப் பன்னிரு வலஞ்செய்தேத்திடின். (கஎ)

உடுபதி முடிபுனை யுருத்திராதியர்
வடிவொடு கைலையின் வைகுவார்நெடும்
படியினை யளந்தவன் படைத்ததீர்த்தத்தின்
முடிவெடுத் தியம்பிட வெவர்க்குமுற்றுமோ. (கஅ)

தொக்கநன் மேடமா மதியுஞ்சுக்கில
பக்கமுஞ் சித்திரை நாளும்பைங்கலை
மிக்கபூரணையுமாம் வியன்றினத்தினிற்
சக்கர தீர்த்தமாந் தடத்தின்மூழ்கியே. (கசு)

விரிந்தபைங் கமலத்தால் விமலற் பூசித்துத்
திருந்தியங்கப்பிர தெக்கணஞ் செய்தோர்
புரிந்த வெம்பவங்களைப் பொடித்துநித்தமா
யிருந்தமெய்ஞ் ஞானவீ டெளிதினெய்துவார். (உ0)

வனப்புறு மிடபமா மதியிற்பூரணைத்
தினத்தினில் நேமியந் தீர்த்தந்தோய்ந்தளி
தொனித்திடும் வகுளமாந் தொடையிலந்தையம்
புனத்துறை விமலனுக் கணிந்துபூசித்தோர். (உக)

குலத்தொடுங் கைலையிற் குடிகொள்வார்நறை
யலர்த்துள வணியுளா ளுழித்தீர்த்தத்தி
லலத்தொடு குடைந்துபொன் னளிருந்தேர்மிசை
மலைக்கொடிபாகனை வணங்கிப் போற்றினோர். (உஉ)

தெரிந்துசெய் பவமெலாந் தீயவெம்பிணி
மருந்தினி லவிதல்போன் மாய்ந்துமாசகன்
றருந்தவ முடையரா யளப்பில்போகந்துய்த்
திருந்துபின் வீடடைந் தின்பமெய்துவார். (உஙூ)

தெய்வநாயகன்றிரு விருக்கைத்தென்றிசை
மெய்வளரருட்டிரி வேணிசங்கமத்
துய்யநற்சோதியந் துறையின்மேன்மையை
யையமில்வேதமே யறையவேண்மொல். (உச)

பொன்னினைக் களவுசெய் புலையர்நான்மறைக்
கன்னியர்க்காதல்கூர் கடைஞர்தேசிகன்
பன்னியைவிருப்புறும் பதகர்பண்பொரீஇ
மன்னுயிர்க்கொலைபுரி மறங்கொள்தீமையோர். (உரு)

அந்தணர்க்கிறுசெய் யழிம்பரின்றதாய்
தந்தையர்க்குறுகணே தந்தபாவியர்

பைந்தொடியார்களைப் பசுவைக்கொன்றவர்
மந்திரங்களிற்றழன் மடுத்தகாதகர். (உசு)

இன்னமுங் கொடும்பவ மிழைத்தபாவிய
ரென்னினும் பொன்னியு மெழிற்பவாகியு
மன்னமெய்ப் பராசர னமுதக்கேணியு
முன்னியசங்கம முகத்திற் றோய்ந்திடின். (உஎ)

சாடும்வெங் கதிர்க்கரந் தடவப்பார்மிசை
மூடுபுன்பனிப்பகை முரிந்தபோலகன்
றோடிடும்பிறவியை யொழித்துநித்திய
வீடுதந்திடும்பலம் விளம்பவேண்டுமோ. (உஅ)

செப்பரும்புண்ணிய தீர்த்தம்யாவுமவ்
வைப்பிடைத் தனித்தனி வயங்குமாதலா
லப்பெரும் பவாகியா மருந்தலத்தினுக்
கொப்பொரு தலங்கட லுலகிற்காண்கிலேம். (உகூ)

தெக்கணவளகைவாய்ச் சேறுமென்றுள
மிக்கதோ ராசையின் வியந்துமூன்றடி
வைக்கினும் வாம்பரி மேதமாமகம்
புக்கினிதாற்றிய புனிதமெய்துவார். (௩0)

குருமணியிடைக்கிடை கோத்தகண்டிகை
பரமனுக்கணிந்தவர் பவனிவாகனந்
திரமுறத்திருத்தினோர் தீபதூபக்கா
லருமைவெண்கவரிகள் குடைகளாற்றினோர். (௩க)

விஞ்சையரியக்கர்கள் வீபுதர்சூழவெண்
குஞ்சரமுகைத்தொளி கொழிக்குந்தண்டிகை
யெஞ்சலின் முனிவர்க ளெழுவர்தாங்கப்போ
யஞ்சுடர்மணித்தவி சமர்ந்துவைகுவார். (௯௨)

அறம்பயிலங்கக ரருமைத்தாதலா
லுறுந்திருத் தீர்த்தத்தி னுயர்வுமன்னதே
திறம்பெறு தவத்துளீ ரென்றுசெப்பினன்
மறங்கடிந் தருள்வடி வானசூதனே. (௯௩)

## பதின்மூன்றுவது சக்கரதீர்த்தச்

## சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம். கங-க்கு விருத்தம். (எ0அ)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினான்காவது

# காயத்திரிமகிமையுரைத்த சருக்கம்.



திருவினாயகன் றிருத்திய சக்கரதீர்த்த
மிரவிதீர்த்தமென் றியம்பிய தீர்த்தத்தினேற்ற
முரைசெய்தேமினி யொள்ளிய பொன்னியங்கரைவாய்
மருவியோங்குகாயத்திரி மகிமையைவகுப்பாம். (க)

தனையுணர்ந்தருள் சவுனகன் சூதனைமீட்டும்
வினவுவானருள் விரித்திடும் வேதவெற்பிந்த
நனையவார்பொழிற் பவாநிமாநகர்வட ஞாங்கர்
புனிதபூரணப் படிவமாய்ப் பொலிந்துளதென்றாய். (உ)

சுருதியோங்கலு மந்நகத்தென்றிசைச் சுயம்பா
யரிதுதோன்றிய விலிங்கமும் வதரியுமணித்தாய்த்
தெரிதருஞ்சிவ ஞானகாயத்திரி சிலையு
மொருதிருப்படி வேயெனவுணர்த்தினை யுரவோய். (ங)

கங்கையாதிய நதிகமலாலய முதலாய்த்
தங்குதீர்த்தங்கள் சிதம்பரமுதலிய தலங்க

ளோங்குமேறிய வுருப்பலமனைத்தையு மொருநா
ளிங்கிருந்து காயத்திரிசெபித்திடி லியும். (ச)

எனவெடுத்தெமக் கியம்பினே யாதலாலந்தப்
புனிதமிக்ககா யத்திரிமகிமையைப் போத
வினிதிசைத்தியென் றிரந்தவர்க் கெழின்முகமலர்ந்து
கனிபிருத்திய கருணையான் கழறுவதானன். (ரு)

திருமறைக்கிரிக் கிரண்டரைக் குரோசத்தின் றென்சார்
மருவிலந்தையின் மருங்கம ரிலிங்கத்தென் கிழ்பால்
வரமலிந்த காயத்திரி யேசிலாவடிவா
புருவெடுத்தவ ளுறைதலா லுரைக்கவும்படுமோ. (சா)

நீக்கமற்றிடு மகண்டபூரணத்தினை நெடிது
மூக்கினன்றுநி முனையின்மேற் பார்வையைநிறுவி
நோக்குமாதவ வியாசனந்தரங்கமாய் நுவன்ற
வாக்குவாணியம் மகிமையெற்குணர்த்தலா லுரைப்பேன். (எ)

விட்டில்வண்டின மசுணமீன் விழைதல்போல் விடையக்
கட்டிலாழ்ந்திடு மிந்திரியமைந்தையுங் கடந்த
சிட்டயோகியர் தெளிவுறுமனத்திடை விளங்கப்
பட்டதன்னகா யத்திரி சிலைத்திருப் படிவம். (அ)

முந்தைவானவ ராசனைமுடித்தலம் புடைத்த
சுந்தரப்புயக் கவுரியர்மரபின் முன்றோன்று
மிந்துசேகரக் கடிமைசாலிந்திரத் துய்மன்
சிந்தையன்பொடெதிர்த்தயாத் திரைக்கினிதெழுந்தான். (கூ)

பாங்கருள்ளன தலந்தொறுந் தீர்த்தங்கள் படிந்து
தேங்கொடென்றலஞ் சிலம்பிடைச் செனித்தினிதொழுகி
யோங்குதாம்பிர வன்னிமாநதிக்கரை யுற்று
ஞங்குநாரத முனிவர னருளொடு மடைந்தான். (௧0)

வரங்கொண்மாதவற் காண்டலுமன்னவன் வணங்கிக்
கரங்கள்கூப்பிநின் றேத்திநின் கழறொழவடியேன்
றிரங்கொண்மாதவ முன்செய்ததிவ்விய பலமென்
றிரங்கினன்முனி யாசிகூர்ந் திருக்கையீந் தனனால். (௧௧)

இருந்தவேந்தனவ்விருடியர் தலைவனைநோக்கி
யருந்தவத்தினி லானிழலிறையன்று யகிலத்
திருந்தசைவமா தலங்களிலேற்றமாய்க் கொங்கிற்
பொருந்துசங்கம புரமதென் றறிஞர்கள் புகன்றார். (௧௨)

சிலங்குமத் திருநகர் மகிமையைக் கேட்கப்
போவாவெனக் கென்றலும் பெரியவன் மகிழ்வுற்
றூரமல்கிய புயத்தின யந்நகர்மேன்மை
பாரின்மிக்கது கேளெனப் பரிவொடும் பணிப்பான். (௧௩)

சையைவெற்பினின் றொழுகிய பொன்னியுந் தகைசால்
துய்யவெண்டிரைப் பவானியுந் துகளறக்கூடு
மையிருனத்தின் விளங்கிய வதரிகாச்சிரம
முய்வதற்குயிர்க் குறுதியாயிருந்த திவ்வுலகின். (௧௪)

வதரியொன்றருள் வடிவமாயிருக்கு மம்மருங்கு
மதாரிக்கண்மா மறைக்கொடி பங்கொடுஞானக்

கதிரிலக்கிய சங்கமவிலிங்கமாய்க் கயிலை
முதல்வனியாவர்க்கு மருதியாய் முளைத்தவணிருந்தான். (௧௫)

பன்னரும் புகழ்ப் பராசரன் பங்கயன்றிருமா
மன்னுமும்பர்கோன் வியாசமாமுனி துருவாச
னின்னறி ரயிராவத மிவரெலாம்பூசித்
தன்னலம்பெறு தலத்திடைவேண்டின வடைந்தார். (௧௬)

அக்கதிர்ச்சிவ சயம்புவுக் கக்கினிபாகத்
திக்கிருந்தது தெய்வகாயத்திரி சிலையா
மிக்கவன்னதின் மகிமையை யாதெனவிரிப்பேன்
றுக்கவெம்பவப் பிணிக்கது தூய்மருந்தாமால். (௧௭)

அனையதானம தடைந்துநீர் குடைந்தகச் சுசியாய்த்
தனிவெண்ணீறணிந் தணிதிகழ் கண்டிகை தாங்கி
யினிதுவைகிமூ வெட்டெழுத் தாகியின் றிலங்கும்
புனிதமானகா யத்திரியினைச்செபம் புரியின். (௧௮)

வேறு.

உலவாதுயர்கா யத்திரியுச் சரிக்கிலெழுத்துக் கொருகோடி
பலமாம்பாலரெழுத்துக்கும் பலமுமன்ன நலத்ததே
தலமாமதனிற்பவாநித் தனையதனிமர் திரந்தன்னை
யலையாதுனஞ்செற்றுபிரப்பத் தானவுருவாய்கிருந்தாற்றின்.

சித்திவெட்டும் பின்றொடரச் சிவன்முத்தராய்ச் சிறக்கு
முத்தியடைதற்கையமிலை முன்றைந்தேக வைகலவன்
பத்திபதிந்துவைகியிந்தப் பரமகாயத் திரிசெபித்த
பத்திபோரை யரும்பிறவித் துன்பமணுவுந் தொடராதால்.()

பரிந்துலவராத் திரியுண்டி யொழிந்துபரமபாவனமா
யிருந்தப்புனிதப் புனன்மூழ்கி யீசற்பரசி மாசின்றி
விரிந்தகாயத் திரியினைமுன் விளம்புப்படித்தாங் கிருந்துசெபம்
புரிந்தபேர்கள் பரப்பிரமப் பொருளிலயிக்க மாவாரால். (உச)

தவிசாங்கலைத்தோ றனின்வைகித் தனிக்கனுசி றனிசிறவித்
திவசந்தொறுங்கா யத்திரியைச் செபித்தாயிரநூ றுருவேற்றி
யவிசாற்றித் தினங்டோறு மொருபோதருந்தி யரியிடபத்
துவசர்தன்னைத்தொழ வல்லோர்தொலையாப்பரமபதம்புகுவார்

மண்ணோர்பரவ ரெனினுமிகவருந்துங் கொடியரோயரெனுங்
கண்ணுற்காயத் திரிசிலையை வந்துகாணப் பெறிற்கவலாப்
புண்ணேயகலு மனையதிருப் புனலிற்றோயிற் பொருவிறிரு
நண்ணுவமல னருணிரம்பு ஞானநெறிய நன்குறுமால். (உரு)

பரமாங்காயத் திரிசிலையின் பாங்கர்வாணி திருத்தீர்த்தந்
திரமாஞ்சாவித் திரிதீர்த்த மிரண்டுஞ்சிறந்த வதின்மூழ்கிப்
பிரமாவுணர்தற்கெட்டாதபெருமான்றன்னை யிறைஞ்சுவோர்
கருமாசகற்றி வினைநீக்கிக் கைலையடைந்து வாழ்வாரே. (உசு)

திருந்துங்கடவுட் டுருவாசன் சிறக்குங்காயத் திரிசிலைமாட்
டிருந்து தவநோற் றுறைகின்று னிமவான்மடந்தை பிறவிக்கு
மருந்தாமரந்தத் தானத்தை மருவிநோற்றுச் செங்கோட்டுப்
பெருந்தண்கிரிநா சேர்வலம் பெற்றுளலகெல்லாம்பெற்றுன்.

நலங்கொள்கமல மகள்கேள்வன் காயத்திரிநீர் னிமூழ்கி
இலங்தைவிமலத் பூசித்தங் கிமையோர்போற்ற வினிதிருந்தான்

வலங்கொளிரவி குலராமன் வந்திமகிழ்ந்தப் புனன்மூழ்கிச்
சலங்கொளிலங்கையிராவணனைத்தடிந்துசீதைதனைமீட்டான்.

வந்தியானோர் வந்தீண்டிக் காயத்திரிநீர் மகிழ்ந்தாடின்
மைந்தர்தம்மை யுயிர்த்திடுவார் மறங்கூர்விடமு மருந்தாமா
லிந்தநிலைமை மறைகளெடுத் திசைத்ததாமிங் கிரத்துய்ம
சிந்தைதெளிதி யெனத்திகழ்த்தி மீட்டுந்தெய்வ முனிகூறும்.()

மேலாய்விளங்கு மதிகுலத்து வேந்தன்விசையன் வியாசனிடை
நூலார்துரோணன் வீடுமனே முதலாய்நுவன்ற நரபால
ரேலாவவரை வெல்லுமா றெவ்வாறென்ன வியம்பமறை
காலாய்வகுத்தமுனிதெரிந்து கவில்வான்விசையனயப்புறவே.

தொக்கிற்றெய்வ வதரிவனங் குறுகிச்சவக மேச்சுரனை
யங்குப்போற்றித் தென்கீழ்பா லவிருங்காயத் திரிதீர்த்தங்
தங்குமதனிற் குடைந்தாடிற் கைசவசரசு நின்னெண்ணம்
பங்கமின்றி முடிக்குமெனப் பகர்ந்தான்வேதம் பகுத்தமுனி.()

பணித்தநீர்மை கேட்டசிலைப் பார்த்தனெழுந்து பவாநிகா
மணத்தவதரி கிழன்மூளைத்த மழுவலானை வழிபட்டங்
கணித்தினமர்கா யத்திரிநீ ராடித்துரோணன் முதலோரைக்
கணத்தின்வென்று கடல்சூழ்ந்த வகிலமுழுதுங் காத்திட்டான்.

சிலையாசிரியன் றிருமைந்தன்சிறந்தவதரி வனம்புக்கு
மலையாரணங்கின் மணவாளன் மலர்த்தாள்வழுத்தித்தென்கீழ்
லிலையார்காயத் திரிநீர்தோய்ந் தங்கணரிதாந் தவமோற்று [பா
நிலையாயொற் சிரஞ்சீவி யெனுதுபெற்றின்புற்றிருந்தான்.(௯௧)

ஆதலாலத்தலமகிமை யளப்பில்காயத் திரிமகிமை
யோதற்கரிதுவேதகிரி யுண்மையதினும் பெரிதாமென்
றேதங்கடிந்த நாரதன்பண் டிசைக்கவோர்ந்திந் திரத்துய்மன்
போதமகிழ்ந்துய்ந்தனனென்றுபுகன்றான்முனிவர்க்கருட்சூதன்

பருதிமதிசூழுலகினிடைப் பவாசிகூடற் பதியுண்மை
பெரிதென்றுரைத்தமுனிவோனைப்பின்னுமுனிவர்வினவுவார்
சுருதிமலையின்பெருஞ்சிறப்பைச்சொன்னியென்னத்துகளறுத்
த, புனிதமுனிவர்குழாங்கேட்பச் சூதன்மீட்டும் புகலுவான். ()

## பதினன்காவது காயத்திரிமகிமை யுரைத்த சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம் பதினன்குக்கு விருத்தம்.(எசக)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பதினைந்தாவது.

# வேதகிரிமகிமையுரைத்த சருக்கம்.



மைபிறெப்வ வதரிச்சிவபுரச்
செய்யகாயத் திரிசிலையுண்மையை
யுய்யகன்கினி தோதினமொப்பிலாத்
துய்யவேதகிரிப்புகழ் சொல்லுவாம். (௧)

ஞுதன்வாண்முக நோக்கிச் சுடர்விடுஞ்
சாதயோகச் சவுனகன் கேட்குமுன்
வேதவெற்பின் விழுமிய மேன்மைசற்
றோதிறுய்விரித் தோதுதி யீண்டென. (௨)

என்றயோக விருடியர்க் கின்னருட்
குன்றன்றுறுமைக் குங்குணத் தீர்குளிர்
துன்றசோலைச் சுருதிச்சிலம்பதின்
வென்றியேற்றம் விளம்புதற்கொண்ணுமோ. (௩)

அந்தணர்க்குரைப் பானருட் சூங்கமுன்
பிந்திரத்துய்மனுக் கெழின்மாமுனி

சிந்தைமீக்களி கூரத்தெருட்டிய
சந்தவேத சயிலப்பெருமையை. (௪)

மாற்றருந்திண் மதுகை யிடவரென்
ருற்றன்மிக்க வவுணர்கள் பண்டையிற்
றேற்றிறுருல குஞ்சுரர் யாவருங்
கூற்றைநேருயி ரிற்குலைந் தாரரோ. (௫)

பொற்றருக்களைப் போய்ப்பறித்தும்பரை
வெற்றிகொண்டு விரிஞ்சன் மனைவதிக்
குற்றடர்ந்தங் குடர்சது ராரணம்
பற்றிவெய்திற் பறித்தனரேகினர். (௬)

மருமலர்க்கண் வளர்பவன் மாநகர்
பொருமியேங்கப் பொருக்கெனக் கொண்டுபோய்க்
கருமனக்கொடுங் கண்டகர் கால்கிளர்
பருமகோததிப் பாதலத் தெய்தினர். (௭)

அருமைவேத மவுணர்கொண் டேகவு
மொருமையைய ரொழுக்கமும் வேள்வியுந்
தருமமுந்தவ முந்தழை வைதிக
கருமமுந்தனி போய்க்கடற் புக்கதே. (௮)

அருகனேபர மாமென் றறைதருந்
திருகுநூல்பல தேர்ந்திடு சாக்கியர்
கருகிருட்சமை யங்கதித் தெங்கணும்
பெருகியோங்கிப் பிறங்கிய தாலரோ. (௯)

தண்ணந்தாமரை தங்கயன் பாற்கட
லண்ணியெண்ணரு நாகணை மேற்றுயில்
பண்ணவற்புகழ்ந் தின்னபரிசெலா
மண்ணளந்தவற் கோதிவழுத்தினான். (௰)

வருதிறத்து மதுகை யிடவரைப்
பொருதுவென்று புகழ்மிகு வேதம்யாந்
தருதுமின்வயி னஞ்சலை தண்ணருட்
பெரிதொழுக்குமெம் முந்திபிறந்துளோய். (௧௧)

எனவுரைத்தெழுந் தெய்தினன் கற்பக
வனம்வழுத்து வதரி வனத்தினைக்
கனிவினுங்க ணிலந்தையின் கண்வளர்
புனிதனைத்திருப் பூசை திருத்தினான். (௧௨)

நச்சராவணி நம்பனருளினான்
மச்சமாகி மகோததி யிற்புகுந்
தச்செருக்கரை யாவியுண் டந்தணர்க்
கிச்சைநான் மறையைக் கவர்ந்தெய்தினான். (௧௩)

அடுத்தநாண்மல ரண்ணல் பொருட்டற
முடுத்தநான்மறையோர்பொருட் டெம்புகழ்
தொடுத்ததெய்வச் சுருதியைத் தூயர்பாற்
கொடுத்தனன்மலர்க் கொம்புறை மார்பினான். (௧௪)

கலைதெரிந்தறங் காப்பவர் வேதங்க
டலைதிரிந்து கெடக்குந் தகுதியா

னிலை தெரிந்திலர் நீரிற வண்ணனைத்
தொலைவிலன்பிற் றுதித்தலுந் தோன்றினன்.     (கரு)

விரைவினங்கண் வியாசன்படிவமா
யுருவடைந்தவி ரொண்சுட ராழியோன்
மருவலர்ந்த வதரிவனத்தடைந்
தரிவைபாகத் தமலனைப்பூசித்தான்.     (கசு)

ஈண்டிமூல விலிங்கச்சயம்புவை
யாண்டுநூறள வுஞ்சிறந் தன்புளம்
பூண்டுபூசனை செய்யப் புராந்தகன்
றாண்டருஞ்சுட ராயெதிர் தோன்றினன்.     (கஎ)

பாசமற்ற வியாசனைப் பார்த்துநின்
பூசனைக் குவந்தே மிப்புரிதனைக்
கேசிலுத்தர பாகத்திருந்திடுந்
தேசினிற்றிகழ் சாய்கைச் சிலம்பரோ.     (கஅ)

அப்பொருப்படைந் தாரண நான்கையுஞ்
செப்பமாகத் தெருட்டி யுயர்ந்துளோ
ரெப்பயன்களு மெய்த வளித்தியென்
றொப்பிலானருட் போத முதவினன்.     (கக)

அருளடைந்து வியாச னுள்ளன்பினற்
றெருளினுத்தர திக்கின் மறைச்சிலம்
பிருளறத்து விளங்கல்கண் டெண்டினன்
மருளுளத்தர் மயக்க மகற்றவே.     (உ0)

## வேறு.

வென்றைம்புலனை வேரறுத்த வியாசன்றரக்கா சனத்திருந்து
பொன்றும் சடையோன்கழலுன்னிப்போதமிக்கமுனிவரொடு
மொன்றாய்த் தலைகால்தெரியாது திரிந்துவிரிந்தவொருபெரிய
குன்றுகாரமாய்க்கிடந்தகோதின்மறையைத்தனிநோக்கி.(உக)
மன்றுமந்த மறையையறுவாக்கரண்டம் பிரச்சினமென்
றன்றுமூன்று வகையாக்கி யவற்றைநாற்பங் குளுற்றியதே
தென்னினிருக்கோடெசுர்சாமமியம்பற்கரிதாமதர்வணமென்
றன்னநாற்பாற் பகுத்ததனை யந்தணாளர்க் களித்திட்டான்.()
சுத்தமுனிவன் றரக்கொண்ட தூயமறையோர் தொல்சுருதி
யத்தியான பரராசித் தருமமனுவுந் தவிராமற்
சித்தநிலைகூர்ந் தாற்றிமகஞ் செய்துபுவியிற் சிறப்புற்றார்
முத்தயோக முனிவரெலாந் தத்தநியம முயன்றிருந்தார். ()
மாதோர்பாகன் றிருவருளால் வியாசன்வந்து மறைநான்கைப்
பேதாபேதந் தெரிந்தறிஞர் பேணப்பிரித்துக்கொடுத்ததனால்
வேதாசலமென் றனையதிருவெற்புக்குயர்பேர்வந்ததென [மை.
வோதாமுனிவன் மீட்டுமெகிழ்ந் துரைப்பானந்தப்பொருப்புண்
செங்கண்மாய னவதாரஞ் செய்யுந்தொறுமிச்செழுமறையின்
பொங்கரனைத்து பூசித்துப்போவான்புத்தேன்பெருமான்முன்
வெங்கனழல்கால் விருத்திரனை வென்றவெய்ய பிரமகத்தி
யங்கணடைந்து பூசித்து நீங்கிச்சுவர்க்க மளித்தனனால். (உரு)
அன்னதன்மை வரன்முறையாலறைதியென்னவருள்செய்வான்
முன்னமுறன்சேர் தானவருண் முரித் தடர்த்தான்விருத்திரனை

ன், றுன்னற்கரிய கொடியதிறலொருவனளவில் தவமாற்றிப்()
பொன்னிற்பொலிந்த நகர்முதலாம்புரங்கள்யாவும்பிடித்தான்.

கண்ணுயிரத்தோன் முதலாய கடவுளோர்பாற் கடலிண்டித்
தண்ணுர்துழவங் கமழ்திருத்தோட் டாமோதரன்பான் முறை
யிட்டார்,மண்ணோரடியாலளந்ததிருமார்பன்மகிழ்துவரமருளி
விண்ணோர்பெருமான் றனக்களவில்வீரங் கொடுத்துவிடை
கொடுத்தான். (உஎ)

மருந்திறுகரும்புலவர்பிரான்வரம்பெற்றெழுந்துவிருத்திரன்
போ, யிருந்துதவஞ்செய்யிடநாடியிண்டித்தடக்கையிடைச்சுட
ர்போல்,விரிந்தவயிரப் படையாற்கண்விழியாதிருந்த விருத்தி
ரனைக்,கரந்துசிரம்பா ரிடைவீழக் கடிந்தான்குருதி கடலேற. ()

ஆயகாலைப்பிரமகத்தி யாகண்டலனைச் சுற்றிடவும்
பேயினுழன்று தான்புரக்கும் பெருநாடிழந்து பீகியனு
யேயுமுறக்கமாகார மின்றியுலகத் தெண்ணிலாத்
தூயதலங்க டொறஞ்சென்று சுற்றித்திரிந்துந் தீர்விலதாய்.()

பொருப்பையிறகு தடிந்தவனோர் வருடம்பூவைவலஞ்செய்து
மருப்பமினுநீங்காமையினலடைந்தான்முன்செய்யருந்தவத்தா
ற்,றிருப்பவாரிசூடலெனுந் திருமாநகர்வாய்ச் சங்கமமா
மருப்பொன்னதியிற்குடைந்திலங்கை மருந்தைப்பின்ளுள்வழி
பட்டான். (௩0)

வேதகிரியைத்தினந்தினம்போய்வலஞ்செய்திலங்கைவிமலன்ற
ன்,பாதம்பரசிநூறமகம் வியாழப்புத்தேள் பணித்தருள

வோதம்வண்ண மாங்கெயற்றப் பிரமகத்தியொழிந்தியான்
போதற்கிடம்யாதெனக்கேட்பப்புகல்வான்புலவராருங்குரவன்
பூவிற்களாய்மின்னார்பாற் பூப்பாய்ப்புளனூட் பேணமாய்
மாவிற்றருக்களிடைப்பிசிறுய்வைகென்றகற்றிப்பின்னருந்தன்
னுவிற்பகர்வான் கருப்பமுறு நங்கைமார்கண் மதிபத்தி
னுவற்புதல்வற்பெறுமளவு மணைந்தாடவரை மருவிடுக. (௬௨)

தொட்டிலத்துக் குழிதூர்ந்துமேவத்தொடர்ந்துகுடாரத்தால்
வெட்டுந்திருமந்தனழைத்தோங்கிமென்மேல்வளர்கவெனவெவ
ர்க்கு,மிட்டமுறவிவ்வாறுபணித்திமையோர்தலைவனேடுஞ்செ
ன்று.சிட்டர்பரவும்வேதகிரி பணிந்துதெய்வப்புரஞ்சேர்ந்தான்

ஆதலாலிவ்வதரிவனத் தமலன்றனக்குத் தாதிக்கின்
வேதவோங்கற் றிருமகிமை யிவ்வாறென்று விரைகமழுந்
தாதார்தொடையிற் றிரத்துயம்மன் றனக்குமிகாரதமுனிவ
னேதிறனென்றுயர்க்தோர்க்குச்சுதமுனியீங் குணர்த்தினன்.

பதினோந்தாவது வேதகிரிமகிமைச் சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம் ௧௫-க்கு விருத்தம்.(எ௫.)

திருச்சிற்றம்பலம்.

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பதினொருவது

# பிரமாவுக்குபதேசித்த

# சருக்கம்.

---

மாதவவேத வியாசன் வழுத்தும்
வேதகிரித்திரு மேன்மை யெடுத்திண்
டோதினமோதிம வூர்தி தனக்குச்
சோதிமெய் யுண்மை தொகுத்த திரைப்பாம். (க)

உத்தமருக் குயர் சூதனுரைப்பான்
பத்திமையிற்பயில் பான்மையர்கட்கு
முத்தியளித்த பவாரியின் முன்னாள்
மெய்த்திருவேதன் விழுப்பொருள் பெற்றான். (உ)

விரித்ததை யோ துதி வேதியவென்று
வுரைத்திடுவான்முன் னுயர்ந்தவி தாதாத்
திருத்திகழ்கின்ற திலோத்தமை யென்னு
மருத்திகண்மின்னே வருந்தி யுமைத்தான். (ங)

காவிளம்பிறை கார்முக மொண்கண்
வாவுநதற்புரு வம்பசர் பைம்பொன்
றேவியன்ன வுருப்பொலி வாண்மேல்
மாவியனுன்முகன் மையலடைந்தான். (ச)

தன்றனிலாணவண் மீததயாவின்
ஞென்றியபோக முருற்ற நினைந்தா
மன்றல்செய் போதன் மயங்கினனென்றால்
வென்றதை யாவர்விலக்கிட-வல்லார். (ரு)

பங்கமில்சேண்மை பரும்புகழ் மேன்மை
பங்கமான முதற்பலயாவுந்
தங்கியவெத்தகை மைத்தவர் கட்கு
மங்கையாசையின் மான்குறு மன்றே. (சா)

மட்டவிழ் பங்கமன்னவன் மின்னைத்
தொட்டதிலுவன தொன்னிலைபாறச்
சிட்டனமைத்த சிருட்டிகள் வேறு
பட்டனதன்மை யுணர்ந்து பயந்தான். (எ)

இத்தனோருற்ற மிழைத்தது வேறே
ரெத்தனமாற்றிலு மிற்றில வீசன்
பத்தியினிக்குதல் பண்பெனவாயோன்
புத்திரன்வாணி புரத்தை யடைந்தான். (அ)

பூவனமாகிப புண்ணிய வைப்பிற்
பூவனமாவெனு மால்பொருள்ளான

பூவணமாவென வீழ்ந்து புகழ்ச்சம்
பூவணமாதன பூம்புனலாடி. (௯)

அஞ்சனவண்ண மிடற்றனைநூலா
றஞ்சனவண்ண மருச்சனை செய்தா
னஞ்சனவண்ணகை யாரலராலே
யஞ்சனவண்ண நிவேதனமாற்றி. (௧௦)

நலங்கொண் மனோவதி நன்னகர்மேலாம்
பலங்களு மிட்டொளிர் பன்மணியேறுங்
கலன்கண் மிலைந்து கரங்கள் குவித்து
வலங்கொ டிறைஞ்சி மகிழ்ந்துதுதிப்பான். (௧௧)

வேறு.

முப்புரமொருங்குசெந்தீ மூட்டிய நகையாய்போற்றித்
துப்புறழ்சடையாய்போற்றிச் சுடர்விடுஞ் சூலபோற்றிக்
கப்பிணர்வதரிமூலக் கறைமிடற் றமலபோற்றித்
தற்பரபரமானந்தச் சங்கமேச் சுரனேபோற்றி. (௧௨)

அரியநான்மறையுமோரா றங்கமுமுணர்ந்த சைவப்
பெரியவரிதையக்கஞ்சப் பீடிகையினிது வைகும்
பரிபுரப்பாதபோற்றிப் பராபரப்பொருளே போற்றித்
தரியலர்புரமூன் றட்ட சங்கமேச்சுரனே போற்றி. (௧௩)

ஆதியேபோற்றிமுக்க ணாரணவடிவ மின்னுள்
பாதியேபோற்றித்தெய்வப் பவாநிநாயகனே போற்றிச்
சோதியேபோற்றிவெற்றிச் சுடர்மழுப் படையாய்போற்றித்
தாதிவர்கொன்றைமாலைச் சங்கராபோற்றி யென்று. (௧௪)

மறைகளாலனந்தஞானி வழுத்தலும் வதரிமூலக்
கறைமிடற்றமலன்கோடி கதிரென வுதித்துமுன்று
னெறிகடவுண்டசெவ்வா யிருடியை யினியமுத்தி
யுறநிராதனைநோக்கி யருள்செய்வானுலகமுய்ய. (கரு)

அரிதெனவிளங்குபஞ்சாக் கரத்தினை யலரின்வைகும்
விரிமறைக்கிழவன்பாங்கு மேன்மையா லுபதேசத்தைப்
புரிதிரென் றருளியெம்மான் போதனைப் பார்த்துநீபோய்த்
தெரிதவர்தம்பாலுண்மை தெளிதியென் றருளிச்செய்தான். ()

மடலவிழ்கடிப்பூஞ்சேக்கை வானவன் றனக்கிவ் வண்ணங்
கடல்விடமயின்றோன்கூறி மறைதலுங் கலைமின்கோமான்
விடையமற் றிருந்தோர்பாங்கர் விழுமியவெழுத்தஞ்சுண்மை
யுட்டுரையுள்ளமொன்றி யுணர்ந்தன னெழுந்துசென்றான்.()

முன்னிலைமின்றனித்த முளரியான் முளரிநாபன்
றன்னிடைவந்துசெம்பொற் சலசநாளத்தி னுள்போ
யுன்னருமுழைகையைத்தேற வுகவுடைத் தெழுந்துதோன்றிப்
பொன்னலர்ப் பொகுட்டின்வைகிப் புவனங்கள் படைத்தான்
முன்போல். (கஅ)

விரிந்தமுக்குணத்தினின்ற முதற்குணவியற்கைத்தாகிப்
பரிந்தருணிறைந்தவேத பாரகன் பலவேறாகி
யிருந்திடு சிருட்டிமாறா தியற்றலுங்குசலநுட்பர்
தெரிந்தில வதனாற்சிந்தை தேரிலானெண்ணமிக்கான். (கக)

எல்லையில் சிருட்டியாதி யேனையகருமம் யாவு
நல்லவாய்ப்பல்கவேத நாயகிபாகம் வைகுந்

தொல்லரும் பவாநிகூடற் சோதிதன் கடைக்கணேக்க
மல்லது மேவறின்றென்று வாணவ நீங்கியுன்று. (உ0)

புண்ணியப் பொலிவாய்நின்ற தெக்கண வளைகைப்பூசி
நண்ணியங்கிரிது சோற்று நாயகனருள்பெற் றிந்த
வெண்ணருஞ் சிருட்டியாதி யியற்றுது மென்றுமீட்டுந்
தெண்டிறையவன்பவாநித் திருநகர் வந்துசேர்ந்தான். (உக)

மன்றலஞ் சுருதிவெற்பின் வைகினன் பின்னரந்தக்
குன்றினுக் கிரண்டதாய குமோசத்திற் றென்பால்வைகுந்
தென்றல்சூழ் வதரிக்காநிற் சிவபரஞ்சுடர்க்குத் தென்கீழ்ச்
சென்றனன் பிரமன்காயத் திரிசிலைத் தானந்தேடி. (உஉ)

வேறு.

சரசுதிகாயத் திரிதிருமலமாய்த் தழைத்தசாவித்திரியென்றும் விரைசெறிதெய்வத் தீர்த்தமோர் மூன்றின் விதியுழியாடிவெண்ணீறு, நிரைசெறி வெண்ணூான் மார்பினுநான்கு நிமல வாண் முகத்தினும்விளங்கப், பரசணிகரனைக் காலமோர்மூன்றும் பூசித்தான் பழுத்தமெய்யன்பால். (உங)

பன்னருங்காலம் வதரிகாவனத்திற் பகரருந்தவஞ்செய்தான்பின்னு, மன்னமென்னடையாள் பங்கனைவிருச்சி கத்திருத்திங்களிலவிருந், தன்னிகரில்லாப் புரணைத்தினத்துச் சகத்திரந்தாமரைமலரா,லன்னருஞ்சுருதி மந்திரநாவா லுச்சரித்தருச்சனைபுரிந்தான். (உச)

மறைகளாற்றுதித்தா னுட்டமோரெட்டும் வழிந்தொழுகானந்தக்கண்ணீர்த், துறைகளானனைந்தான்சோதியேசுருதித்தோ,

கையோர் பாகம்வீற் றிருக்கு, மிறைவனேயடியே னிழைத்தி
டென்றற்ற மனைத்தையும் பொறுத்தியென் றுரைத்துத், தறிபடும
ரம்போல் வீழ்தலுந்தயவாற் றரித்திலன் சங்கமமூர்த்தி. (௨௫)

இரங்கியம்மூலச் சயம்பினின்றெழுந்தா னிரவியோர் கோடி
போலெதிரே, காங்குவித்திரந்த கமலனைத்திருக்கைக் கமலவா
ண்மலரிற லிணைத்து, வரங்கொளுஞ்சிவபஞ் சாக்கரமூலமந்தி
ரந்தனையுபதேசித், தரங்கிளர்சூலப் படையினனருள்செய் தமல
மாலிலிங்கத்துட்புகுந்தான். (௨௬)

அஞ்செழுத்துண்மை யமலனுங்குணர்த்தப் பெற்றவனமலமா
ய்விளங்கு,நெஞ்சினனாகி மனேவதியடைந்து தன்னெருழினியம
த்தினின்றுன், பஞ்சபாதகங்க ளென்னுமிந்தனத்தைப் படுத்து
றன் பொடிசெயுமந்த, வெஞ்சலிலோரைந்தெழுத்தினதுண்
மையீசனேயுரைத்திடவேண்டும். (௨௭)

பூதிசாதனம்பூண் டகச்சுசியோராய்ப் பொருவருமோரிடத்தி
ருந்தங், காதரவொடுமைந்தெழுத்தினையறிந்துச் சரித்தருந்திரு
வுருவேற்றி, லோதருநூற்றெட் டாயிரம்பதினு யிரமுறையில
க்கமோர்கோடி, போதமேற்பெருக்காய்ப் பலந்தருமிந்தப்
புண்ணியத்தலத்துமேன்மையினுல். (௨௮)

ஞானநீறணிந்து கண்டிகைபூண்டு நலங்கொளைந்தெழுத்தை
புன்னோதி, மானதபூசை யாற்றினுமந்த மகாபலமுத்தியைக்
கொடுக்கு, மானதாலிந்த மானதபூசை யாற்றினேருமுனி
வராய்த், தானினிதிருத்தி நித்தமாய்ச்சிவன் முத்தராய்த் தலை
மைபெற்றிருப்பார். (௨௯)

இன்னதீரிந்த மானதபூசை யியற்றினோரெய்திய பலம்யாம் பன்னுதுங்கேணீ மன்னவவென்று பகருவான் கலிங்கதேசத் தின், முன்னொருநாளி லிலிங்கியென்போனு முதுவிருடாகபிய வனும், பொன்னவிர்கண்டி பூதிமேலாவல் பூண்டுளோர் புனைந்தணிந்திருப்பார். (௫௦)

சிரத்தினுங்காதுஞ்செழுந்திருக்களத்துந் திகழ்தருவாகினுநீண்ட கரத்தினுங்கண்டி வேண்டுவசிறிய பரியனகனிவொடும் வளைந்து, விரைச்செழும்பூதி தரித்தவராகி வியப்பொடு முறைகுவா ரொருநாண், மருச்செறிநந்தாவனத்திடையடைந்துவருவிலையாட்டயர்காலை. (௫௧)

புறவொடுபுறவுபோகமுற்றிடுங்காற் பொம்மெனத்தொனித்த சொற்கேளா, விறல்கெழுமிலிங்கி யாசியனாகிமென்னகைகோட்டலுந் தன்னை, யறிவறவிகழ்ந்தா னென்றடற்காத்தா லவண்விருடாகபி யடிப்ப, வுறுசினவிலிங்கி யுடனடித்தொருவர்க் கொருவர்கொன் றிறந்தனருழால். (௫௨)

இறந்தவர்கண்டி யணிந்துநீறிட்ட வியல்பினாற் கலிங்கர்கோன்மகன்பாற், பிறந்தனனொருவ னறிவொடும்பரா வதனெனப்பெயரொடு மமைச்ச, னுறந்திருமகனாய் வலிமுகனெனப்பே ரொடுமினிதொருவன்வந் துதித்தான், புரந்தொழுக்கண்டி பூதியின்சார்வாற் பூருவவுணர்வினரானார். (௫௩)

தெக்கணவளாக மகிமைபூருவத்திற் சிறப்பொடுங்கேட்டனாதனுற், பொக்கமிலன்பா லிருவரும்பவாபி புத்திலோயுடைந்து பொன்னிலங்கை, முக்கணாயகனை நெடுந்தினமிருந்து

முப்பொழுதினுந்தொழு திலைறஞ்சிச், செக்கர்வான்சடையா
னருளினாற்சிவன் முத்தராய்ச் சிவபதஞ்சேர்ந்தார். (௬௪)

கண்டிகைநீறு பூருவஞானங் கைவசஞ் செய்ததுமுத்தி
தொண்டலார் மதின்சூழ் பவானிமாதலந்தான் கொடுத்தது கே
ட்டியாவின்ன, முண்டொருகதைகேண் மன்னவவென்ன வுரை
செய்வா னவந்திதேசத்தி, லண்டொணாப்புலையர் குலத்தினிலு
தித்தோ னவன்பெயர் கொடியசங்கோசன். (௬௫)

தீயவெங்கொலைஞர் மரபினிலுதித்தோ னென்னினுந் திருவ
ளர்பவானி, நாயகன்மகிமை யாவர்களைவிற்ற வுணர்ந்தனனோ
நனி யறியோஞ், சேயலர்வதரி வனத்திடைவாழுஞ் சிவபரஞ்
சுடரையும் வேதத், தாயையும்பவானிச் சங்கமக்கரையுந் தனை
மருதுண் ணினைந் திருப்பான். (௬௬)

பொருந்துமிந்நிலையே யாங்கவன் றனக்கு மானதபூசையா
யத்தினமு, மிருந்ததாலொருநா ளிரவிடைவேந்த னெழின்ம
னைபுகுந்துவெங் கனவான், டருந்தனமுதலாம் பொருள்கவர்
ந்தகல்வா னங்குளதூதர்கண்டவனை, வருந்துறப்பிணித்தவ்
வாற்றினையரசன் மருங்குபோய் வணங்கினருரைத்தார். ()

அடுத்தனருரைத்தல் கேட்டலும்வேந்த னகங்கொதித் திரவி
ருங்கவனின், டெடுத்தவையனைத்துங் களைந்துமற்றவனை யிந்
நகரெயிற்புறங் கொடுபோய்ப், படுத்திரென்றுரைப்பக் கொ
ண்டுபோய்வாளாற் பதைத்திடவிசவுமிருதை, யெடுத்திருகண்
ணிர் சொரிந்திடப்பவானி யீசனேகாத்தியென் றிசைத்தான்.

ஓலமிட்டவனங் குரைத்தசொற்குழவி யொருங்கிட வீரங்குர
ல்கேட்ட, பாலருள்தாயார்பதறிவந்தென்னைப் பவாநிநாயகனுவ
ணர்ந்தெய்திச், சாலவங்கவன்முன் னஞ்சலென்றிடவுந் தடிந்தி
டவோச்சிய வடிவாண், மாலையாயவன்றன் கழுத்திடைவீழ
வானவர்மலர்மழைபொழிந்தார். (௩௯)

எனக்கினிதாய வடியனுமிவனென் றிசைத்துவேதாம்பிகைபா
கந், தனக்குவந்தருளுஞ் சங்கமலிங்கச் சயம்புநாயகன்மணி
விமான, மனக்கனிவமரர் கொடுவரப்பணித்தம் மதங்கனை மா
சொளித்தேற்றிச், சினக்கரியுரித்தோன் றிருவருள்புரியக் கொ
ண்டுபோய்ச சிவபுரஞ்சேர்த்தார். (௪0)

ஆகலாற்சிவனையருச்சனையன்பினுற்றுதலெவற்றினும்பெரிதா
மேதமின்றியற்று மானதபூசை யெவற்றினும் விழுமியதென்
ன, வேதமேயெடுத்து விளம்பிடுமதனால் விபூதிபஞ் சாக்கர
மென்னு, மூதரும்பொருளே பிறவியைமுறுக்கு மல்லதுவே
றிலை மொழியின். (௪௧)

இனையதொன்மகிமைத் தலமதாதலினு லெண்கணன் சிருட்டி
யீடேறப், புனையிழைபாகற் போற்றிநோற்றருளாற் புனிதப
ஞ்சாக்கரவுண்மை, யினிதுணர்ந்தனனென் றிந்திரத்தயம னித
ம்பெறாரதனிசைத்த, கனிதகுசாதை யிதுவெனக்குதன் சவு
னகன்மகிழ்ந்திட நவின்றான். (௪௨)

## பதினாறாவது பிரமாவுக்கு உபதேசித்த சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம் - பதினாறுக்கு விருத்தம். (அ௩௭)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பதினேழாவது

# பிங்கலை மோட்சச் சருக்கம்.

---

சேட்டினாந்திங்கட் குழவிவீற்றிருக்குந் திருமுடிச்சிவபராஞ்சு டர்பாற், பாட்டளிமுரலும் பங்கயப்புத்தேள் பரப்பொருளு ணர்ந்தவாறிதுமேற், பேட்டனமருளு மென்னடைத்துவர்வா ய்ப பிறைநுதனறைமலர்க்கூந்தல், வாட்டடங்கருங்கட் பிங்க லைமுத்தி மன்னியமுறைமையைப் பகர்வாம். (க)

வியந்தினிதாற்றுந் தவத்தினோர்கேட்ப மீளவுஞ்சூதமாமுனிவ னயந்தினிதிசைக்கும் வதரியம்பவாரி நகரினைநாகர்கோனகரு ஞ்சயந்தனையளிக்குஞ்சசிபுணர்தடந்தோட் சதமகனகருமால்பி ரமன், வயந்தருநகரும் வழுத்திடுமென்றுஞ் மற்றினியுரைக்குமா றெவனோ. (உ)

பாரதியமுத நதிதிரிபதாகை பன்மணிகொளித்திடும் பொன்னி வாரலையமுனை மாநதிபவாரி வளநதிமூன்றுமென் மதலைத் தாரணிமுதற்குத் தென்றிரிவேணி சங்கமமாகியதகவாற் சேரணியிமையோர் முனிவர்கள்யாருந் தென்பிரையாகையென் றுரைப்பார். (௩)

திரிவிதவேணி சங்கமந்திவாய்த் தெளிவுடன்யாவரேயெனினு மொருபெருந்தானஞ் செய்திடின்முன்னையூழ்வினை கழன்றிடுமீட்டும், புரிதருதான மதிற்சிவஞானம் பொருந்திடு மற்றுமோர் தானம், விரிதருமுணர்வாற் புரிந்திடினழியா வீட்டினிலிருத் திடுமன்றே. (ச)

அருந்ததிதோய்ந்து வசிட்டனையடைந்தா ளணியயிராணிவந் தாடிப், பெருந்திருவும்பர் பிரான்றனையடைந்தாள் பெறலருஞ் சையைதன்குமாரி,முருந்தெயிறுலோபா முத்திரைமூழ்கி முழங் குதண் கடலெலாங்குடித்து, வாந்தருதெய்வப் பொதியம்வீற் றிருந்த மாதவன்பத்தினியானள். (ரு)

இத்திருந்திவந் தீண்டிநாடோறு மிருந்தினிதாடி நீருடிப் புத்தமுதொழுகு மழலையஞ்செவ்வாய்ப் புண்ணியமறைக்கொ டிபங்கா, ரத்தனைமூன்று போதும்வந்திறைஞ்சி லடைந்திடும் புண்ணியப்பலனைச், சித்திரகுத்தரென்பவர்செங்கை தினஞ்ச லித்தெழுதவுமாட்டார். (சா)

முன்னைநாள்வருந்தி முயல்தவப்பயத்தான் முந்நதிசூழ்மதிட் பவாசிப், பொன்னகர்மரணங் கிடைத்திடுமன்றிப் பூருவபு ண்ணியமில்லோர்க், கந்நகர்மரணங் கிட்டொணாதன்றி யவ ணிருத்தாயினுமந்த, நன்னகரிடத்துக் கிடைக்கினுமுத்தி நணுகி டுமெனமறைநவிற்றும். (எ)

பெருகொளிபரப்பும் பன்மணிவரன்றிப் பிறங்கலைகறங்கிடும் பொன்னி,முருகலர்பவாசி சூழ்தரப்பொலிந்த முத்திகூர்தெ க்கண வளகைப், புரிகயிலாய மல்லதுவேறு புகல்வதென் புனி

தமாவத்தீ, ரொருகதைசயின்று முரைக்குதுங்கேண்மி னென்
றெடுத்துவப்பொடும்பகர்வான். (அ)

சங்கலையெறிந்து தோணியைத்தகர்க்குந் தமரவராருதியெனுமீல
ப், பைங்கலையுடுத்த பார்மகண்முகமாம்பவாநியம் பதியிடை
யுதித்த, வங்கலேவிரம்பும் வெண்ணிலாமதிய மனையசம்பூரண
வதனப், பிங்கலையென்னு மொருமகள்கணிகைப் பேதையர்
குலத்தினி லுதித்தாள். (கூ)

பங்கயத்தவிசி னிருந்தநான்முகத்தோன் பார்த்தபோழகெலாம்
வாரிச, செங்கையாற்றிரட்டி மாக்களைமயக்கத் திருத்தியபடி
வமோவன்றி, பைங்கணைகிழவன் சரங்களாற்றுளைபட்டா
டவராவிசோர்ந்துருகத், தங்கியகோல மோகினிகொல்லோ
வெனப்பொலிசௌந்தரப்படிவாள். (கo)

மானினைமருட்டி வனத்திடையோட்டி வாளினையுறையிடை
டெத்திப், பாலலம்போதை நெய்தனுண்மலரைப் பயத்தி
டையிருத்தியம் புயத்தைத், தானனிமுனிந்து குழைகண்மே
ற்றுவிச் சஞ்சரீகங்களைத் தழைந்த, கானிடைத்துரத்திக் கடு
வமுதிருந்த கடலெனப்பொலிதடங்கண்ணாள். (கக)

வேறு.

விரிதிரையுகள்திரி வேணிசங்கம
புரிதனில்வதரியம் புனிதமேல்வாழ்
சுருதிநாயகியிட சோதிபாதத்தைக்
கருதிலாமனமெனக் கருத்தகூந்தலாள். (கஉ)

ஈட்டமுங் காமுக ரேனையுக்கமுங்
காட்டிய வேவலைக் கடக்கிலாமையுந்
தீட்டிய சாதனச் செம்பொன்ரேலையைப்
பூட்டிய குழைச்செவி பொலிந்தகோலத்தாள். (க௩)

முகமுழுமதியென வயிர்த்து முத்தமாய்த்
தகவொடுவிமானமே சார்ந்து கோணத்தி
னிகலறவிருந்துநோக் கிடுதலாமெனப்
பகர்தருநாசிகா பரணப்பான்மையாள். (கச)

கன்னலை முனிந்துமுன் கடைப்படாநின்ற
தின்னமுதெனவிகழ்ந் தெள்ளிநீத்திசைக்
கின்னரவீணையைக் கெருவபங்கஞ்செய்
தன்னநமழலைத்தே னொழுகுஞ்சொல்லினாள். (க௫)

இனக்கதிர் மணியிழை யிலங்குமார்பெனுங்
கனக்கடுங் கூடத்திற் கனிந்தறஞ்செய்யா
மனக்கொடும் புல்லியோர் வருந்தியீட்டிய
தனக்கவளங்கொளுந் தனக்களிற்றினள். (க௬)

இழுக்கிய கலவையு மினியசாந்தமு
மெழுக்கிய குங்கும மிலங்குபூண்முலை
முழுக்கிய மதசல முரிந்து தாரையா
யொழுக்கிய தாமெனு முரோமபந்தியாள். (கஎ)

கதிமறுமைக்குமிம் மைக்குங் காப்பற
மதுவலாற் சதிரிலை யாதலாலதை

மதியினி லயர்த்துள மாக்கடம்பெருந்
திதியெனத் தேய்ந்திடுஞ் சிறுமருங்குலாள். (கஅ)

காந்தளஞ் செங்கையாள் கதலிக் கந்தேனப்
பூந்துகில்சூழ்தரும் பொற்குறங்கினு
ளேந்திளங் கொங்கையா ளினியகாமநூ
லாய்ந்தவை வரம்புகண் டறிந்தபண்பினள். (க௯)

மாசறப்பரதநூ லனைத்துமாண்புற
வாசையிற் கற்றுநுண் ணறிவின்பேம்படும்
பாசிழை மடக்கொடி பவானிகூ டலெம்
மீசனைமுப் பொழு தினுமிறைஞ்சுவாள். (உ0)

காலையிற் காவிரி தோய்ந்து கண்டிகை
கோலவெண் ணீறணிந் திறைவன்கோயிலைச்
சாலநன் கினில்வலஞ் சார்ந்துசன்னிதிப்
பாலினின் றருநடம் பயின்றுபோற்றுவாள். (உக)

இன்புற விந்நெறி யொழுகியெம்பிரா
னன்பருக் கறனெறி யாற்றினீட்டிய
பொன்பொரு ளியாதெனும் போற்றியீந்திடு
மன்புளவகத்தினு ளழகின் மிக்குளாள். (உஉ)

சிந்தையின் புறத்தினந் தினமுநூறுபொன்
றந்தவர் தமக்கருந் தனங்கொடுத்துமேற்
செந்துவரிதழுறும் தேறலூட்டிவேட்
கந்தமெல்லிரதிபோற் கலவியாற்றுவாள். (உங)

மன்னவராயினும் வழங்குநூறதாம்
பொன்னிலோர் பொன்னறிற் பொருந்துகிற்றிலாள்
பின்னவரேனுமப் பெற்றியீந்திடி
னன்னவளரம்பையி னணைந்துகூடுவாள். (உச)

மாலையுங் காலையும் வதரிநாயக
னாலயம் புகும்பொழு தலங்கன்மன்றலுஞ்
சேலையின் வாடையுந் தேசுங்கண்டுபூ
மேலுறும் வண்டென விடர்கள் சுற்றுவார். (உரு)

முன்புள தனந்தின முறையிற்கொண்டுபோ
யன்புட னளித்தளித் தற்றகாலையிற்
பின்பவட் கீந்திடப் பிததமின்மையா
லென்புரி வேமென வேங்குவார்சிலர். (உசா)

பைந்தொடிக் களித்திடப் பண்டமின்றிய
மைந்தரெவ் வனமும்வெவ் வறுமையுந்தெற
விந்தெனும் பிங்கலை யென்னுங்காமரு
சுந்தரி யுருவுனிச் சோர்கின்றார்சிலர். (உஎ)

சுத்திநாற் றிசைதொறுஞ் சுழன்றுநொந்தன
பித்தமாங் கவட்கருள் பித்துளோர்சிலர்
வித்தநூ றுபொன் னவட்குநேர்ந்திடப்
பத்தியாற் றெய்வதம் பரவுவார்சிலர். (உஅ)

அதிகமுங் குறைதலு மடைந்துளோர்தரு
நிதியமுங் கைக்கொள நினைவிலாளவண்

மதிதனிற் குறித்ததே வாங்கியாங்கவற்
பதியென முயங்கிய கற்பின்பான்மையாள். (உ௯)

வேறு.

இன்னநீர்மையி னொழுகிய விஙங்கிளியன்னா
டன்னெழிற்குண முதலியவனைத்தையுந் தான்கண்
டங்கதக்கேரோர் வணிகர்தங் காளையங்கவன்பேர்
துன்னருந்திறல் வீரகினூன் சுனந்தனனென்பான். (௩0)

கைத்தரம்பெரி திலன்சில கைப்பொருள் கொண்டாங்
கொத்ததன்குல வாணிபமுஞற்றுவோ னொருநாண்
முத்தவாணகைப் பிங்கலைமாலைவாய் முக்க
ணத்தர்கோயிலுக் கிரதிபோ லடைந்திடக் கண்டான். (௩௧)

முன்னையூழ்வினைத் தொடர்புற மூரிவிற்காமன்
கொன்னெடுங்கணை துறத்தலும் பெருமயல்கூர்ந்து
தன்னிடத்துள தனிப்பொருள் தன்னிலீனைந்து
பொன்னிலாமையா லுள்ளனகொண்டுபின் போனான். (௩உ)

அடுத்தனன் வரக்காண்டலு நின்றவாயிழைகைக்
கொடுத்தனன்குறை நிரப்பிநங் கோலமெல்லமழி
யிடத்துவாவென வியம்பினளேகின னிரவி
மடுத்தசெங்கரஞ் சுருக்கிமேற்றிசைக்கடன் மறைந்தான். (௩௩)

வருத்தமுற்றிடு மனத்தினன் மனையிடைப் போகா
னருத்தமின்றிய குறையுமே லனங்கவேள்பகழி

அறத்துசோபமு மாகிபசுவந்தன னென்போன்
கருத்துவாடியங் கிருந்தபோற் கூம்பினகமலம். (௫௪)

பூவைமார்தமிற் கற்பிலார் புருடனைக்காணிற்
காவியங்கணுன் மருட்டிவாண் முறுவல்காட்டுதல்போ
லாவியன்னதன் பதியின்றிமாலைகண் டன்பாய்
வாவிவாய்நகை புரிந்தன கயிரவ மலர்கள். (௫௫)

கன்னலஞ்சிலை குழைத்துவெங் கடிமலர்க்கணைக
டுன்னிவேள்விடச் சோர்வுறுஞ் சனந்தனன் றனக்குப்
பின்னல்வார்சடைப் பிங்கலை கொடுத்திடும் விரக
வன்னிருபமாய்க் குணகடலுதித்தது மதியம். (௫௬)

இந்துவாணிலா வெறிசுடர் தெறுவதையன்றி
மந்தமாருத மலர்ச்சரந் துளைத்திடும் புழையாய்க்
குந்தமாங்கெனக் குறுகலுங் குலைந்திரவெல்லா
மந்தண்வார்குழ லணங்கினை நினைந்துநைந்தனனால். (௫௭)

உறங்கிடாதிர வுகத்தினைக் கடப்பதெவ்வாறென்
றறங்கொடேசிக னழுங்கல்கண் டகற்றுவானுன்னி
நிறங்கொள்கீழ்த்திசை நெடுந்திரை முழங்கியலைக்
கறங்குதண்கடன் முகட்டினி லுதித்தனன்கதிரோன். (௫௮)

படங்கொள்பையரா வல்குலாள் பாங்குறக்குறைப்பொன்
கடன்கள்கேட்பன விடனெலாங் கேட்டலுங்கடல்வாய்
விடங்கொள்கண்டன தருட்டிருச் சோதனைவிலக்கான்
முடங்கியெங்சனுங் கிட்டிலவிதிவலி முபக்கால், (௫௯)

தூமவார்குழற் ரேகைமேற் சுரந்திடுமோகக்
காமநோய்தலைக் கேறலுங் கடக்கலன்றி
வாமமேகலை மறைக்கொடி பங்கில்வீற் றிருந்த
சோமசேகரன் சன்னிதிவாய்தலிற் றொக்கான். (சo)

காரிலங்கிய கண்டனைப் பணிந்திரு கண்கள்
தாரைகான் றிடச் சாற்றுவான் றமியனேனிறந்தாற்
பேரமேல்வரும் பிறப்பினுக்காயினு மவளென்
பாரிபாய்வரப் பரிந்தருள் வரமெனப்பணிந்தான். (சக)

அங்கணுயகற் பணிந்துபோ யவிர்திரிவேணி
சங்கமந்தனை யம்முறைவேண்டினன் ருழ்ந்து
செங்கைகூப்பியின் றன்னவட் சேருமாதரவால்
வெங்கணுன்விரைந் திறங்கினன் வீழ்ந்துயிர்விடுத்தான். (சஉ)

இன்னவாகியங் கவன்செய்த நீர்மையை யெழின்மின்
னன்னமேரிடை யணங்கனுள் கேட்டறிந் தந்தோ
வென்னிமித்தமா யெற்புணர்காதலா லெறிநீர்ப்
பொன்னியிற்புகுந் திறந்ததென் பொருட்டினலன்றே. (சஙு)

எடுத்தயாக்கையைத் தன்னுடுமியைவதற் கெண்ணி
விடுத்ததன்மையான் றனிவையு மன்பையும் வியந்து
படுத்தநெஞ்சினுள் மறைக்கொடி பாகம்வீற் றிருந்த
கடுத்தரும்பிய கண்டனைநினைந்தகங் கனிந்தாள். (சச)

அறத்தினுக்குமெய் யந்தணர்தமக்குமெய் யன்பாற்
றிறத்தினீட்டிய தனமெலாஞ் சிறப்புறநல்கி

மறைக்கொடிக்கொரு பாகனை வலஞ்செய்து மூன்று
துறைத்திருக்கரை யெய்தினுள் துகளறுமனத்தாள். (௪௫)

மறக்கொணுதவென் மயலினல்வணிகர்தம் பெருமா
னிறக்குநீர்மைய ஞதலாலினிவரு பிறப்பிற்
றரைக்கணுங்கவன் றங்கையாய்வந்தொரு தமியேன்
பிறக்கவேண்டுமென் றிறங்கினள் பிங்கலையென்பாள். (௪௬)

வாக்குமெய்யுள மொருப்படு வளமையோராவி
நீக்கவாங்கவர் நிலையினை மலர்மகனெடுத்துத்
தாக்கியப்பெருந் தூநதிமகிமையும் பிறப்பை
மாய்க்குமங்கர் மகிமையும் பார்த்தனன் மதித்தான். (௪௭)

மனத்திணங்கவ ரெண்ணியவண்ணமே மலரோன்
புனத்துவாழ்தரும் புறவுருப்பொலிந்திட வாக்கிக்
கனத்தசேவலும் பெடையுமாய்க் கதிதருமிலிங்கை
வனத்தில்வந்தினி துதித்தனர் முன்னையவரத்தால். (௪௮)

பொய்கைவாயினும் பூம்பொழின்மருங்கினும் பொன்னுற்
செய்கொளுங்கதிர் மேடைகண்மீதினுஞ் சென்று
வைகிமென்குர லெழுப்பியுண்மயலொடு மருவி
மெய்கலந்தொன்று யிருந்தனநெடுந்தினம்விருப்பால். (௪௯)

இன்னவாறவண் பிரிவுறுக்கபோத மோரிரண்டு
மங்கர்க்கணு ளணித்துற வாருயிர்விடுத்துப்
பொன்னிலங்கோவிர் விமானத்திற்புகுந்துபோய்க்கைலை
மன்னிநாயகன் கணங்களின் வைகினவன்றே. (௫0)

மிடைந்தகாதலான் வன்மையினுவியை விடுத்தோ
ரடைந்தபேறிவை யாதாலாலந்நதி தனனுந்
தடந்தழீஇமதிற் றலத்திருபகிமையுந் தகவாற்
படர்ந்த வார்சடைப் பகவனேபகர்ந்திடப் படுமால். (ருக)

கடிகமழ்ந்திடு தெக்கணவளநகையே கடல்சூழ்
படியினிற்சிவ புரமலால்வேறிலைப் பகரின்
மடிமைகூர்பிர மகத்திகோ வதமுதற் பொல்லாக்
கொடியபாவமு மந்நகர் குமைத்திடுமென்றே. (ருஉ)

ஆயதன்மைசால் மகிமையிற்பொலிந்தவந் நகர்வாய்க்
காயும்வென்றிவேற் கலிங்கதேசாதிப னொருவன்
றூயனும்பெயர் சுதாமனென் றுள்ளவன் சுதனு
மேயதிண்டிறல் விசுவதாமன்புகழ் மிக்கோன். (ருஙு)

ஆங்கவன்றனி நகரிடையரசுசெய் நாளிற்
றீங்கில்வேட்டகஞ் செயகுவான் றென்றிசைநோக்கித்
தேங்குநாண்மலர்ப் புறவமுந்திரைகெழு மருவி
தூங்குகுன்றமுந் தினந்தோறுந் தருவிவந்தனனால். (ருச)

கனத்ததானையான் கவனவாம்பரிமிசைக்கடவி
யினத்தளோரொடுஞ் சிலதினஞ்சுரங்கணீத்திண்டிச்
சினத்தைவென்றவளோர் சேர்தருதெக்கண வதரி
வனத்தையுற்றன னுங்கடர் சூழவள்வருவான். (ருரு)

சின்றவாங்கொரு கோவினைமறையென நினைந்து
தன்றுவெஞ்சிலை குழைத்தொரு சுடுகணை துறந்து

கொன்றனன்விரைந் தேகினன்பார்த்தனன் கொதித்தா
னன்றுசெய்தன னென்றுளநடுங்கினன் சோர்ந்தான். (௫௬)

வெந்துயர்க்கடல் விழுந்தனன் கண்கணீர்விடுத்து
நொந்துலப்பிலா நோயுளந்தென்செய்கே னென்னச்
சிந்தைநைந்துளோன் றன்னெதிர்க்கண்ணுவன்சிவன்போல்
வந்துதோன்றினன் காண்டலுமலரடி வீழ்ந்தான். (௫௭)

சிட்டனுக்கவ ணிகழ்ந்ததைச் செப்பினனடியேன்
கெட்டொழிந்திடா துய்நெறிகிளர்த்துதி யென்ன
மட்டலர்ந்ததார் மன்னவனிரங்கலு மறையோ
னுட்டயாவொடு முய்யுமாறொருமொழி பகர்வான். (௫௮)

வேறு.

மாயப்பிறவிக் கொருமருந்தாம் வதரிவனத்துச் சிவவடிவாங்
காயத்திரிமா நதிமூழ்கிக் கருதுங்காயத் திரிசிலைக்க
ணேயத்தொடுமாங் கிருந்தைந்து மலவெழுத்தையாயிரப்பத்
தாயதாகவுருவேற்றி லடுகோவத்தி யறுமென்றான். (௫௯)

அவ்வாறுணர்த்து மருந்தவனை வணங்கியரச னருளொறியாங்
செவ்வாறதனைக் கடைப்பிடித்துத் திறம்பாதாற்றித்தீதகற்றி
வெவ்வாயுலையி லுருகியசெம் பொன்போல்விளங்கி மெய்யன்
பான், மைவாள்கண்டன் சிவகரத்தின் மல்கும்பணிகள் பல
செய்தான். (௬௦)

சென்றாங்குவதிந்துசிவ லிலிங்கப்பதிட்டை செய்துமறை
யின்றுயகற்குத்திருவிழா வியப்பாநடத்தி விடைகொண்டு

தன்னுடனடைந்துமேலாய தருமமியற்றித் தகைசான்ற [னே
பொன்னுயகன்போற் றரியசிவ புரத்தை யடைந்தான்புரவல
ஆதலாலிப்பவாநிபுரி யருமையெம்ம னோர்களெடுத்
தோதற்கெளிதன் றுயர்தவத்தி னுண்மையடைந்தீரினையகதை
தீதிலாதநாரதனிங் கிரத்துய்மனுக்குத் தெருட்டினதென்
றேதமகன்றோர் களிசிறப்பச் சூதமுனிவனிசைத்திட்டான். ()

## பதினேழாவது பிங்கலை மோட்சச் சருக்கமுற்றியது.

ஆகச்சருக்கம் பதினேழுக்கு விருத்தம். (அஎகூ)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பதினெட்டாவது

# சிவார்ச்சனைச்சருக்கம்.



பிங்கலை கதிபுகும் பெற்றியீதினி
மங்கல முனிவர்கள் வதரிகாவனத்
தெங்க ணாயகன்றனை யெய்தினான்மறை
யங்கவ ரருச்சனை யாற்றல்சாற்றுவாம். (க)

மேதகு தவத்துளோர் வியப்பச்சூதனு
மாதவன் வதரிகா வனத்துமேன்மையை
யோதலுங் கேட்டுள முருகிக்கைமலர்
மூதருந் தவர்சடை முடியிற்கூப்பினார். (உ)

ஐயவெம் பொருட்டிவ ணருளினீண்டியா
முய்யுமா றுணர்த்தினை யொப்பிலாயெனத்
தெய்வமா முனிக்கருஞ் சிறப்பளித்தபின்
மெய்யர்தென் னளகையை மேவற்கெண்ணினார். (ங)

மருத்துறு நைமிசா ரணியவைப்பினின்
றருத்திசால் சவுனக ராதியந்தணர்

கருத்துவந் தெழுந்துதென் றிசையிற்கண்ணுறு
திருத்தகு தலம்பல தெரிசித்தெய்தினர். (௪)

மயில்பயி னறுமலர் வனமும்வான்றொடு
புயல்படி சயிலமும் புனிதத்தீர்த்தமு
மியல்புடன் கடந்துநீத் தெய்தித்தெக்கண
கயிலையாம் வதரியங் கானநண்ணினர். (௫)

நாடினர் சங்கம நதியைநண்ணியங்
காடினர் நீறணிந் தங்கையுச்சியிற்
சூடினர் சாமநற் சுருதியன்பினாற்
பாடினர் கோபுரம் பணிந்துபுக்கினர். (௬)

வேதனாயகியொரு பாகமேவிய
வாதியை வதரிவா யனாதியாயுறுஞ்
சோதியையாகமச் சுருதிநூன்முறை
நீதரப்பூசனை திருத்தினாரரோ. (௭)

பண்கொளுஞ் சுருதியாற் பரவியானந்தக்
கண்கணீ ருகுத்தனர் கருணையங்கய
லொண்கனாள் பாகனை யுலகளந்துளோ
னெண்கனான் காண்பரு மிறையைவாழ்த்தினார். (௮)

பிங்கலன்பூசனை பெரிதுவந்தினி
தங்கவன் பேர்புனை யமலபோற்றிமெய்
தங்கியபராசரன் றவமுவந்தருள்
சங்கமசேத்திரத் தலைவபோற்றியே. (௯)

மற்றைவாளவுணரை மடிக்கவீரிரு
துற்கையர்தமைத்தருஞ் சோதிபோற்றியவ்
வக்கிரற்கடிந்தவன் வரங்கள்வேட்டதை
நற்கருணையினருள் நம்பபோற்றியே. (கo)

பண்ணவ னன்பினாற் பதிட்டைசெய்திடுந்
தண்ணமுதருஞ்சிவ சயம்பிற்றோன்றியங்
கெண்ணரும் வரந்தரு மீசபோற்றிமுக்
கண்ணநின் றிருவடிக் கமலம்போற்றியே. (கக)

மாலுதா னற்குநன் மகிமைதந்தருள்
வாலவாண் மதிச்சடை வள்ளல்போற்றிமுன்
சாலவெஞ் சாபத்தைத் தருமசன்மனுஞ்
சீலனுக் ககற்றிய தேவபோற்றியே. (கஉ)

தந்துவர்த்தனனெனுந் தலைவனன்பினால்
வந்தருச்சனைசெய மகிழ்ந்துமாண்புறு
மைந்தனைத்தந்தருள் வழங்குநான்மறைச்
சுந்தரிபங்குறை சோதிபோற்றியே. (கந)

மருத்தனைமுனிந்தவன் வலியபேரினைத்
தரித்தருங் கதிதருந் தலைவபோற்றிமுன்
கருத்துவந் தாழியோன் கண்டதீர்த்தங்கட்
கருத்தியின் வரந்தரு மமலபோற்றியே. (கச)

பண்டுகாயத்திரிப் படிவமாயுருக்
கொண்டுவந் தடைந்துளோர் குறையைநீக்கியோங்

கண்டரும் தொழவுறை யமலபோற்றிமென்
றண்டலிர் வதரிவாழ் தலைவபோற்றியே. (கரு)

மாதவத்தொருப்படு வியாசன்வந்தருட்
போதநான்மறைகளை வகுத்துப்பூவிடைச்
சாதகர்க்களித்திடத் தயங்கிவைகிய
வேதவெற்புறைதரு விமலபோற்றியே. (கசு)

பாட்டளி துதைந்திசை பாடுஞ்செவ்விதட்
டோட்டல ரம்புயத் தோன்றற் குய்நெறி
காட்டியவஞ்செழுத் துண்மைகாகிடை
நாட்டியதிருவரு ணம்பபோற்றியே. (கஎ)

கொங்கலர் கருங்குழற் குமுதச்செய்யவாய்த்
திங்கள்வெண்பிறைநுதற் சிறியநுண்ணிடைப்
பிங்கலைக் கருள்புரி பெருமபோற்றிசீர்
தங்கிய மறைக்கொடி தலைவபோற்றியே. (கஅ)

ஈசனின் றிருவடி போற்றியெம்மனோர்
பூசைகொண்டருளிய புனிதபோற்றிமுன்
மாசகல் சூதனின் மகிமைநங்களுக்
கேசறச் சொலத்தரு மிறைவபோற்றியே. (ககூ)

இம்முறை யிறைவனை யிரங்குமன்பினல்
மும்மலங் கழுவிய முனிவர் போற்றவு
மைம்மலர்க் கந்தர வதரிநாயகன்
மம்மர்தீர் பேரருள் வழங்கினனரோ. (உ0)

இறையருள் பெற்றன ரின்பமுற்றனர்
மறையுமை கோன்விடை வழங்கவுண்மைநூ
லறைதரு சவுனகராதி மாதவர்
நறுமலர் நைமிசாரணிய நண்ணினர். (உக)

வேறு.

வாழியந்தணர் வானவரானிரை
வாழ்வையக மாதவரன்பர்கள்
வாழிதென்னள கேசன் மலர்க்கழல்
வாழியாரண வல்லிபொற் றாள்களே. (உஉ)

## பதினெட்டாவது சிவார்ச்சனைச் சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம் கஅ-க்கு விருத்தம் (கூ0க)

## பவாநிகூடற்புராணம்




திருச்சிற்றம்பலம்.